# பரமன் அருள்

எழுதியவர்:

நெ. சி. தெய்வசிகாமணி

சித்திரம்:

ரெஸாக்



தமிழ் எழுத்தாளர் கூட்டுறவுச்
சங்கம் லிமிடெட் X-417
8, சின்னரெட்டித் தெரு,
எழும்பூர் :: சென்னை-8

# பதிப்புரை

எழுத்தாளர்களின் நன்மைக்காக எழுத்தாளர்களின் சொந்த முயற்சியால் எழுத்தாளர்களே நடத்தி வருவது **தமிழ் எழுத்தாளர் கூட்டுறவுச் சங்கம்**. இதுவரைக்கும் இருபத்திஎட்டு புத்தகங்கள் வெளியாயின. இது இருபத்திஒன்பதாவது புத்தகம். **தமிழ் உறவு** என்ற சுருக்கமான பெயரைப் பெற்ற இக் கூட்டுறவுச் சங்கத்தின் வெளியீடுகளைப் பல நிறுவனங்களும் தமிழ் மக்களும் ஆதரித்து நலம் செய்வதால் மேலும் பல நூல்களை வெளியிடவேண்டும் என்ற ஊக்கம் எங்களுக்கு உண்டாகியிருக்கிறது. நல்ல புத்தகம், பயனுள்ள நூல் என்று யாவரும் பாராட்டும் சிறப்பைத் **தமிழுறவு நூல்கள்** பெறவேண்டும் என்பது எங்கள் அவா. இந்தச் சங்கம் பெரிய வெளியீட்டு நிலையங்களைப்போல விளம்பரம், பிரசாரம் முதலிய துறைகளில் பணம் செலவழித்து விற்பனையை மிகுதிப்படுத்திக்கொள்ளும் நிலையில் இல்லை. எழுத்தாளர்களின் சொந்த முயற்சி, தரமான வெளியீடுகள் என்ற இரண்டையே எங்கள் தகுதியாகக் கொண்டு புத்தகம் வெளியிடத் தொடங்கியிருக்கிறோம். மக்களின்

ஆதரவு மிகுதியாக ஆக, எங்கள் முயற்சி விரிந்து பரந்து யாவருக்கும் நலந்தரும் என்பதில் ஐயம் இல்லை.

ஒரு பதிப்புக்கு இரண்டாயிரம் பிரதிகள் வெளியிட்டு அவற்றை ஓர் ஆண்டுக்குள் விற்றுவிட வேண்டுமென்பது எங்கள் அவா. இது நிறைவேற முடியாத பேராசை அன்று. நூல் நிலையங்களும் கல்வி நிலையங்களும் பஞ்சாயத்து யூனியன்களும் இந்த வெளியீடுகளை வாங்கி ஆதரித்தால் இந்த அவா எளிதில் நிறைவேறும். கூட்டுறவுத் துறையினரும் அரசாங்கமும் எங்களுக்கு இன்னும் மிகுதியான ஆதரவைத் தருவார்கள் என்று எதிர்பார்க்கிறோம்.

எங்கள் முயற்சியை ஆதரிக்கும் யாவருக்கும் எங்கள் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

சென்னை-8
28—7—66

**தமிழ் எழுத்தாளர் கூட்டுறவுச் சங்கத்தினர்**

# நவீனம் பிறந்த கதை

சிலர் வருடத்திற்குப் பத்து நாவல்கள் கூட எழுதுகிருர்களாம். எனக்கு அவர்களைப் பார்த்தால் பொருமையாகக் கூட இருக்கிறது. என்னுல் வருடத்திற்கு ஒரு நவீனம்கூட எழுத முடிவதில்லை. பத்து வருடத்திற்கு ஒரு நவீனம் வீதம் தான் எழுதுகிறேன்.

1951-ல் 'பளிங்கு மண்டபம்' என்ற நவீனத்தை எழுதினேன். அதற்குப் பிறகு 1961-ல் இந்த நவீனத்தை எழுதினேன்.

நவீனம் எழுதுவதென்ருல் கதாபாத்திரங்களுக்குத்தான் முக்கியத்துவம் கொடுக்கவேண்டும். நல்ல உயிருள்ள கதாபாத்திரமாகத் தேடிக் கண்டுபிடித்து நவீனத்தில் புகுத்திஞல் நவீனம் நீண்டகாலம் நிலைத்திருக்குமென்று பல அனுபவசாலிகள் கூறுகிருர்கள். நான் முக்கிய கதாபாத்திரங்களுக்கு எங்கேயும் தேடி அலைவதில்லை. என்னையே என்னுள் குடிகொண்டிருக்கும் சில குணநலன்களையே வைத்துக் கொண்டு நவீனங்களைப் புனைந்து விடுவேன். அம்மாதிரி எழுந்தவன்தான் பளிங்கு மண்டபத்தில் வரும் கதாநாயகன் மாதவன்.

மாதவன் உழைப்பிலே ஆர்வம் மிக்கவன், தன்னம்பிக்கை உள்ளவன். இம்மாதிரி இருக்கவேண்டும் என்று அடிக்கடி நான் நினைப்பதுண்டு. அந்த நினைவுகளையெல்லாம் ஒன்று திரட்டித்தான் மாதவனைச் சிருஷ்டித்தேன். இந்த நவீனத்தில் வரும் பரமன் கொஞ்சம் துணிகரமானவன். தவறு எங்கு நடந்தாலும் துணிவுடன் கேட்பான். அநீதிக்கு ஒரு போதும் தலைவணங்கமாட்டான்.

நான் எப்படி இருக்க வேண்டுமென்று நினைக்கிறேனே அம்மாதிரி என்னுல் இருக்க முடிவதில்லை. நான் எப்படி

இருக்கவேண்டுமென்று நினைத்தேனே அம்மாதிரி என் கதாநாயகர்கள் இருக்கிறார்கள். அவர்களைக் கண்டாவது நான் என் கொள்கைகளில பிறழாமல் இருப்பேனாக.

நவீனம் என்றால் கதாபாத்திரங்கள் எவ்வளவு முக்கியமோ அதைப்போல் கதை நடக்கும் இடமும் முக்கியம் பெறுகிறது. இந்த நவீனம் பெரும்பாலும் கிளியனூர் என்ற கிராமததில் நடைபெறுவதாக எழுதியுள்ளேன். கிளியனூர் என்ற பெயர் கொண்ட ஊரில் வசிக்கும் அன்பர்கள் தங்கள் ஊரைப் பற்றியும், தங்கள் ஊரில் உள்ள நபர்களைப் பற்றியும் எழுதப்பட்டிருப்பதாக எண்ணி ஏமாறவேண்டாம் என்று முன்கூட்டியே எச்சரித்து விடுகிறேன்.

நான் சிறு வயதில் என் உறவினர் ஒருவர் இருக்கும் ஒரு சிறு கிராமத்திற்குச் சென்றிருக்கிறேன். அந்தக் கிராமததின் பெயர் மங்காவரம் என்பது. அழகிய மாந்தோட்டங்களும் இயற்கைக் காட்சிகளும் கண் கொள்ளாக் காட்சியாக இருக்கும். சிறுவயதில் பதிந்திருந்த அந்தக் கிராமத்தின் பசுமையான நினைவு என் நெஞ்சை விட்டு நீங்கவில்லை. அந்தக் கிராமத்தைத்தான் அப்படியே என் நவீனத்தில் படம் பிடித்துக் காட்டியுள்ளேன். இதில் ஒரு பெரிய விசேஷம என்னவென்றால், இந்த நவீனத்தை எழுதிய பிறகு நான் சமீபத்தில் அந்தக் கிராமத்திற்குச் சென்றிருந்தேன். முன்பு பார்த்த கிராமியச் சூழ்நிலை அறவே போய்விட்டது. கிளி கொஞ்சிக் கொண்டிருந்த ஊரில் நெல் மிஷின் சப்தமும், பம்புசெட் சப்தமும் ஓங்காரமிட்டுக்கொண்டிருந்தன. கிட்டத்தட்ட அரைப் பட்டண நிலையில் இருந்தது. அந்தக் கிராமம் பட்டணமாக மாறியதில் அவர்களை விட நானும் மகிழ்கிறேன். ஆனால், சிறு வயதில் என் நெஞ்சில் ஊறிய அந்த அழகைத் தேடித் தேடி ஏமாந்தேன். பழங் காலச்சின்னங்களுக்கு வேலியிட்டுப் பாதுகாப்பதைப்போல் சில கிராமங்களைப் பட்டணத்து வாடையே படாதவாறு வைத்திருக்கக்கூடாதோ என்று என்னுடைய சுயநல உள்ளம் கேட்கிறது.

கதாபாத்திரங்களையும், இடத்தையும் பற்றிச் சொல்லி விட்டேன். இனி கதை எவ்வாறு பிறந்தது என்பதைக் கூறி விடுகிறேன்.

சில சமயங்களில், நான் ஓர் எழுத்தாளன் என்பதையே மறந்துவிடுவேன். (அதனால்தான் பத்து வருடங்களுக்கு ஒரு முறை ஒரு நவீனம் எழுதுகிறேன்) அம்மாதிரியான சமயங்களில் என் அருமை நண்பர்களில் சிலர் எழுதுமாறு என்னைத் தூண்டுவார்கள். நானும் அவர்களிடம் பல நாட்கள் எதையாவது சொல்லித் தப்பித்து வருவேன். கடைசியில் அவர்களுடைய தொந்தரவு பொறுக்க முடியாமல் எதையாவது எழுதித் தொலைத்து விடுவதுண்டு; பெரும்பாலான சமயங்களில் அவை நன்றாக அமைந்து விடுவதுமுண்டு.

இந்த நவீனத்தைப்பொறுத்த வரையில் எனக்குத் தூண்டுகோலாய் இருந்தவர்களில் குறிப்பிடத்தக்கவர் 'ரேடியோ அண்ணா' அய்யாசாமி அவர்கள். அவருக்கும் இந்நவீனத்தைத் தொடர்கதையாக சிறுவர் நிகழ்ச்சியில் ஒலிபரப்பிய சென்னை வானொலி நிலையத்தாருக்கும் என் மனமார்ந்த நன்றி உரியது.

கடந்த ஐந்தாண்டுகளுக்கு மேலாக பெட்டியில் மூடங்கிக் கிடந்த இந் நவீனத்தை அம்பலத்துக்குக் கொண்டு வந்த தமிழ் எழுத்தாளர் கூட்டுறவுச்சங்கத்தாருக்கும் என்னுடைய மனமார்ந்த நன்றி.

இந்நூலில் உள்ள படங்களையும் அட்டைப் படத்தையும் அழகுற வரைந்துதந்த என்னுடைய இனிய நண்பர் ஓவியர் ரெஸாக் அவர்களுக்கும், இந்நூல் வெளிவருவதற்குப் பல வகையிலும் உதவி புரிந்த சௌந்தரா பிரிண்டர்ஸ் அதிபர் திரு. மெ. முருகப்பன் அவர்களுக்கும் என் மனங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அன்பன்,

குறளகம்
சென்னை-1.

நெ. சி. தெய்வசிகாமணி

# ஆசிரியரின்
# பிற நூல்கள்

**நவீனம்**

*பளிங்கு மண்டபம்*
*மாயத்தம்பி*

**கதைகள்**

*பச்சைக் கிளி*
*சத்ரபதிக் கோட்டை*
*குருவியின் சாபம்*
*மரகதமணி*
*பூந்தோட்டம்*
*ஆகாய மாளிகை*
*யாருடைய குதிரை?*
*பீர்பல் கதைகள்*
*இராயர் அப்பாஜி கதைகள்*
*மரியாதைராமன் கதைகள்*
*எண்சுவைக் கதைகள்*
*பாலர் கதைகள்*
*பழைய பூதம்*

**நகைச்சுவை**

*எங்கள் குடும்பம்*
*மறதி மகாதேவன்*
*மூட்டைப்பூச்சி வேட்டை*

**விஞ்ஞானம்**

*சந்திரனுக்குச் செல்வோம்*
*விண்வெளிக் குடும்பம்*
*இதுதான் உலகம்*

**வரலாறு**

*ஆந்திர அறிஞர்கள்*
*ஜெகதீச சந்திரபோஸ்*

**நாடகம்**

*ஒருநாள் அரசன்*

# 1

கிளியனூர் என்ற ஊர் உண்மையிலேயே கிளி கொஞ்சுகிற ஊர்தான்! அந்த ஊர் மாந்தோப்புக்குள் நுழைந்துவிட்டால் கிளிகளின் 'கீச் கீச்' என்ற சப்தம் கேட்க இனிமையாக இருக்கும். அண்ணாந்து அவைகள் கொஞ்சுகிற அழகையும், மாம்பழங்களைக் கொத்தித் தின்கிற அழகையும் இன்றைக்கெல்லாம் பார்த்துக் கொண்டிருக்கலாம்.



ஆனால், கந்தசாமி என்கிற சிறுவன் மாந்தோப்புக்குள் நுழைந்து விட்டால், அவ்வளவுதான்; கிளிகளின் கொஞ்சுதல் எல்லாம் பறந்து விடும்.

அவைகள் பயத்தினால் 'பட பட'வென்று சிறகை அடித்துக் கொண்டே அங்கும் இங்கும் பறந்து போகும். ஏனென்றால், அவன் கையில் எப்பொழுதும் ஒரு கவண் வில் இருக்கும். அதில் கல்லை வைத்து எதையாவது அடித்துக்கொண்டிருப்பான். பறவைகளை யெல்லாம் அடித்துத் துன்புறுத்துவான்; மாங்காய் களை அடிப்பான். மாந்தோப்பில் புகுந்துவிட்டால் ஒரு நிமிஷம்கூடச் சும்மா இருக்கமாட்டான். ஒரே அமர்க் களம்தான்!

போதாக்குறைக்கு அவனுடன் எப்பொழுது பார்த் தாலும் நான்கைந்து சிறுவர்கள் சுற்றிக்கொண்டே இருப்பார்கள். அதற்கு இரண்டு காரணங்கள் உண்டு. ஒன்று; அவனிடம் எப்பொழுதும் பண நடமாட்டம் இருந்து கொண்டே இருக்கும். இரண்டாவது; மாந் தோப்பு அவனுடைய அப்பாவுடையது. நினைத்த நேரத் தில் மாங்காய்களாகவும், மாம்பழங்களாகவும் அடித் துத் தள்ளி நண்பர்களுக்குக் கொடுப்பான்.

தினமும் பள்ளிக்கூடம் விட்டதும் கந்தசாமியை யும் அவன் நண்பர்களையும் மாந்தோப்பில் பார்க்க லாம். அங்கு குட்டை மரம் என்று ஒரு மாமரம் இருக் கிறது. ரொம்பவும் குட்டையாக இருக்கும். அதில் உள்ள காய்களையும், பழங்களையும் அப்படியே கைகளால் எட்டிப் பறித்துவிடலாம். அவ்வளவு குட்டையாக இருக்கும். அதன் கீழே ஒரு கடப்பைக் கல் போடப்பட்டிருக்கும். அந்தக் கடப்பைக்கல் கந்த சாமியின் அப்பா ஓய்வாகத் தோப்புக்கு வந்தால் உட் காருவதற்காகப் போடப்பட்டது. ஆனால், அவர் இது வரை ஒருநாள்கூட அந்தக் கல்லின்மேல் உட்கார்ந்து ஓய்வெடுத்துக் கொண்டது கிடையாது. அவருக்குப்

பொழுது விடிந்து பொழுது போகிறவரைக்கும் கடை வேலை சரியாக இருக்கும். அப்படி இப்படி நகர முடியாது. கிளியனூர் பூராவும் அவருடைய மளிகைக் கடையை நம்பித்தான் வாழவேண்டி யிருந்தது. எனவே அவருக்கு மாந்தோப்பில் சென்று ஓய்வெடுத் துக் கொள்ள நேரமே கிடைப்பதில்லை. அவருக்குப் பதில் அவருடைய மகன் கந்தசாமி எந்நேரமும் மாந் தோப்பே கதியாகக் கிடப்பான்.

"ஏண்டா! எப்பொழுது பார்த்தாலும் மாந்தோப் பிலே உனக்கு என்னடா வேலை?" என்று அப்பா கேட் டால், "இல்லேப்பா, குட்டை மரத்திலே இருந்து எல்லோரும் மாங்காயைப் பறித்துக்கொண்டு போய் விடுகிறார்கள். நான் அங்கேயே இருக்கிறதாலே ஒரு வரும் வரமாட்டேனென்கிறார்கள்" என்பான்.

"அதுசரி, இது என்னடா கையிலே கவண் வில், சோம்பேறி மாதிரி" என்பார் அப்பா.

"இதுவா அப்பா? இது வந்து கிளிகள் எல்லாம் மாம்பழங்களைக் கொத்திப் பாழ் பண்ணுது அப்பா, அவைகளை விரட்டத்தான்."

அவனுடைய பேச்சைக் கேட்டு அவன் அப்பா வுக்கு ரொம்பவும் பெருமையாயிருக்கும். 'பையனுக்கு மாந்தோப்பின்மேல் எவ்வளவு அக்கறை?' என்று மிகவும் மகிழ்ச்சி யடைவார். அவர் மாந்தோப்புக்குள் போய்ப் பார்த்தாலல்லவா அவனுடைய திருவிளை யாடல்கள் தெரியும்!

வழக்கம்போல் அன்றையத் தினமும் கந்தசாமி தன் நண்பர்களுடன் மாந்தோப்புக்குச் சென்றான். ஐந்தாறு மாங்காய்கள் அடித்துக்கொண்டு வந்து

குட்டை மரத்தின் கீழே உள்ள கடப்பைக்கல்லின்மேல் உட்கார்ந்தான். அவனைச் சுற்றிலும் அவன் நண்பர்கள் உட்கார்ந்தார்கள்.

"ஏண்டா, சுண்டெலி வந்திருக்கானா?" என்று திரும்பிப் பார்த்தபடியே கூறினான், கந்தசாமி. சுண்டெலி என்கிற சுந்தரராமன், "இதோ இருக்கிறேனே!" என்றான்.

"ஏண்டா சுண்டெலி! எத்தனை நாளாக ஏமாற்றிக் கொண்டு வருகிறாய்? இன்றைக்காவது கொண்டு வந்தாயா?" என்றான் கந்தசாமி.

"இல்லேடா! அம்மா இரண்டே இரண்டுதான் கொடுத்தாங்க. அங்கேயே தின்றுவிட்டேன்" என்றான் சுண்டெலி.

"ஒன்றாவது எடுத்து வரக்கூடாதா? நீ நன்றியில்லாதவண்டா. நான் உனக்கு எத்தனை மாம்பழங்கள் கொடுத்திருக்கிறேன். ஒரே ஒரு முறுக்கு எடுத்து வந்து கொடுக்க மூக்கால் அழுகிறாயே" என்றான் கந்தசாமி.

"நாளைக்குக் கண்டிப்பாகக் கொண்டுவந்து தரேண்டா."

"நிச்சயமா?"

"கண்டிப்பா, கொண்டு வரேன்னா கொண்டு வருவேன். உனக்கு ஒரு முறுக்கு வேணும்; அவ்வளவு தானே!"

"சரி, மாணிக்கம்! எங்கே மிளகாய்ப்பொடி. பொட்டலத்தையும் உப்பையும் எடு" என்று மாணிக்கத்தைப் பார்த்துச் சொல்லியபடியே மாங்காய்களைக்

கடப்பைக்கல்லின் மேல் வைத்து உடைக்க ஆரம்பித்தான் கந்தசாமி.



"டேய் கந்தசாமி! தயவு செஞ்சி இன்னைக்கு ஒரு நாள் மன்னிச்சுக்க. இன்னைக்குப் பூராவும் அம்மா சமையலறையிலேயே பழியாக இருந்தாள். நான் எப்படிடா மிளகாய்ப் பொடியும் உப்பும் எடுத்து வர முடியும்?" என்ருன் மாணிக்கம்.

"உபயோகமத்தவங்கடா நீங்களெல்லாம். உங்களை நம்பி ஒரு காரியமும் செய்யக்கூடாது" என்று சொல்லியபடியே மாங்காய்த் துண்டுகளைத் தூர வீசி எறிந்தான் கந்தசாமி.

உடனே அவனுடைய நண்பர்கள் பாய்ந்து ஓடி அவைகளைப் பொறுக்கி எடுத்துக்கொண்டனர்.

"கோவிச்சுக்காதே கந்தசாமி! இன்னைக்கு ஒரு நாள் மிளகாய்ப் பொடி உப்பு இல்லாம சாப்பிடுவோம். நாளைக்குக் கட்டாயம் கொண்டு வரேன்" என்றான் மாணிக்கம்.

"நீங்களே தின்னுங்க. எனக்கு வேணும்" என்று வெறுப்புடன் கூறினான் கந்தசாமி.

எப்பொழுது அவன் அந்த வார்த்தையைச் சொல்லப் போகிறான் என்று காத்துக்கொண்டிருந்தவர்களைப் போலக் கந்தசாமியின் நண்பர்கள் மாங்காய்த்துண்டுகளைச் சாப்பிட ஆரம்பித்தனர்.

"ஆஹா! என்ன ருசி! இதுக்குப் போய் மிளகாய்ப் பொடியும் உப்பும் கேட்டியே!" என்று சொல்லியவாறே ரசித்துச் சாப்பிட்டுக்கொண்டிருந்தான் சுண்டெலி.

"மாங்காயே இவ்வளவு ருசியாக இருக்கிறதே, மாம்பழம் எப்படி இருக்குமோ?" என்றான் மாணிக்கம்.

"ஏன், தின்னு பார்த்ததே இல்லையோ? ஏண்டா மாணிக்கம், உனக்கு எத்தனை தடவை குட்டை மரத்து மாம்பழம் கொடுத்திருக்கிறேன். மறந்துட்டயா?" என்றான் கந்தசாமி.

"குண்டு குண்டா, தித்திப்பா இருந்ததே, அது குட்டை மரத்துப் பழமாடா? எனக்குத் தெரியவே

தெரியாது! ரொம்ப நல்லாயிருந்தது, ரொம்ப நல்லா யிருந்தது!'' என்றான் மாணிக்கம்.

''அது சரி, உங்களுக்கெல்லாம் புதிசா ஒரு சங்கதி சொல்லப் போகிறேன்'' என்றான் கந்தசாமி.

''என்ன சமாசாரம்? என்ன சமாசாரம்? சீக்கிரம் சொல்லு'' என்று ஆவலாகக் கேட்டார்கள், சுண்டெலி யும் மாணிக்கமும்.

''நம் பள்ளிக்கூடத்துக்கு நாளைக்குப் புது வாத்தி யார் ஒருவர் வருகிறார். அவரை நாம் எல்லோரும் ரயில்வே ஸ்டேஷனில் போய் வரவேற்கவேணும்'' என்றான் கந்தசாமி.

''ஓ, தாராளமாகப் போகலாம். நானும் வரேன்'' என்றான் சுண்டெலி.

''ரயிலைவிட்டு இறங்கியதும், அவருக்கு மாலை போட்டுக் கையிலே ஒரு பூச்செண்டு கொடுத்து வர வேற்றால் கடைசிவரை நம்மை அவர் மறக்கவே மாட் டார்'' என்றான் கந்தசாமி.

''அதுசரி, மாலைக்கும் பூச்செண்டுக்கும் எங்கே போவது?'' என்றான் சுண்டெலி.

''நான் நாலணா தருகிறேன். நீங்களும் ஆளுக்கு நாலணா கொடுத்தால் மாலையும் பூச்செண்டும் வாங்க லாம்'' என்றான் கந்தசாமி.

''எங்க வீட்டிலே பணத்தை என் கண்ணிலேயே காட்ட மாட்டாங்க. பணத்துக்கு நான் எங்கேடா போவேன்?'' என்றான் சுண்டெலி.

''எங்கேயாவது போ! சுத்த தரித்திரம் பிடித்த வண்டா நீ! ஏண்டா மாணிக்கம், நீ என்ன சொல்றே?

நீயும் அவனைப்போல முகாரி பாடப் போறியா?'' என்றான் கந்தசாமி.

''இல்லை, எனக்காக இப்ப நீயே பணத்தைப்போட் டுக்க. அடுத்த வாரம் உனக்குக் கண்டிப்பா திருப்பிக் கொடுத்திடறேன்'' என்றான் மாணிக்கம்.

''பணம் இல்லைனு சொல்றதுக்குப் பதில் இப்படிச் சொல்றே? சரி, இப்ப என்ன பண்ணலாம்?'' என்றான் கந்தசாமி.

''டேய் எனக்கு ஒரு யோசனை உதிக்குது. அதா வது நம்ம வகுப்பிலே இருக்கிற மத்த பசங்ககிட்டே யும் சங்கதியைச் சொல்லி அவங்ககிட்டேயும் ஏதாவது வசூல் செய்வோமே!'' என்றான் சுண்டெலி.

''நம் வகுப்பிலே படிக்கற பசங்க அவ்வளவு பேரும் போய்க் கேட்டதுமே 'டகார்'னு பணத்தைத் தூக்கிக் கொடுத்திடுவாங்களா? சரி, அப்படித்தான் இருந்தாலும் ஒவ்வொருத்தன் ஒவ்வொரு மூலையில் இருக்கிறான். யார் போய் வசூல் செய்வது?'' என்றான் கந்தசாமி.

''டேய், அதோ வாசு போகிறான். அவனைக் கூப் பிட்டு அவன்கிட்டேயும் விஷயத்தைச் சொல்வோமே!'' என்றான் கந்தசாமி.

''வாசுவா? அவன் மௌனசாமியாச்சே! நீ கூப் பிட்டால் அவன் வந்துவிடுவானா? போய்க் கூப்பிட் டுப் பார்!'' என்றான் கந்தசாமி.

சுண்டெலி மாந்தோப்பிலிருந்து வெளியே வந்து, ''வாசு வாசு'' என்று கைதட்டிக் கூப்பிட்டான். வாசு திரும்பிப் பார்த்தான். ஆனால், வரவில்லை. அவன்

பாட்டுக்குப் போய்க்கொண்டேயிருந்தான். சுண்டெலி ஏமாற்றத்துடன் திரும்பி வந்தான்.

"எனக்கு அப்பவே தெரியுமே! அவன் மகா மண்டைக் கர்வம் பிடிச்சவன். என்றைக்காவது ஒரு நாள் அவன் கர்வத்தை அடக்குகிறேனு இல்லையா பார்" என்றான் கந்தசாமி.

"அது எப்படி உன்னால் முடியும்?" என்றான் சுண்டெலி.

"ஏன் முடியாது? இது என்ன தெரியுமா? உண்டிவில்! இதை ரொம்பச் சாதாரணமா நெனைச்சுக்காதே. என்கிட்டே ஏதாவது தகராறு பண்ணினுனே, ஒரே கல்; மண்டை டணால்!"

"ஐயையோ! அப்படியெல்லாம் செய்திடாதே!" என்றான் மாணிக்கம்.



தூரத்தில் ஒரு மாட்டு வண்டி ஆடி அசைந்து வந்துகொண்டிருந்தது. வண்டிக்குள் இருந்தவர்களின் முகம் மாந்தோப்பில் உட்கார்ந்து கொண்டிருந்தவர்களுக்குச் சரியாகத் தெரியவில்லை.

"நம்ம ஊருக்குத்தான் வருகிறாப்போல இருக்குதே; யார் வீட்டுக்கு வராங்க?" என்றான் சுண்டெலி.

"யார் வீட்டுக்காக இருந்தால் என்ன? இப்பொழுது ஒரு வேடிக்கை பார்" என்று சொல்லிவிட்டுச் சிறு கல் ஒன்றை எடுத்துக் கவண் வில்லில் வைத்து வண்டிக் கூரையைப் பார்த்து அடித்தான் கந்தசாமி.

கவண்வில்லிலிருந்து புறப்பட்ட கல் துப்பாக்கிக் குண்டு மாதிரி வண்டிக்கூரையைப் பொத்துக்கொண்டு உள்ளே போய் விழுந்தது.

கொஞ்ச நேரத்திற்கெல்லாம் வண்டி நின்றது. வண்டியிலிருந்து வண்டிக்காரன் குதித்துச் சுற்று முற்றும் பார்த்தான். அதற்குள் கந்தசாமியும் மற்றவர்களும் மூலைக்கு ஒருவராக ஓடிப்போய் மாமரங்களின் பின்னால் பதுங்கிக்கொண்டனர்.

கந்தசாமி மரத்தின் பின்னால் ஒளிந்துகொண்டு இருந்தாலும் கூட மேற்கொண்டு என்ன நடக்கிறது என்பதைப் பார்த்துக் கொண்டிருந்தான். வண்டியிலிருந்து ஒருவர் கோபமாக இறங்கினார். அவருடைய நெற்றியிலிருந்து ரத்தம் வழிந்து கொண்டிருந்தது. அவருடன் ஒரு பையனும் இறங்கினான். அவனுக்குப் பதின்மூன்று வயது இருக்கும்.

வண்டியிலிருந்து இறங்கியவர் சுற்றுமுற்றும் பார்த்தார். ஒருவரையும் காணவில்லை. தூரத்தில் வாசு போய்க்கொண்டிருந்தான். அவனைப் பார்த்ததும்

'இவன்தான் மாம்பழத்தைக் குறி பார்த்துக் கல் அடித்திருப்பான். அது குறி தவறி வண்டிக் கூரையைப் பிய்த்துக்கொண்டு தாக்கியிருக்கிறது' என்று நினைத்தவராக, "தம்பீ, தம்பீ! இங்கே வா!" என்று வாசுவைக் கூப்பிட்டார், வண்டியிலிருந்து இறங்கியவர்.

வாசு திரும்பிப் பார்த்தான். ஆனால் அவர்களிடம் வரவில்லை. அவன் பாட்டுக்குப் போய்க்கொண்டேயிருந்தான்.

"பரமா, அந்தப் பையனுக்கு எவ்வளவு திமிர். பார்த்தாயா? கல்லால் அடித்தது மல்லாமல் கூப்பிடக் கூப்பிடச் சட்டை செய்யாமல் போய்க்கொண்டிருக்கிறானே!" என்று பக்கத்திலிருந்த சிறுவனைப் பார்த்துச் சொன்னார் அவர்.

"போகட்டும், விடுங்க அண்ணா! பயத்தினாலே ஒன்றும் தெரியாதவனைப் போல் போகிறான். அவனைக் கூப்பிட்டுக் கேட்டால்கூட நான் இல்லையென்று சொல்லுவான். வாங்க நாம் போவோம்" என்றான், பரமன்.

பரமனின் அண்ணாவும் தம்பி சொன்னதை உணர்ந்து தன்னைக் கல்லால் தாக்கிய சிறுவனை மன்னித்துவிட்டு வண்டியில் ஏறி உட்கார்ந்தார். வண்டிக்காரனும் முன்பக்கத்தில் ஏறி உட்கார்ந்துகொண்டான். பரமன் கடைசியாக வண்டியில் ஏறி உட்கார்ந்தான்.

வண்டி புறப்பட்டது. பரமனின் பார்வை தற்செயலாக மாந்தோப்பினுள் சென்றது. மூன்று சிறுவர்கள் நடுக்கத்துடன் மரங்களின் பின்னாலிருந்து வந்து வேறு பக்கமாகச் செல்வது தெரிந்தது. அவர்களில் வளர்ந்தவனாக இருந்த கந்தசாமியின் கையில் கவண்வில் இருப்பதைப் பார்த்துவிட்டான் பரமன்.

வண்டியை நிறுத்திக் குற்றவாளியைக் கையும் களவுமாகப் பிடித்து அண்ணனிடம் ஒப்படைக்கலாமா என்று நினைத்தான். ஆனால், 'அண்ணாவே அதை மறந்துவிட்டுப் பேசாமல் வரும்போது மீண்டும் நாம் ஏன் ஞாபகப்படுத்தி அவர் கோபத்தைக் கிளற வேண்டும்' என்று நினைத்தவனாகப் பேசாமல் இருந்து விட்டான், பரமன்.

* * *

அடுத்த நாள் பள்ளிக்கூடத்தில் பிரார்த்தனைக் கூடத்தில் பரமனும் அவன் அண்ணாவும் தலைமை யாசிரியர் பக்கத்தில் நின்று கொண்டிருப்பதைப் பார்த்ததும் கந்தசாமிக்கும் அவன் நண்பர்களுக்கும் தூக்கி வாரிப்போட்டது. முதல் நாள் நடந்த சம்பவத்தைப் பற்றித் தலைமையாசிரியரிடம் புகார் செய்ய வந்திருப்பாரோ என்று பயந்தான் கந்தசாமி. அவர் நெற்றியில் கந்தசாமி கல்லால் அடித்த காயம் நன்றாகத் தெரிந்தது. அதற்கு ஒரு சிறு பிளாஸ்திரி போட்டிருந்தார். அவரையும் அவருடைய நெற்றிக் காயத்தையும் பார்த்த வாசு வெட்கித் தலை குனிந்துகொண்டான். முன் தினம் நெற்றியில் வழியும் ரத்தத்துடன் அவர் தன்னைக் கூப்பிட்டது அவனுக்கு நன்றாக நினைவு வந்தது. அவர் கூப்பிட்டதும் போய் அவருக்கு உதவி செய்யாமல் போனேமே என்று வருந்தினான். என்ன செய்வது? அவன் நிலை அப்படி. அவன் அம்மா அவனை ஒருவருடனும் சேரக்கூடாது, ஒருவரு டனும் அனுவசியமாகப் பேசக்கூடாது என்று கண்டித்திருந்தாள். அதனால்தான் அவன் பரமனின் அண்ணா கூப்பிட்டபோது போகவில்லை. சுண்டெலி கூப்பிட்ட போது போகாததற்கும் அதுவேதான் காரணம்.

தலை குனிந்து நிற்கும் வாசுவைப் பார்த்த பரமனின் அண்ணு, 'இவன்தானே நேற்று நம்மேல் கல்லை எறிந்துவிட்டுக் கூப்பிடக் கூப்பிடப் பேசாமல் போனவன். இவன் இங்குதாஞ இருக்கிருன்?' என்று நினைத்துக் கொண்டிருந்தார்.

அதே நேரத்தில் பரமன் 'நேற்று, கவண் வில்லுடன் மாந்தோப்பில் ஓடிய பையன் அதோ தலை குனிந்துகொண்டு இருக்கிருனே! அவனுடன் ஓடிய இரண்டு சிறுவர்களும்கூட அவனுடன் இருக்கிருர்களே!' என்று நினைத்துக்கொண்டிருந்தான்.

ஒரு வழியாகப் பிரார்த்தனை கீதம் முடிந்தது. தலைமையாசிரியர் மாணவர்களைப் பார்த்து, "பிள்ளைகளே, இதோ நின்று கொண்டிருக்கிருரே இவர்தான் நம் பள்ளிக்குப் புதிதாக வந்திருக்கும் ஆசிரியர். இவருடன் இருக்கும் சிறுவன் இவருடைய தம்பி. இவனும் நம் பள்ளியில்தான் எட்டாம் வகுப்பில் சேர்ந்திருக்கிருன்" என்று சொல்லிக் கொண்டிருக்கும் போதே கந்தசாமிக்கும் அவன் நண்பர்களுக்கும் நெஞ்சை யாரோ கசக்கிப் பிழிவதைப்போல் இருந்தது.

வாசுவுக்கும் அதே நிலைதான் ஏற்பட்டது. ஏனென்ருல் தினசரி பாடம் நடத்த அவனுடைய வகுப்புக்கும் பரமனின் அண்ணு வருவார். அவரை எந்த முகத்துடன் நிமிர்ந்து பார்ப்பது என்று கவலை தோய்ந்த முகத்துடன் நின்றுகொண்டிருந்தான் வாசு.

# 2

ஒரு ஊரில் ஒரு ராஜா இருந்தார். அந்த ராஜாவுக்கு ரொம்ப நாளாகக் குழந்தையே பிறக்கவில்லை. கடைசியில் ஓர் ஆண் குழந்தை பிறந்தது. குழந்தை பிறந்ததும் அரசர் அரண்மனை ஜோசியரைக் கூப்பிட்டார். ஜோசியர் குழந்தையின் ஜாதகத்தைப் பார்த்துவிட்டு, "அரசே, பன்னிரண்டாவது வயதில் மனிதர்களால் இந்தக் குழந்தையின் உயிருக்கு ஆபத்து ஏற்படும்" என்றார்.

அரசர் குழந்தையை ரொம்ப ஜாக்கிரதையாக வளர்த்தார். பன்னிரண்டாவது வயது தொடங்குவதற்கு முன்னால் இளவரசனை மனித நடமாட்டம் இல்லாத ஒரு தீவில் சகலவிதமான உணவுப் பொருள்களுடன் விட்டுவிட்டு வந்துவிட்டார்.

பிறகு அந்தப் பக்கமாக வந்த கப்பல் ஏதோ ஒன்று முழுகிப்போய், அதிலிருந்து தப்பிப் பிழைத்த ஒருவன் எப்படியோ அரசகுமாரன் இருந்த தீவிற்குப்

போய்ச் சேர்ந்துவிட்டான். அவனால் அந்த அரச குமாரனும் செத்துவிட்டான்.

இந்தக் கதை அடிக்கடி வாசுவுக்கு ஞாபகம் வரும். ஏனென்றால் அவனுடைய அம்மா அந்தக் கதையிலே வருகிற ராஜா மாதிரி அவனையும் மனித சஞ்சாரம் இல்லாத ஒரு காட்டில் விட்டுவிட்டு வந்திருந்தால் பரவாயில்லையே! மனிதர்களுடனேயே இருந்து கொண்டு, "ஒருத்தரிடமும் பழகாதே! ஒருத்தரிடமும் அனுவசியமாகப் பேசாதே!" என்று அடிக்கடி கண்டித்து வந்தால் அவன் மனம் என்ன பாடுபடும்?

'அம்மாவின் கட்டளையினால்தானே புதிய ஆசிரியருக்கு ஆபத்து நேர்ந்தபோது அவர் கூப்பிட்டும்கூட உதவிக்குப் போகாமல் திரும்பி வந்தோம்?' என்று நினைக்கும்போது அவனுக்கு வேதனையாக இருந்தது.

அன்றையத் தினம் முதல் 'பீரியடு' ஆரம்பமானதுமே அந்த வகுப்பிற்குள் நுழைந்துவிட்டார், பரமனின் அண்ணா. அவரைக் கண்டதும் எல்லோரும் எழுந்து நின்றார்கள். எல்லோரையும் உட்காரச் சொல்லிவிட்டுப் பெயர்ப் பதிவுப் புத்தகத்தை எடுத்து ஒவ்வொரு மாணவனின் பெயராகக் கூறிக்கொண்டிருந்தார். மாணவர்களும் எழுந்து நின்று "இருக்கிறேன் ஐயா" என்று கூறிக்கொண்டிருந்தார்கள்.

"எல். வாசு" என்று சொல்லிவிட்டு நிமிர்ந்து பார்த்தார் பரமனின் அண்ணா.

வாசு எழுந்து நின்று "இருக்கிறேன் ஐயா!" என்றான்.

அவனைப் பார்த்ததும் அவருக்கு முன் தினம் நடந்த சங்கதிகள் அனைத்தும் நினைவுக்கு வந்தன.

பெயர்ப் பதிவுப் புத்தகத்தை மூடிவிட்டு "நீதான் வாசுவா? இங்கே வா!" என்று கூப்பிட்டார்.

வாசு நடுங்கியபடியே அவர் முன்னால் போய் நின்றான்.

"நீதானே நேற்று மாந்தோப்பினருகில் வண்டியில் மேல் கல்லை விட்டு எறிந்தது?" என்றார், புதிய ஆசிரியர்.

வாசுவுக்கு ஒன்றுமே புரியவில்லை. 'ஆமாம், என்பதா? இல்லை என்று சொல்வதா?' என்று புரியவில்லை. 'திருதிரு' வென்று விழித்துக்கொண்டிருந்தான்.

"நீ கல்லால் அடித்தது ஏதோ தெரியாத்தனமாக நடந்துவிட்டது என்று வேண்டுமானாலும் மன்னித்து விடுகிறேன். ஆனால், நான் கூப்பிடக் கூப்பிடத் திரும்பிப் பார்த்துவிட்டுப் பேசாமல் போனாயே, அதைத்தான் என்னால் மன்னிக்க முடியாது" என்றார்.

வாசு செய்த குற்றம் ஒன்றுதான்! பரமனின் அண்ணா கூப்பிட்டபோதே போய் அவரிடம் உண்மையைச் சொல்லியிருக்க வேண்டும். அப்பொழுது பேசாமல் வந்துவிட்டதனால் அவன் செய்யாத குற்றமும்—அதாவது கல்லை எடுத்து எறிந்த குற்றமும்—கூடச் சேர்ந்து கொண்டது. இப்போது, அவன் "நான் இல்லை ஐயா!" என்றாலும் ஆசிரியர் நம்பவா போகிறார்?

வாசு பேசாமலிருந்தான்!

"இந்தப் பீரியடு பூராவும் நீ பெஞ்சியின் மேல் ஏறி நிற்கவேண்டும். இதுதான் உனக்குத் தண்டனை" என்றார் ஆசிரியர்.

வாசு தன் இருப்பிடத்திற்கு வந்து பெஞ்சியின் மேல் ஏற முயன்றான். அப்பொழுது பரமன், "எதற்காகப் பெஞ்சியின் மேல் ஏறுகிறாய்? உண்மையாகச் சொல்; நீயா அண்ணாவின் பேரில் கல்லை விட்டெறிந்தாய்?" என்றான்.

வாசு, "இல்லை" என்று சொல்ல வேண்டுமென்று தான் நினைத்தான். ஆனால் அவன் வாயிலிருந்து ஒரு வார்த்தைகூடக் கிளம்பவில்லை.

"நீ ஊமையாயிருந்தாலும் நான் உண்மையைச் சொல்லுகிறேன். அண்ணா, நம் வண்டிக் கூரைமேல் கல்லை விட்டெறிந்தவன் வாசு அல்ல. இதோ தலை குனிந்துகொண்டே உட்கார்ந்திருக்கிறானே கந்தசாமி; இவன்தான் கல்லை எறிந்து உங்களைக் காயப்படுத்தினான். உண்மையா இல்லையா என்று அவனையே கேளுங்கள்" என்றான் பரமன்.

பரமனின் அண்ணாவுக்கு ஒன்றுமே புரியவில்லை. தாம் குற்றவாளி என்று நினைத்துக்கொண்டிருந்தவனைத் தம் தம்பி நிரபராதி என்று கூறியதையும் கந்தசாமியைக் குற்றவாளியாக்கியதையும் அவர் இலேசில் நம்பவில்லை. "கந்தசாமிதான் கல்லை எறிந்தான் என்று உனக்கெப்படித் தெரியும்?" என்றார்.

"என் கண்ணால் பார்த்தேன். வண்டி புறப்பட்டதும் இவனும் இவனுக்குப் பக்கத்தில் உட்கார்ந்துகொண்டிருக்கிற இரண்டு பையன்களும் மாமரங்களின் பின்னாலிருந்து பதுங்கிப் பதுங்கிப் போய்க்கொண்டிருந்தனர். அப்பொழுது இந்தக் கந்தசாமியின் கையில் 'கவண் வில்' இருந்தது" என்றான் பரமன்.

"கந்தசாமி, பரமன் சொல்வது உண்மைதானு?" என்ருர் ஆசிரியர்.

கந்தசாமி மௌனமாக நின்றுகொண்டிருந்தான். "மயிலே மயிலே என்ருல் இறகு போடாது. இங்கே வா!" என்று கோபமாகச் சொல்லியபடியே கையில் பிரம்பை எடுத்தார் பரமனின் அண்ணு.

"ஆமாம் ஐயா, நான்தான் அடித்தேன். ஆனுல் வேண்டுமென்று அடிக்கவில்லே. மாங்காய் அடிக்கற துக்காக அடித்தேன். குறி தவறி உங்க மேலே பட்டு விட்டது" என்ருன் கந்தசாமி.

இதைக் கேட்டதும் பிரம்பை மேஜைமேல் வைத்து விட்டு, "சரி போ! இனிமேல் இந்த மாதிரி யெல்லாம் அக்கம் பக்கம் பார்க்காமல் கல் எடுத்து எறியக் கூடாது" என்ருர், ஆசிரியர்.

கந்தசாமி 'அப்பாடா! ஒரு வழியாகத் தப்பினேம்' என்று பெருமூச்சு விட்டபடியே தன் இடத்தை நோக்கிச் சென்றுகொண்டிருந்தான்.

உடனே பரமன் தன் இடத்திலிருந்து எழுந்து, "ஒரு சந்தேகம் அண்ணு, இவர்கள் ஒளிந்துகொண் டிருந்த மரம் ரொம்பவும் குட்டையாக இருந்தது. அதில் கல் எடுத்து அடிக்காமலேயே காய்களைப் பறித் துச் சாப்பிட முடியும். அப்படியிருக்க வீதியில் வந்து கொண்டிருக்கும் வண்டிக் கூரையைப் பொத்துவிடும் படியாக இவர்கள் கல் அடித்தது தெரியாத்தனமாக அல்ல. வேண்டுமென்றேதான் அடித்திருக்கிருர்கள்" என்ருன். பரமன் சொல்வதிலிருந்து கந்தசாமி வேண்டுமென்றே செய்திருப்பான் என்று அண்ணுவுக் கும் தோன்றியது.

"சரி, 'இனி அனுவசியமாகக் கல்லை எடுத்து அடிக்கமாட்டேன்' என்று நூறு தடவை எழுதிக் காட்டு. இதுதான் உனக்குச் சரியான தண்டனை" என்று கூறிவிட்டு மேற்கொண்டு பாடம் நடத்த ஆரம்பித்தார் ஆசிரியர்.

கந்தசாமி பரமனை மனத்திற்குள்ளாகத் திட்டிக் கொண்டிருந்தான்.

'வாசுவின் பேரில் இவனுக்கு என்ன அன்பு? மடக்கி மடக்கி நம்மைக் குற்றவாளியாக்கி விட்டானே! ஒரு நாள் அவனுக்கும் சரியான பாடம் கற்றுத் தரவேண்டும்" என்று மனத்திற்குள் கருவிக் கொண்டான் கந்தசாமி.

பரமனின் அண்ணு பாடம் நடத்த ஆரம்பித்தார். கந்தசாமியின் மனம் பாடத்தில் ஈடுபடவில்லை. பரமனை எந்த விதத்தில் மட்டம் தட்டலாம் என்பதி லேயே நேரத்தை ஓட்டிக்கொண்டிருந்தான். இதனிடை யில் முதல் பீரியடு முடிந்ததற்கு அறிகுறியாக மணி அடித்தது. பரமனின் அண்ணுவும் தன்னுடைய புத்த கங்களை எடுத்துக்கொண்டு அடுத்த வகுப்புக்குப் போகக் கிளம்பினுர். போகும்போது வாசுவைக் கூப்பிட்டு, "எதற்கெடுத்தாலும் கோழை மாதிரி பேசாமலிருந்தால் நடக்காது. நீ தவறு செய்யவில்லை யென்ருல் தைரியமாகச் சொல்லவேண்டும். இப்படிப் பேசாமடைந்தையாக இருந்தால் முன்னுக்கு வரமாட் டாய்" என்று புத்திமதிகள் சொல்லிவிட்டு வேறு வகுப்புக்குச் சென்ருர்.

அன்றையத்தினம் பூராவும் பரமன் வாசுவிடம் பல கேள்விகள் கேட்டுக்கொண்டிருந்தான். வாசுவும்

அவன் கேட்ட கேள்விகளுக்கு எல்லாம் சுருக்கமாகப் பதில் சொல்லி வந்தான். சில கேள்விகளுக்குத் தெரி யாது என்றும் சொல்லிவிட்டான்.

இதையெல்லாம் பார்க்கப் பார்க்க கந்தசாமிக்கும் அவன் நண்பர்களுக்கும் வாசுவின் பேரில் பொறுமை யாக இருந்தது. 'வாத்தியாரின் தம்பியை வாசு எப்படியோ சிநேகம் செய்து கொண்டானே! அந்தப் பாக்கியம் நமக்குக் கிடைக்கவில்லையே!' என்று வாசு வின் பேரில் பொறுமைப்பட்டார்கள்.

பள்ளிக்கூடம் விட்டதும் பரமன் தன் அண்ண னிடம் சென்றான்.

"அண்ணு! எனக்காகத் தேடாதீர்கள். நான் இந்த ஊரை ஒரு தடவை நன்ருகச் சுற்றிப் பார்த்துவிட்டு வந்துவிடுகிறேன்" என்ருன்.

"துணைக்கு யார் வருகிருர்கள்?" என்று கேட்டார் அண்ணு.

"நான் வாசுகூடப் போயிட்டு வரேன். என்ன வாசு, போவோமா?" என்ருன் பரமன். வாசுவுக்குப் பரமனின் நட்பை விடவும் முடியவில்லை; தன் தாயா ரின் சொல்லைத் தட்டவும் முடியவில்லை.

'அம்மா, நம்மை ஒருவரோடும் பழகக்கூடாது என்று சொல்லியிருக்கிருளே! இவனுடன் செல்வதைப் பார்த்தால் அம்மா நம்மைப்பற்றி என்ன நினைப்பாள்?' என்று குழம்பிக்கொண்டிருந்தான்.

"வா வாசு, போவோம்" என்று பரமன் அவன் கையைப்பற்றி அழைத்துச் சென்றபோது இயந்திர பொம்மை நடந்து போனல் எப்படிப் போகுமோ அப்படிச் சென்றுகொண்டிருந்தான்.

பரமனும் வாசுவும் மெதுவாக நடந்து சென்று ஊரையெல்லாம் சுற்றிப் பார்த்தனர். கடைசியில் இருவரும் மாந்தோப்பினருகில் வந்தனர்.

'அதோ அந்தக் குட்டை மரம்! நேற்று அதன் மறைவிலேதான் கந்தசாமியும் அவன் நண்பர்களும் பதுங்கிக் கொண்டிருந்தார்கள்' என்று நினைத்தவாறே தோப்பினுள் சென்றான் பரமன். வாசுவும் அவனுக்குப் பின்னால் சென்றான்.

குட்டை மரத்தின் கீழே இருந்த கடப்பைக் கல்லின் மேல் பரமனும் வாசுவும் உட்கார்ந்தார்கள். பரமன் திரும்பிப் பார்த்தபோது அந்தக் கடப்பைக்கல்லிற்குக் கீழே சிறு பள்ளம் ஒன்று காய்ந்த தழைகளால் மூடப் பட்டு இருந்தது. அதைப் பார்த்த உடனே அந்தப் பள்ளத்திற்குள் ஏதோ புதைத்து வைக்கப்பட்டிருக்க வேண்டும் என்று தீர்மானித்தவனாய், 'பரபர'வென்று பள்ளத்தை மூடியிருந்த தழைகளை அப்புறப்படுத்தினான் பரமன்.

பள்ளத்தில் நான்கைந்து மாங்காய்கள் இருந்தன. அவைகளை எடுத்து ஒவ்வொன்றாகக் கடப்பைக் கல்லின்மேல் வைத்தான். பிறகு, 'யார்' இவற்றை இங்கே புதைத்து வைத்திருப்பார்கள்?' என்ற எண்ணத்துடன் பரமன் சுற்றுமுற்றும் பார்த்துக் கொண்டிருக்கையில், "திருடன், திருடன்!" என்ற கூச்சல் கேட்டது.

# 3

மாந்தோப்பின் வெளியே கந்தசாமியும் அவன் நண்பர்களும் இருந்தார்கள்.

கந்தசாமியின் கூச்சலைக் கேட்டதும் அவ்வழி யாகச் சென்ற நான்கைந்து பேர் தடிகளுடன் மாந் தோப்பிற்குள் ஓடி வந்துவிட்டனர். எதிர்பாராத அந்த சம்பவத்தால் பரமன் திடுக்கிட்டுப் போய்விட்டான். ஆனாலும், தைரியத்தை விடவில்லை. கந்தசாமி தன்னை அவ்வளவு சீக்கிரத்தில் வலையில் மாட்டிவிடுவான் என்று அவன் நினைக்கவில்லை.

மாந்தோப்பினுள் நுழைந்தவர்கள் கந்தசாமியைப் பார்த்து, "எங்கே திருடன்? எங்கே திருடன்?" என்று கேட்டனர்.

"அதோ அந்தக் குட்டை மரத்தடியிலே ரெண்டு பேர் இருக்காங்களே, அவங்கதான் மரத்திலே இருந்து காய்களைப் பறிச்சிக்கிட்டு இருந்தாங்க" என்றான், கந்தசாமி.

"ஏய் திருட்டுப் பயல்களா! என்ன இது?" என்று தடிகளுடன் பரமனையும் வாசுவையும் அவர்கள் நெருங்கினர்.

வாசு வெலவெலத்துப் போய்விட்டான். அவன் கை கால்களெல்லாம் உதறல் எடுத்துவிட்டன. இரண்டு அடிகள் கொடுத்தால், "ஆமாம் நான்தான் பறித்தேன்" என்று உளறிவிடுவான் போலிருந்தது. அவனைப் பின்னுக்குத் தள்ளிவிட்டுப் பரமன் முன்னால் வந்தான்.

"ஐயா, நான் இந்த ஊருக்குப் புதிசு. தெரியாமல் இந்தத் தோப்பினுள் நுழைந்துவிட்டேன்!" என்றான்.

"தோப்பிற்குள் நுழைந்ததுதான் தெரியாமல் நுழைந்தாய். மாங்காய் பறிச்சது கூடவா தெரியாமல் செய்தாய்?" என்றான் முரடர்களில் ஒருவன்.

"நான் பறித்ததாக யார் சொன்னார்கள்?" என்றான் பரமன்.

"யார் சொல்லவேண்டும்? உன் கையிலிருக்கிற மாங்காய்கள் சொல்லுகிறதே!" என்றான் கந்தசாமி.

"நான் எடுத்ததை நீ பார்த்தாயா?" என்று கந்தசாமியைப் பார்த்துக் கேட்டான் பரமன்.

"என் கண்ணால் பார்த்தேன். நீ இந்தக் கடப்பைக் கல்லின்மேல் நின்றுகொண்டு ஒவ்வொரு மாங்காயாக..." என்றான் கந்தசாமி.

அவனுடன் இருந்த சுண்டெலியும் மாணிக்கமும், "ஆமாம், ஆமாம்" என்றார்கள்.

"ஐயா, இவன் சொல்வதை நன்றாகக் கேட்டுக் கொள்ளுங்கள்" என்று சொல்லிவிட்டு மீண்டும் கந்த

சாமியைப் பார்த்து, "கந்தசாமி, நான் பறிக்கும்போது தானே 'திருடன், திருடன்' என்று கத்திஞய்?" என்று வக்கீலைப் போலக் கேட்டான்.

"இல்லை. பறித்துக் கையில் வைத்திருக்கும் போது!" என்ருன் கந்தசாமி.

"சரி, நீ கூப்பிட்ட உடனே இவர்கள் ஓடிவந்தார் களா? இல்லை, நேரம் கழித்து வந்தார்களா?" என்ருன் பரமன்.

"நான் 'திருடன் திருடன்' என்று கத்திக்கொண் டிருக்கும்போதே இவர்கள் தடிக்கம்புகளுடன் ஓடி வந்தார்கள்."

"சரி, இவன் சொன்னதை நன்ருகக் கேட்டுக் கொள்ளுங்கள். முதலில் நான் மாங்காய் பறிக்கும் போது பார்த்ததாகக் கூறிஞன். பிறகு மாங்காயைப் பறித்துக் கையில் வைத்துக்கொண்டிருக்கும்போது பார்த்ததாகக் கூறிஞன். பார்த்த உடனே 'திருடன் திருடன்' என்று கூவியிருக்கிருன். நீங்களும் உடனே ஓடிவந்திருக்கிறீர்கள். நானும் கையில் மாங்காயுடன் கந்தசாமி சொல்லுகிற கடப்பைக் கல்லின்மேல் நின்று கொண்டிருக்கிறேன்.

ஆஞல், ஒரே ஒரு வித்தியாசம். இப்பொழுது பறித்ததாகச் சொல்லப்படும் மாங்காய் என் கையில் இல்லை. இது காலையில் பறித்ததோ, இல்லை, நேற்று பறித்ததோ என்னவோ? இப்பொழுது பறித்ததாயிருந் தால் மாங்காய்க் காம்பிலிருந்து பால் வடிந்துகொண் டிருக்கும். இதில் வடிந்திருக்கும் பால் நன்ருக உலர்ந் திருப்பதைப் பாருங்கள்" என்று வந்தவர்களுக்கு மாங்காய்களைக் காட்டிஞன் பரமன்.

"ஆமா தம்பி, இது இப்ப பறிச்ச காயில்லே. ஆமா, இது எப்படி உன் கைக்கு வந்தது?" என்ருன் முரடர்களில் ஒருவன்.

"கொஞ்ச நேரம் இங்கே உட்கார்ந்து பேசலாம் என்று இரண்டு பேரும் வந்தோம். இங்கே பள்ளத்தில் ஏதோ மூடி வைத்திருப்பதைப்போல் தெரிந்தது. தழை களை அப்புறப்படுத்திப் பார்த்தேன். அதற்குள் மாங் காய்கள் இருப்பது தெரிந்தது. எத்தனை இருக்கிறது என்று பார்த்துக்கொண்டிருக்கும்போதே நீங்கள் வந்து விட்டீர்கள். நான் சொல்லுவதில் நம்பிக்கையில்லா விட்டால் இதோ இந்தப் பள்ளத்தைப் பாருங்கள்" என்ருன் பரமன்.

வந்தவர்களும் பரமன் சொல்வதை உண்மை யென்று உணர்ந்து பரமனிடமிருந்து மாங்காய்களை வாங்கிக் கந்தசாமியிடம் கொடுத்துவிட்டு, "எவனே திருட்டுப் பய பறிச்சிப் புதைச்சி வச்சிருக்கான். நீ உங்கப்பாவிடம் சொல்லி மாந்தோப்புக்கு ஒரு நல்ல காவல்காரனைப் போடச் சொல்" என்று சொல்லி விட்டுச் சென்றனர்.

கந்தசாமிக்கு ஒரே அவமானமாகப் போய்விட்டது. பரமனை அவமானப்படுத்த நினைத்துத் தானே முகத் தில் கரியை வாரிப் பூசிக் கொண்டதை அறிந்து வெட்கித் தலை குனிந்தான்.

பரமனும் வாசுவும் அந்தத் தோப்பினுள் நுழைந் ததே தவறு என்ற எண்ணத்துடன் உடனே கிளம்பி விட்டார்கள். போகும்போது கந்தசாமியைப் பற்றி ஏதாவது சொல்வான் என்று வாசு எதிர்பார்த்தான். ஆனல், பரமன் வாயே திறக்கவில்லை.

"பரமு! இருட்டிவிட்டது. சீக்கிரம் வா! உன்னை வீட்டில் விட்டுவிட்டு நான் சீக்கிரமாக வீட்டுக்குப் போகவேண்டும்" என்ருன் வாசு.

"அப்பா அடிப்பார் என்று பயமா? நான் வந்து சொல்கிறேன். போதுமா?" என்ருன் பரமன். வாசுவின் கண்களிலிருந்து நீராக வழிந்துகொண்டிருந்தது.

"அப்பா இல்லையா? சரி அம்மா இருக்கிருங்க இல்லையா? அவங்ககிட்டே நானே வந்து என்னுலே தான் நீ வீட்டிற்கு வர நேரமாகிவிட்டதுன்னு சொல் றேன்" எனருன்.

"இல்லை, நீ என்கூட வராதே பரமு. என்னை ஒருத்தர் கூடவும் சேர்க்கூடாது என்று என் அம்மா சொல்லியிருக்கிருங்க" என்ருன் வாசு.

பரமன் சற்று நின்ருன். வாசுவின் முகத்தை நிமிர்த்திஞன்.

"இதோ பார் வாசு, என்னை நன்ருகப் பார்த்துச் சொல். நான் என்ன திருடஞ? இல்லை கெட்டவஞ? என்னுடன் கூடச் சேர வேண்டாமென்று உன் அம்மா சொல்வாங்களா?" என்ருன் பரமன்.

"இல்லை பரமு, யாருடனும் சேரக் கூடாதுன்னு என் அம்மா சொல்லியிருக்கும்போது அவங்க பேச்சை மீறி நடந்தா அம்மாவுக்குக் கோபம் வரும். அதற்காகத்தான் நான் யாருடனும் சேருவதில்லை" என்ருன் வாசு.

"வாசு உன்னுடைய நடத்தையே பெரிய புதிரா யிருக்குது. உன் அம்மா ஏன் உன்னை ஒருவருடனும் சேரக்கூடாது என்று கண்டித்து வைத்திருக்கவேண்

டும் என்று எனக்குப் புரியவில்லை. நானே உன் அம்மா வைப் பார்த்துக் கேட்கிறேன்'' என்றான் பரமன்.

''வேண்டாம் பரமு, உன் காலில் வேண்டுமானாலும் விழுகிறேன். தயவுசெய்து என் வீட்டுக்கு வராதே! நாம் வெளியிலேயே சிநேகிதர்களா இருப்போம்'' என்றான் வாசு.

''வாசு, சுத்த கோழையாக இருக்கிறாயே! சரி, சரி உன் விருப்பம் போலவே நான் உன் வீட்டுக்குள் வர வில்லை. வெளியிலிருந்தே உன் வீட்டைப் பார்த்து விட்டுப் போய்விடுகிறேன். உன் அம்மா வீதியில் இருந்தால் நான் தூரத்திலேயே விடை பெற்றுக்கொள் கிறேன். என்ன சரிதானே?'' என்றான் பரமன்.

வாசு அரை மனத்துடன் அவனுடைய யோசனைக குச் சம்மதம் தெரிவித்தான். வீடு நெருங்க நெருங்க அவனுக்குப் பயமாகவே இருந்தது! 'எங்கே அம்மா கோபத்துடன் தன்னை எதிர்பார்த்துக்கொண்டு வீதியி லேயே நின்றுகொண்டிருப்பாளோ?' என்று பயந்தான். ஆனால், அவன் நினைத்த மாதிரி வீதியில் அம்மா இல்லை. 'அப்பாடா! பரமனுடன் நான் வந்ததை அம்மா பார்க்கவில்லை. அதுவரைக்கும் நல்லதுதான்!' ஆனால், 'இந்நேரம் எங்கே சென்றிருந்தாய்?' என்று கேட்டால் 'என்ன சொல்வது?' என்று சிறிது கவலைப் பட்டான். 'பள்ளிக்கூடத்திலேயே நேரமாகிவிட்டது என்று சொல்வோம்' என்று நினைத்தபடியே வீட்டை நோக்கி வந்துகொண்டிருந்தான்.

வீட்டினருகில் வந்ததும், தலையை ஆட்டிப் போய் வருவதாகப் பரமனுக்குச் சைகை மூலம் தெரிவித் தான் வாசு. பரமன் பதிலுக்கு ஏதோ சொல்ல வாயைத்

திறந்தான். வாசு வாயின்மேல் விரலை வைத்து அவனைப் பேசாமல் போகும்படி சைகை காட்டினான்.

பரமனும், 'உலகத்தில் இல்லாத புதிராயிருக்கிறனே இந்த வாசு! அம்மாவுக்காக இவன் ஏன் இப்படிப் பயப்படுகிறன்? இவன் அம்மாதான் இவனை ஏன் ஒருவருடனும் பழகவொட்டாமல் கிணற்றுத் தவளையாக வளர்க்கிறர்கள்?' என்று நினைத்தபடியே சென்று கொண்டிருந்தான்.

அப்பொழுது, "பரமு, சீக்கிரம் வாயேன்! அம்மாவுக்கு ஆபத்து!" என்ற வாசுவின் குரல் கேட்டதும் அலறி அடித்துக்கொண்டு அவன் வீட்டுக்குள் போனான். அங்கே வாசுவின் அம்மா அடுப்பினருகில் கட்டையைப் போல் கிடந்தாள்.

வாசுவின் குரலைக் கேட்டுப் பக்கத்து வீட்டிலிருப்பவர்களும் வழியோடு போனவர்களும் "என்ன?



**என்ன?"** என்று பரபரப்புடன் வாசுவின் வீட்டிற்குள் நுழைந்தார்கள்.

அங்கே வாசுவின் அம்மா அடுப்பின் அருகில் மயக்கமாக விழுந்து கிடப்பதையும் அடுப்பில் சோறு கொதித்துக்கொண்டிருப்பதையும் கண்டார்கள்.

"நல்லவேளை, மயிரிழையில் தப்பினாங்க. கொஞ்சம் தவறி முன்புறம் விழுந்திருந்தால் அடுப்பின்மேல் தான் விழுந்திருப்பாங்க. கொதிக்கும் சோற்றுப் பானை மேலே விழுந்து உடம்பெல்லாம் வெந்து போயிருக்கும். புடவையில் தீப்பற்றி உயிருக்கே ஆபத்து ஏற்பட்டிருக்கும்" என்று வந்தவர்களில் ஒருவர் கூறினார்.

"சரி, சரி. எல்லோரும் கொஞ்சம் தள்ளி நில்லுங்க. தம்பி, கொஞ்சம் தண்ணீர் இருந்தா கொண்டு **வா!"** என்று வாசுவைப் பார்த்து ஒருவர் கேட்டார்.



வாசு ஒரு குவளையில் தண்ணீர் கொண்டுவந்து கொடுத்தான். அவன் முகமெல்லாம் வியர்த்துக் கொண்டிருந்தது. கைகால்கள் எல்லாம் நடுங்கிக் கொண்டிருந்தன.

“பயப்படாதே வாசு! அம்மாவுக்கு ஒன்றுமில்லே. மயக்கமாக இருக்கிறுங்க. அவ்வளவுதான். கொஞ்சம் நேரத்திலே கண்விழித்திடுவாங்க” என்று வாசுவுக்கு ஆறுதல் கூறினுன், பரமன்.

வாசுவிடமிருந்து தண்ணீர்க் குவளையை வாங்கிய வர் அம்மாவின் முகத்தில் தண்ணீரை அடித்து எல்லோரையும் பார்த்து, “கொஞ்சம் தள்ளி நில்லுங்க. காற்று வரட்டும்” என்ருர்.

சற்று நேரம் கழித்து வாசுவின் அம்மா கண் விழித்துக்கொண்டாள். வாசுவின் முகம் சந்தோஷத் தால் மலர்ந்தது.

வாசுவின் அம்மா சுற்றுமுற்றும் பார்த்தாள். அவள் முகம் கடுகடுப்பாக மாறியது. தனக்கு உதவி செய்தவர்களுக்கு நன்றி தெரிவிப்பதற்குப் பதில், “எனக்கு ஒன்றும் இல்லே. நீங்களெல்லாம் உங்க வேலேயைப் பார்த்துக்கொண்டு போங்க” என்று சொன்னதும் எல்லோரும் திடுக்கிட்டுவிட்டனர்.

உதவி செய்ய வந்தவர்களின் முகம் சுண்டிப் போய்விட்டது. “வாங்க அண்ணே, போவோம். நல்ல துக்குக் காலமில்லே. நன்றி சொல்லாவிட்டாலும் பாதக மில்லே. இப்படியா விரட்டுவது?” என்று மனவருத்தத் துடன் கூறியவாறு நடந்தார் ஒருவர். அவரைத் தொடர்ந்து எல்லோரும் போய்விட்டார்கள். போகும்

போது 'இனி உண்மையாகவே இவர்களுக்கு ஆபத்து ஏற்பட்டால்கூட உதவக் கூடாது' என்ற தீர்மானத் துடன் சென்றுர்கள்.

பரமனும் தன் நண்பனுடைய அம்மாவின் போக்கு அறியாமல் விழித்துக் கொண்டிருந்தான்.

"நீ ஏன் நிக்கறே? உனக்கு வேறே தனியாகச் சொல்லணுமா? உம்... போ, போ!" என்று பரமனையும் விரட்டினுள் அம்மா.

தன் நண்பனை—உதவி செய்யும்படி தான் கூப் பிட்டதால் வந்த நண்பனை—இம்மாதிரி அம்மா விரட்டுவது வாசுவுக்குத் துளிக்கூடப் பிடிக்கவில்லை. ஆனுலும், அம்மாவின் எதிரில் பரமனுக்காகப் பரிந்து பேச அவனுக்குத் தைரியம் இல்லை.

பரமன் மௌனமாக வெளியேறினுன். வாசு வருத் தத்துடன் அவனையே பார்த்துக்கொண்டிருந்தான். அந்தப் பார்வையில், 'பரமு என்னை மன்னித்துவிடு; உன்னை நான் வேண்டுமென்றே அவமானப்படுத்தக் கூப்பிடவில்லை' என்று கெஞ்சுவதைப் போலிருந்தது.

எல்லோரும் போன பிறகு, "பள்ளிக்கூடத்தி லிருந்து இப்பத்தான் வந்தாயா?" என்று கோபமாக வாசுவைக் கேட்டாள் அம்மா.

"ஆம்" என்று சொல்வதற்கு அறிகுறியாகத் தலையை ஆட்டினுன் வாசு.

"நான் உனக்கு எத்தனை தடவை சொல்லியிருக் கிறேன், பள்ளிக்கூடம் விட்டதும் நேரே வீட்டுக்கு வந்துவிடு என்று. இந்நேரம் எங்கே போயிருந்தாய் ?" என்று கோபத்துடன் வாசுவை நெருங்கினுள் அம்மா.

வீட்டுக்குள் நுழையும்போது நேரமானதற்கு அம்மாவிடம் ஏதாவது பொய்க் காரணம் சொல்லித் தப்பித்துக்கொள்ளலாம் என்ற நோக்கத்துடன்தான் நுழைந்தான். ஆனல், சட்டென்று அவனுக்கு எந்தக் காரணமும் பொருத்தமாகத் தோன்றவில்லை. சொன்னலும் அம்மா நம்பமாட்டாள். அப்பொழுது உதைதான் கிடைக்கும். 'அதற்கு உண்மையைச் சொல்லியே அம்மாவிடம் உதை வாங்கிக்கொள்வோம்' என்ற தீர்மானத்துடன் நின்ருன்.

"என்ன பேசாமல் இருக்கிறே? இந்நேரம் எங்கே ஊர் சுற்றப் போயிருந்தாய்?" என்று கோபமாகக் கேட்டாள் அம்மா.

"ஊர் சுற்றப் போகலே. இப்ப போனனே, அந்தப் பையனுக்கு ஊரைச் சுற்றிக் காண்பிக்கப் போயிருந்தேன்" என்ருன் வாசு.

"ஓஹோ, அவ்வளவு தூரத்திற்கு வந்துவிட்டாயா? உனக்கு நான் எத்தனை தடவை சொல்லியிருக்கிறேன், ஒருத்தருடனும் சேராதே என்று. இரு, இரு சொல்கிறேன்" என்று சொல்லியபடியே சுற்றுமுற்றும் திரும்பி எதையோ தேடிக்கொண்டிருந்தாள் அம்மா.

"இல்லே, அம்மா. அவன் புதிசா வந்திருக்கிற வாத்தியாரின் தம்பி. நான் பேசாமதான் வீட்டுக்கு வந்துகொண்டிருந்தேன். அவனகவே வலிய வந்து என்னை ஊரையெல்லாம் சுற்றிக் காட்டும்படி வாத்தியார் எதிரிலேயே சொன்னன். எனக்கு அவர் எதிரிலே 'முடியாது' என்று சொல்ல முடியவில்லை. அதனல்தான்..." என்று கண்களில் நீர் வழியச் சொன்னன் வாசு.

அவன் கண்களில் வழியும் கண்ணீரைக் கண்ட உடனே அம்மாவின் மனம் இளகிவிட்டது. அவனை அருகில் அணைத்து அவன் கண்களில் வழிந்த கண்ணீரைத் துடைத்தாள்.

''அழாதே வாசு; உன்னுடைய நன்மைக்காகத் தான்—உன்னுடைய நன்மை என்ன—நம்முடைய நன்மைக்காகத்தான் சொல்கிறேன். இனிமேலாவது என் பேச்சைக் கேட்பாயா?'' என்று துக்கம் தொண்டையை அடைக்கச் சொன்னாள் அம்மா.

''கேட்கிறேம்மா. ஆனால், நான் யாருடனும் சேராமல் ஒதுங்கி ஒதுங்கிப் போனாலும் பிள்ளைகள் சும்மாயிருக்க மாட்டேனென்கிறார்கள். அவர்களாகவே வலிய வந்து பேசுகிறார்கள். அவர்களுடன் பேசாவிட்டால் என்னைக் கேலி செய்கிறார்கள்'' என்று சோகக் குரலில் சொன்னான் வாசு.

''அவர்களுடன் சேர்ந்து பழகினால் உன்னை அவர்கள் கேலிதான் செய்வார்கள். அதைவிட இது எவ்வளவோ மேல். அந்தக் கேலியை உன்னால் தாங்கிக் கொள்ளவே முடியாது'' என்றாள் வாசுவின் அம்மா.

''அவர்களுடன் சேர்ந்து பழகினால் அவர்கள் ஏன் அம்மா என்னைக் கேலி செய்கிறார்கள்?'' என்று கேட்டான் வாசு.

''வாசு, இவ்வளவு நாட்களாக உனக்குச் சொல்லக்கூடாது என்று நினைத்தேன். ஆனால், சொல்லாமல் இருக்கமுடியவில்லை. நீ எல்லோருடனும் நன்றாகப் பழகுகிறாய் என்று வைத்துக்கொள். அப்பொழுது உன் சிநேகிதர்கள் உன்னைப்பற்றிப் பூரணமாகத் தெரிந்து கொள்ள முயற்சி செய்வார்கள்'' என்றாள் வாசுவின் தாய்.

“ஆமாம், அம்மா” என்றான் வாசு.

“உன்னைப்பற்றி உனக்கே சரியாகத் தெரியாத போது, அவர்களுக்கு என்ன நீ பதில் சொல்வாய்? ‘உன் அப்பா யார்? அவர் எங்கிருக்கிறார்? என்ன செய்கிறார்?’ என்றெல்லாம் கேள்விமேல் கேள்வி போட்டு உன்னைத் துளைத்துவிடுவார்கள், இல்லையா?” என்றாள் வாசுவின் அம்மா.

“ஆமாம், அம்மா; அவர்கள் கேட்கவேண்டிய கேள்வியை நானே கேட்கிறேன். என் அப்பா யார்? இப்பொழுது அவர் எங்கிருக்கிறார்? என்னையும் உன்னையும் அனாதைகளைப்போல் அலையவைத்துவிட்டு ஏன் போய்விட்டார்?” என்று அம்மாவைப் பார்த்துச் சரமாரியாகக் கேட்டான் வாசு.

“ஐயோ, என் கண்ணே; நான் எப்படி உன்னிடம் அதைச் சொல்வேனடா” என்று அழ ஆரம்பித்துவிட்டாள் அம்மா.

அம்மா அழுவதைக் கண்டதும் வாசுவுக்குத் துக்கம் பொங்கிக்கொண்டு வந்தது. ‘ஐயோ, அம்மா கவலைப்படுவதற்கு நாமல்லவா காரணம்? அம்மாவுக்கு வருத்தத்தைத் தரக்கூடிய சங்கதியைக் கேட்டு ஏன் அம்மாவின் மனசைப் புண்படுத்தினோம்?’ என்று வருத்தப்பட்டான்.

“நான் தெரியாமல் கேட்டுவிட்டேன். அழாதே, அம்மா!” என்று அம்மாவின் கண்களைத் துடைத்தான் வாசு.

“வாசு, தயவுசெய்து இனிமேல் உன் அப்பாவைப் பற்றி மட்டும் என்னிடம் ஒன்றும் கேட்காதே!” என்றாள் அம்மா.

வாசுவுக்கு ஒன்றுமே புரியவில்லை. அம்மா சொன்னதற்குச் சரியென்று தலையாட்டி விட்டானே தவிர, உள்ளுக்குள், ' நம் அப்பா யார்? அவர் ஏன் என்னையும் அம்மாவையும் வருத்தப்படும்படி விட்டுச் சென்றார்? அவர் எங்கிருந்தாலும் தேடிக் கண்டுபிடித்து வந்து அம்மாவின் துக்கத்தைப் போக்கவேண்டும்' என்று நினைத்துக்கொண்டான்.

அம்மா அடுப்படியில் வேலை பார்க்கச் சென்று விட்டாள். வாசு முகம் கைகாலெல்லாம் கழுவிக் கொண்டு படிப்பதற்காக உட்கார்ந்தான்.

"வாசு, உனக்காக எடுத்து வைத்திருந்த பலகாரம் அப்படியே இருக்கிறதே! அதை எடுத்துச் சாப்பிட்டு விட்டு அப்புறம் படி" என்றாள் அம்மா.

"வேண்டாம் அம்மா, பசியில்லை!" என்று சொல்லத்தான் வாயெடுத்தான் வாசு. அப்படிச் சொன்னால் அம்மா மேலும் அதிகமாக வருத்தப்படுவாளே என்று நினைத்து வேண்டா வெறுப்பாக எழுந்து சென்று பலகாரம் வைத்திருந்த கிண்ணத்தைக் கொண்டு வந்தான், வாசு.

அதில் இரண்டு போண்டாக்களும், இரண்டு முறுக்குகளும் இருந்தன. தினசரி அம்மா அவனுக்காக வைத்துவிட்டுப்போகிற பலகாரம்தான்.

அவன் அம்மா பலகாரம் சுட்டுப் பிழைப்பவள். அதிகாலையில் எழுந்து இட்டிலியும், பிறகு மசால் வடையும் சுடுவாள். வாசுவும் காலையில் எழுந்து அம்மாவுக்குக் கூடமாட ஒத்தாசை செய்வான்.

பலகாரமெல்லாம் செய்துமுடித்ததும் அந்த அதிகாலை வேளையிலேயே சாப்பாடும் செய்து வைக்கா-

விட்டு, "வாசு, சொன்னது ஞாபகமிருக்கட்டும்" என்று சொல்லியவாறே இட்டிலிக் கூடையைத் தூக்கிக் கொண்டு வியாபாரத்துக்குக் கிளம்பிவிடுவாள் அம்மா.

அம்மா போனபிறகு வாசு ஒன்பதரை மணிவரை வீட்டிலேயே பாடங்களைப் படித்துக்கொண்டும், வீட்டுப் பாடங்களை எழுதிக்கொண்டும் உட்கார்ந்திருப்பான். சில நேரங்களில் அவனுக்கு ஒன்றுமே வேலையிருக்காது. அப்போதெல்லாம் வீட்டைப் பூட்டிக் கொண்டு வெளியே சென்று வரலாமென்றுதான் நினைப்பான்.

வெளிப்பூட்டிற்கு இரண்டு சாவிகள் இருந்தன. ஒன்று அவனிடமும், ஒன்று அவன் அம்மாவிடமும் இருந்தது. வாசு ஒன்பதரை மணியானதும் தனக்காக அம்மா வைத்துவிட்டுப்போன சாப்பாட்டைச் சாப்பிட்டுவிட்டுக் கையில் பலகாரப் பொட்டலத்துடன் பள்ளிக்கூடத்துக்குக் கிளம்பிவிடுவான். வழியில் ஒருவருடனும் சேரமாட்டான். நேரே வீட்டை விட்டால் பள்ளிக்கூடத்தில் அவன் வகுப்புதான். அவன் இடத்தில் உட்கார்ந்துகொண்டு புத்தகங்களைப் புரட்டிக்கொண்டிருப்பான்.

காலையில் பள்ளிக்கூடம் போகிற வாசு திரும்பவும் மாலை பள்ளிக்கூடம் விட்டபிறகுதான் வீட்டிற்கு வருவான். அதற்குள் பக்கத்து ஊர்களில் காலைப் பலகார விற்பனையை முடித்துக்கொண்டு அம்மா பகல் பதினொரு மணிக்கு வீடு திரும்பியிருப்பாள்.

வீட்டுக்கு வந்ததும் அம்மா ஆர அமர உட்கார மாட்டாள். மீண்டும், மாலை விற்பனைக்காக மாவு அரைப்பதிலும், பலகாரம் செய்வதிலும் காலத்தைக்

கழிப்பாள். மாலை விற்பனைக்குப் பலகாரங்கள் செய்து முடித்ததும் வாசுவுக்காக, ஒரு கிண்ணத்தில் பலகாரங்கள் எடுத்துவைத்துவிட்டு மீண்டும் பக்கத்து ஊர்களுக்கு வியாபாரம் செய்யக் கிளம்பிவிடுவாள்.

வாசு பள்ளிக்கூடத்திலிருந்து திரும்பும்போது அம்மா வந்திருக்கமாட்டாள். புத்தகப் பையை வைத்துவிட்டு, முகம் கை காலெல்லாம் கழுவிக்கொள்வான். அவனுக்காக அம்மா வைத்துவிட்டுப் போயிருக்கும் பலகாரங்களைச் சாப்பிட்டுவிட்டுப் புத்தகப் பையுடன் தெருத் திண்ணைக்கு வந்துவிடுவான்.

அம்மா இரவு ஏழுமணிக்குமேல்தான் வீடு திரும்புவாள். அதற்குப் பிறகு சமையல் செய்துவிட்டு வாசுவைச் சாப்பிடக் கூப்பிடுவாள்.

அன்று ஒரு நாள்தான் வாசு அம்மா வந்தபிறகு மிகவும் தாமதமாக வீட்டுக்கு வந்திருக்கிறன். 'நாம் வந்தபோது அம்மா மயக்கமாக இருந்தாளே! என்ன காரணத்திஞல் அம்மாவுக்கு மயக்கம் வந்தது? இதைக் கேட்கவே மறந்துவிட்டோமே!' என்று நினைத்த வாசு மெதுவாக அம்மாவிடம் சென்றுன். "அம்மா!" என்று அன்பாகக் கூப்பிட்டான்.

மாவு அரைத்துக்கொண்டிருந்த அம்மா மாவு அரைப்பதை நிறுத்திவிட்டு, "என்ன வாசு, என்ன வேண்டும்?" என்று கேட்டாள்.

"ஒன்றுமில்லையம்மா. நான் வந்தபோது மயக்கமாக இருந்தாயே, உனக்கு என்ன அம்மா உடம்பு?"

"எனக்கா? எனக்கு ஒன்றுமில்லையடா கண்ணே! அடுப்பு எரியவில்லை. ஊதினேன். புகை தாளவில்லை. மயக்கம் வந்துவிட்டது. அவ்வளவுதான். வேறு ஒன்றுமில்லை!" என்றாள்.

"இல்லையம்மா, எதற்கும் வைத்தியரிடம் உடம்பைக் காட்டுவதுதான் நல்லது" என்றான், வாசு.

"அட, பைத்தியமே! என் உடம்புக்கு என்னடா வந்துவிட்டது? ஒன்றும் இல்லை. நீ போய்ப் படி" என்றாள், வாசுவின் அம்மா.

வாசு அரை மனசுடன்தான் சென்றான். புத்தகங்களைப் பிரித்து வைத்துக்கொண்டிருந்தானே தவிர, அவன் மனம் படிப்பில் ஓடவில்லை. 'அம்மா ஏன் இப்படி மாடாக உழைக்க வேண்டும்? பலகார விற்பனையில் கிடைக்கும் லாபம் நம் தேவைக்கு அதிகமாகவே இருக்கும். அப்படியிருக்க ஏன் அம்மா இப்படி இரவு பகல் பாராமல் உழைத்து உழைத்து உருக்குலைய வேண்டும்? உடம்புக்கு ஒன்றும் இல்லை என்று அம்மா பொய் சொல்லுகிறாள். அம்மா அதிகமாக உழைப்பதால்தான் இம்மாதிரி மயக்கம் வந்திருக்கிறது. இப்படி உடம்பைக் கெடுத்துக்கொண்டு ஏன் அப்படிப் பணம் சம்பாதிக்க வேண்டும்? அதைவிடப் பட்டினி கிடப்பது எவ்வளவோ மேல்'—இவ்வாறு பலவாறாக நினைத்துக்கொண்டிருந்தான், வாசு.

திடீரென்று அவன் சிந்தனை அவன் அப்பாவைப் பற்றித் திரும்பியது.

'நம் அப்பா யார்? இப்பொழுது அவர் எங்கே இருக்கிறார்? ஏன் அவர் நம்மைவிட்டுச் சென்றார்?'

என்று பல கேள்விகள் அவன் மனத்தில் ஒன்றன்பின் ஒன்ருக எழுந்தன.

'அம்மாவோ அப்பாவைப்பற்றி ஒன்றுமே சொல்ல மாட்டேனென்கிருள். யாரையாவது விசாரித்துப் பார்க்கலாமென்ருல் அதற்கும் வழியில்லை. என்ன காரணத்திஞலோ அம்மா எந்த ஊரிலும் ஒரு வருஷத் திற்குமேல் நிலையாகத் தங்குவதில்லை. என்னுடைய படிப்புமட்டும் இல்லாதிருந்தால் மாதத்திற்கு ஓர் ஊர் கூட மாறியிருப்பாள்.'

'இதற்குமுன் எந்த ஊரில் இருந்தோம்? சங்கர புரத்தில். அங்கு நம்முடன் அப்பா இல்லை. அதற்கு முன் சேரனூர்......அங்கு இருந்தாரா? அங்கும் இல்லையே!'

ஹா! அவனுக்கு ஞாபகம் வந்துவிட்டது! தங்க புரத்தில் அவனுடன் அவன் அப்பா இருந்ததாக ஞாபகம். ஆனுல், அவருடைய முகம்கூட அவ னுக்குச் சரியாக நினைவு இல்லை.

அப்பொழுது அவனுக்கு மூன்று அல்லது நான்கு வயது இருக்கும். ஒரு தடவை அவனை அப்பா ஏதோ திருவிழாவிற்குக் கூட்டிப்போயிருந்தது இலேசாக ஞாபகம் வந்தது. அப்பா அவனை ரங்கராட்டினம் சுற்றுமிடத்திற்குக் கூட்டிச் சென்ருர். ஒரு குதிரைப் பொம்மையின்மேல் அவனை உட்கார வைத்தார். ரங்க ராட்டினம் சுற்ற ஆரம்பித்ததும் வாசு பயத்திஞல் 'ஓ'வென்று அழுதிருக்கிருன்.

அதற்குமேல் அவனுக்கு எந்தச் சம்பவமும் நினை வுக்கு வரவில்லை.

'எப்படியாவது அப்பாவைத் தேடிக் கண்டு பிடித்துக் கூட்டிவர வேண்டும். அப்பொழுதுதான் அம்மா சந்தோஷமாக இருப்பாள்' என்று நினைத் தான், வாசு.

அப்பாவைப்பற்றி எந்தவிதமான துப்பும் கிடைக் காமல், அவர் பெயர் உருவம் இவைகளைக்கூடச் சரிவரத் தெரிந்துகொள்ளாமல் எப்படி அவனால் அப்பா வைத் தேடிக் கண்டுபிடிக்க முடியும்?

திடீரென்று அவனுக்கு ஒரு யோசனை உதித்தது. 'ஆ, அப்படித்தான் செய்யவேண்டும்' என்று நினைத் துக்கொண்டிருக்கையில், அம்மா, "சாப்பிடவா, வாசு!" என்று கூப்பிட்டாள்.

அத்துடன் அவன் சிந்தனையும் சிலந்தி வலையைப் போல் பட்டென்று அறுந்தது!

# 4

"ஒரு உப்பு வியாபாரியிடம் ஒரு கழுதை இருந்தது. அந்த வியாபாரி அடுத்த ஊரிலிருந்து உப்பு மூட்டைகளை ஏற்றிக்கொண்டு வந்து தன் ஊரில் வியாபாரம் செய்வான். வழியில் ஓர் ஆறு. ஆற்றைக் கடந்துதான் வியாபாரியும் கழுதையும் அவன் ஊருக்கு வரவேண்டும். ஒரு நாள் கழுதை ஆற்றில் நடக்கும் போது வழுக்கி விழுந்துவிட்டது. அப்பொழுது அதன் முதுகிலிருந்த உப்பு மூட்டைகளெல்லாம் கரைந்து விட்டன. கரைக்கு வந்ததும் முதுகில் பாரம் இல்லாமல் இலேசாக இருப்பதைக் கழுதை அறிந்தது. ஆற்றில் வழுக்கி விழுந்ததால் பாரம் குறைந்தது என்ற ரகசியத்தைக் கழுதை அறிந்துகொண்டது.

அடுத்த நாள் முதல் தினந்தோறும் ஆற்றைக் கடக்கும்போது வேண்டுமென்றே வழுக்கிவிழ ஆரம்பித்தது கழுதை.

வியாபாரி கழுதைக்குச் சரியான பாடம் கற்பிக்க வேண்டி, அன்றையத் தினம் மணல் மூட்டைகளை

அதன்மேல் ஏற்றினான். ஆற்றைக் கடக்கும்போது கழுதை வழக்கம்போல வழுக்கிவிழுந்தது. கரை ஏறியதும் ஈரமணல் மூட்டைகள் கழுத்தை இறுக்க, பாரம் தாளமுடியாமல் கழுதை அவதிப்பட்டது.''

* * *

இந்தக் கதையைச் சொல்லிவிட்டுப் புது ஆசிரியர் மாணவர்களின் முகத்தைப் பார்த்தார்.

பரமன் தன்னுடைய அண்ணா சொன்ன இந்தக் கதையை ஏற்கனவே படித்திருக்கிறான். ஆனாலும், அந்தக் கதை இப்பொழுது அண்ணாவின் வாய் மூலமாகக் கேட்க ரொம்பவும் நன்றாக இருந்தது.

''கந்தசாமி, இன்றைக்கும் உன் கை வலி சரியாக வில்லையா?'' என்றார், ஆசிரியர்.

''இல்லை, ஐயா'' என்றான் கந்தசாமி.

''வீட்டுப்பாடம் எழுதிக்கொண்டு வரச்சொன்னால் கைவலி என்று சாக்குச் சொல்கிறாய். ஆனால், மாந் தோப்பில் மாங்காய் அடிக்கவும், பறவைகளை அடித் துத் துன்புறுத்தவும் கை நன்றாக இருக்கிறதோ?'' என்று கேட்டார், ஆசிரியர்.

''இல்லை'' என்றானே தவிர, அவன் மனம் 'இதையெல்லாம் பற்றிப் பரமன்தான் தன் அண்ணாவிடம் கோள் மூட்டியிருப்பான்' என்று பரமனை மனத்திற் குள்ளாகவே கருவிக்கொண்டான்.

''நாளைய தினம் நீ எழுத வேண்டிய பாடங்கள் அவ்வளவையும் ஒன்றுகூட விடாமல் எழுதி எடுத்து வந்து காட்டவேண்டும். தவறினால் உன்னை வகுப் புக்கு வெளியே நிறுத்தி வைத்துவிடுவேன்'' என்று

சொல்லிவிட்டு மேற்கொண்டு பாடத்தை நடத்த ஆரம்பித்தார், ஆசிரியர்.

கந்தசாமி அப்பொழுதுகூடப் பாடத்தைச் சரி வரக் கவனிக்கவில்லை. தனக்காகவேதான் ஆசிரியர் கழுதைக் கதையைச் சொன்னாரோ என்று நினைத்தான். ஆனால், அவன் நினைத்தமாதிரி இல்லை. அவனுடைய பாடப் புத்தகத்தில் உள்ள ஒரு கதையைத் தான் அவர் விளக்கமாகக் கூறிக்கொண்டிருந்தார். அந்தச் சமயத்தில் அவருக்குக் கந்தசாமியின் நினைவு வந்தது. அவன் வீட்டுப் பாடங்கள் எழுதி வராமல் ஏமாற்றிவருவது அவர் நினைவுக்கு வந்தது. உடனே அவனைக் கண்டித்தார்.

இது கந்தசாமிக்கு ரொம்பவும் அவமானமாக இருந்தது. மாணவர்களின் எதிரே தன்னைக் கழுதை என்று சொல்லாமல் கதை சொல்லிவிட்டு நம்மைக் கண்டித்தாரே என்று வருத்தப்பட்டான்.

இவ்வளவுக்கும் அந்தப் பரமன்தான் காரணம். அன்றையத் தினம் மாந்தோப்பில் அவனையும் வாசுவையும் 'மாங்காய்த் திருடர்கள்' என்று அவன் குற்றம் சாட்டியதையும், பரமன் தன்னுடைய சமயோசித புத்தியால் தானும் வாசுவும் குற்றவாளிகளல்ல என்று நிரூபித்ததும் அவன் நினைவுக்கு வந்தது. அதற்குப் பிறகு கந்தசாமி ரொம்பவும் பயந்துகொண்டுதான் இருந்தான். வாசுவைப்பற்றி அவனுக்குக் கவலை இல்லை. மாந்தோப்பில் நடந்த சம்பவத்தைப்பற்றி அவன் ஒருவரிடமும் மூச்சுவிடமாட்டான். ஆனால், பரமன் இதைத் தன் அண்ணாவிடம் சொல்லிவிட்டால் என்ன செய்வது என்று வருந்திக்கொண்டிருந்தான்.

அப்படியே புது வாத்தியார் கேட்டாலும், 'பரமனுடைய கையில் மாங்காய் இருந்தது. தூரத்தில் இருந்து பார்க்கும்போது தோப்பில் இருந்தவர்கள் யாரென்று தெரியவில்லை. யாரோ மாங்காயைப் பறிக்கிறார்கள் என்று நினைத்து, 'திருடன் திருடன்,' என்று கத்திவிட்டேன். அருகில் போய்ப் பார்க்கும்போதுதான் அங்கே நின்றுகொண்டிருந்தவர்கள் பரமனும் வாசுவும் என்று தெரியவந்தது' என்று சமாதானம் சொல்லிக் கொள்ளலாம் என்று நினைத்தான்.

ஆனால், அவன் பயந்தமாதிரி எதுவும் நடக்கவில்லை. மாந்தோப்பு சம்பவத்தைப்பற்றிப் பரமனின் அண்ணா கந்தசாமியை எதுவும் கேட்கவில்லை.

மாந்தோப்பு சம்பவத்தின்போது கந்தசாமியுடன் கூட இருந்த மாணிக்கமும் சுண்டெலியும்கூட எங்கே தங்களைப்பற்றியும் பரமன் தன் அண்ணாவிடம் சொல்லியிருப்பானோ என்று பயந்துகொண்டுதான் இருந்தார்கள்.

தினசரி மாந்தோப்பில் அவர்கள் சந்திக்கும்போது இதைப் பற்றித்தான் பேசுவார்கள்.

"ஏண்டா கந்தசாமி, அந்தப் பரமன் மறுபடியும் இந்தப் பக்கம் ஆளையே காணோமே, என்னடா!" என்றான் மாணிக்கம்.

"மறுபடி வருவானா இங்கே! சும்மா நின்னுக்கிட்டு இருந்தபோதே மாங்காய் திருடிட்டான்னு நம்ம கந்தசாமி சொல்லிட்டான். இப்ப வந்தா மரத்தையே பெயர்த்து எடுத்துப்போறான்னு சொல்லிடுவான்" என்றான் சுண்டெலி.

"என்ன சுண்டெலி, பேச்சு என்ன ஒரு மாதிரியா திரும்புது. என்ன, கிண்டல் பண்றயா?" என்ருன் கந்தசாமி.

"தப்பு, தப்பு, நானு, உன்னையா கிண்டல் பண்றேன்?" என்று கன்னத்தில் போட்டுக்கொண்டான் சுண்டெலி.

"என்ன இருந்தாலும் நீ அன்றைக்கு அப்படி அவசரப்பட்டு 'திருடன், திருடன்'னு கூச்சல் போட்டிருக்கக்கூடாது" என்ருன் மாணிக்கம்.

"என்னடா இது, கையிலே மாங்காய் வச்சிக்கிட்டு மரத்தடியிலே நிக்கிருன்? இதைவிட வேற நல்ல சந்தர்ப்பம் எப்ப கிடைக்கும் என்று நினைத்துதான் அப்படிக் கத்திவிட்டேன். ஆனுல்..." என்று கந்தசாமி சொல்லிக்கொண்டிருக்கும்போதே, "அருமையாகத் தப்பிவிட்டான்" என்ருன் சுண்டெலி.

"ஆமாம், போகட்டும். இன்னெரு தடவை அவனைச் சரியாக மாட்டிவைத்துவிடுகிறேன்" என்ருன் கந்தசாமி.

"அதுசரி, இப்ப அவன் தன் அண்ணுவிடம் நம்மைப்பற்றிக் கூறி உன்னையும் எங்களையும் மாட்டி வைத்து விடாமலிருக்கவேண்டுமே!" என்ருன் சுண்டெலி.

"இதுவரைக்கும் ஒன்றும் காணும். இனிமேல் தான் நம்மை மாட்டிவிடப்போகிருனு? அப்படித்தான் நடந்தாலும் நான்தான் சொல்லிவிட்டேனே ஒரே பதில்; 'மாந்தோப்பில் இருந்தது யார் என்று எனக்குத் தெரியாது. கையில் மாங்காயுடன் நின்று கொண்டிருப்பதைப் பார்த்து மாமரத்தில் இருந்து பறித்துவிட்டார்

களோ என்று நினைத்துக்கொண்டுதான் கூவினேன்' என்று சொல்வேன்" என்றான் கந்தசாமி.

"பரவாயில்லை. வக்கீல் வைத்துச் சொல்லிக்கொடுத்ததைப் போலக் குரங்குப் பிடியாகச் சொன்னதையே திரும்பத் திரும்பச் சொல்கிறாயே! எங்கே, எங்களையெல்லாம் காட்டிக்கொடுத்துவிட்டு நீ மட்டும் தப்பித்துக்கொள்வாயோ என்று பார்த்தேன். பரவாயில்லை" என்றான் சுண்டெலி.

அடுத்த பீரியடு ஆரம்பமாவதற்கு அறிகுறியாக மணி அடித்தது. ஆசிரியர் வகுப்பறையை விட்டு வெளியே சென்றார். அடுத்த பீரியடு கணக்கு. கணக்கு வாத்தியார் ரொம்பவும் கோபக்காரர். உள்ளே நுழைந்ததும் மாணவர்களின்பேரில் பார்வையை ஓட்டினார் எல்லா மாணவர்களும் எழுந்து நின்று ஆசிரியருக்கு மரியாதை தெரிவித்துக்கொண்டிருந்தார்கள். ஆனால்,



கந்தசாமிக்கு மணி அடித்ததோ, கணக்கு வாத்தியார் வந்ததோ ஒன்றும் தெரியாது. அவன் பாட்டுக்குத் தலையைத் தொங்கப்போட்டுக்கொண்டு பரமனின் அண்ணு சொன்ன கழுதைக் கதையையே நினைத்துக் கொண்டிருந்தான்.

'அந்தச் சோம்பேறிக் கழுதை உப்புமூட்டை சுமக்கப் பயந்துகொண்டு ஈரமணல் மூட்டையைச் சுமந்து சென்றதே, அதைப்போலத்தானே ஆகிவிட்டது நம்நிலையும்' என்று வருத்தப்பட்டுக்கொண்டான்.

"ஐயா, கவண்கல் கந்தசாமியாரே! இங்கே கொஞ்சம் வரமுடியுமா?" என்ற கணக்கு வாத்தியாரின் குரலைக் கேட்டதும்தான் கந்தசாமியின் சிந்தனை கலைந்தது.

"என்னையா சார்?" என்று எழுந்து நின்று திகைப்புடன் கேட்டான்.

"ஆமாம், தங்களைத் தான். தங்களுக்கு வரக் கஷ்டமாக இருந்தால் நான் தாங்கள் இருக்கும் இடத்திற்கு வரட்டுமா?" என்று மிகவும் மரியாதையாகச் சொன்னவர், குரலை உயர்த்திக்கொண்டே போய் "என்னடா, கூப்பிடக் கூப்பிட மரம் மாதிரி நிற்கிருய்?" என்று இடி இடிப்பதைப்போல் கர்ஜித்தார்.



கந்தசாமி குற்றவாளியைப்போல் எழுந்து அவர் அருகில் சென்றான்.

“பெரியவர் ரொம்ப சுவாரசியமான தூக்கத்தில் இருந்திருப்பார். அனாவசியமாகக் கலைத்துவிட்டேன்” என்றார் கணக்கு வாத்தியார்.

“இல்லை, சார்!” என்றான் கந்தசாமி.

“அப்படியானால் நான் வந்தது தெரிந்தும்கூட வேண்டுமென்றே எழுந்திருக்காமல் உட்கார்ந்திருந்தாயா?”

“இல்லை, சார்!”

“என்ன இல்லை சார், நொள்ளை சார்! நீ வெளியே போய் நில்லு” என்று உருமிவிட்டுப் பாடம் நடத்த ஆரம்பித்தார் கணக்கு வாத்தியார்.

வகுப்பின் வெளியே நின்றுகொண்டு குரோதத்துடன் பரமனையே பார்த்துக்கொண்டிருந்தான் கந்தசாமி. இவ்வளவுக்கும் பரமன்தான் காரணம் என்ற தப்பெண்ணம் அவன் மனத்தில் தோன்றியது. பரமனை மனத்திற்குள் சபித்தபடியே அவன் நின்றுகொண்டிருந்தான்.

பரமனோ கந்தசாமியின் நிலையைக் கண்டு பரிதாபப்பட்டான். ‘ஏன் இவன் இப்படி வகுப்பில் பாடங்களைக் கவனிக்காமல் இருக்கிறான்?’ என்று அவனுக்காக அனுதாபப்பட்டான்.

மாந்தோப்பில் தன்னையும் வாசுவையும் அவன் ‘மாங்காய்த் திருடர்கள்’ என்று வீண் பழி சுமத்தியதை அன்றையத் தினமே மறந்துவிட்டான். கந்தசாமியிடம் சிநேகமாக இருக்கவேண்டும் என்று எத்தனையோ

தடவை அவனுகவே வலுவில் சென்று பேச முயற்சி செய்தான். அப்பொழுதெல்லாம் கந்தசாமி அவனே ஒரு விரோதியைப்போல் பாவித்து முகம் கொடுத்துப் பேசாமல் சென்றுவிட்டான்.

கந்தசாமிதான் ஏதோ தன் பேரில் கொண்டுள்ள தப்பெண்ணத்திஞல் தன்னுடன் பழகாமல் விலகிச் சென்ருன். ஆனுல், இந்த வாசுவுக்கு என்ன வந்தது ?

அன்றையத் தினம் அவன் அம்மா மயக்கமாகி இருந்தபோது, அவனுடன் சென்ருனே அதுதான் கடைசித் தடவை. அதற்குப் பிறகு வாசு பரமனைக் கண்டும் காணுதவனைப்போல் சென்றுவிட்டான். பரமன் தானுகச் சென்று வலியப் பேசிஞன்.

"பரமு, என்னை மன்னித்துவிடு! இனிமேல் என்னுடன் பேசாதே!" என்று சொல்லிவிட்டுப் போய் விட்டான்.

'இந்த வாசு என்ன பெரிய புதிராயிருக்கிருனே. இவனைவிடப் பெரிய புதிர் இவனுடைய அம்மாதான்! தன் மகன் ஒருவருடனும் பழகாமல் கிணற்றுத் தவளை யாக வளரவேண்டுமென்று எந்தத் தாயாவது விரும்பு வாளா?' என்று நினைத்துக்கொண்டிருந்தான் பரமன்.

கணக்கு ஆசிரியர் அவனையும் வாசுவையும் உற்றுப்பார்ப்பதைக் கவனித்துப் பாடங்களைக் கவனிக்க ஆரம்பித்தான் பரமன்.

ஆனுல், வாசுவின் சிந்தனைமட்டும் கலையவில்லை. அடிக்கடி சட்டைப் பையைத் தொட்டுப் பார்த்துக் கொண்டான். அதில் 'கல கல'வென்று சில்லறைக் காசுகள் உருண்டுகொண்டிருந்தன.

'இன்னும் கால் ரூபாய் சேர்த்துவிட்டால் அப்புறம் தங்கபுரம்தான். அங்கேபோய் யாரையாவது விசாரித்தால் அப்பாவைப்பற்றி ஏதாவது தகவல் கிடைக்காதா?' என்று நினைத்துக்கொண்டிருந்தான், வாசு.

தங்கபுரம் போய்வரக் குறைந்தது மூன்று ரூபாயாவது ஆகும். இதுவரை இரண்டேமுக்கால் ரூபாய் சேர்த்துவிட்டான். அதற்காக அவன்பட்ட கஷ்டங்கள், அப்பப்பா, சொல்லிமுடியாது! அவனுடைய அம்மாவோ காசையே அவனுக்குக் காட்டமாட்டாள். அப்படியிருக்க அவன் இதுவரை எப்படி இரண்டேமுக்கால் ரூபாய் சேர்த்தான்?—

அது ஒரு சோகக் கதை!

தினந்தோறும் அவனுக்காக அம்மா வைத்துவிட்டுப்போகும் பலகாரங்களை ஒருவருக்கும் தெரியாமல் விற்றுப் பணமாக்கி வந்தான்.

வீட்டிலிருந்து கிளம்பும்போது அம்மா அவனுக்காகச் சமைத்து வைத்திருக்கும் சாப்பாட்டைச் சாப்பிட்டுவிட்டுப் பலகாரப் பொட்டலத்தை எடுத்துக்கொண்டு கடைத்தெருவுக்கு ஓடுவான். அங்கே வழக்கமாக ஒரு வண்டிக்காரனுக்குப் பலகாரப் பொட்டலத்தைக் கொடுப்பான். அவன் பன்னிரண்டு பைசா விட்டெறிவான். அதைப் பொறுக்கிக்கொண்டு நேரே பள்ளிக்கூடத்திற்குப் போய்விடுவான்.

பகல் உணவுக்காக மணியடிக்கும்போது எல்லா மாணவர்களும் சந்தோஷமாகச் சிரித்துப் பேசிக்கொண்டே உணவு அறைக்கும் ஓட்டலுக்கும் செல்லுவார்கள். ஆனால், வாசுமட்டும் வகுப்பின் மூலையில்

வைத்திருக்கும் பானையிலிருந்து இரண்டு குவளைத் தண்ணீர் எடுத்துக் குடித்துவிட்டுப் பேசாமல் இருந்து விடுவான்.

பள்ளிக்கூடம் விட்டதும் அவசர அவசரமாக வீட்டுக்கு வருவான். அங்கே கிண்ணத்தில் அவனுக் காக அம்மா வைத்துவிட்டுப்போயிருக்கும் பலகாரங் களை எடுத்துச் சென்று மீண்டும் வண்டியோட்டியிடம் விற்றுவிடுவான். வீட்டிற்கு வந்ததும் மாலைப் பல காரத்திற்குப் பதில் இரண்டு குவளைத் தண்ணீர்! அவ் வளவுதான்! அத்துடன் அம்மா இரவு கூப்பிட்டுச் சாதம் போடுகிறவரை பட்டினிதான்!

எப்படியோ அம்மாவுக்குத் தெரியாமல், அவள் கண்களுக்குப் படாமல் காசை ஒளித்து வைத்திருந் தான்.

'ஒருமுறை தங்கபுரம் போய் வந்துவிட்டால் அப்பாவைப் பற்றிய தகவல் பூராவும் கிடைக்கும். உடனே எப்படியாவது அப்பாவைத் தேடிக் கண்டு பிடித்துக் கூட்டிக்கொண்டு வந்துவிட்டால், அம்மா இப்படியெல்லாம் கஷ்டப்படமாட்டாள் அல்லவா?' என்று நினைத்தான், வாசு.

திடீரென்று அவனுக்கு ஒரு சந்தேகம் வந்து விட்டது. அம்மாவுக்குத் தெரியாமல் அவன் தங்க புரம் போய் வருவது என்பது முடியாத காரியம். அவனுக்குப் பதில் யார் தங்கபுரம் போய் அவ்வளவு அக்கறையாக அவன் அப்பாவைப்பற்றி விசாரித்துக் கொண்டு வரமுடியும்? 'ஏன் நம் பரமன் இருக் கிறானே! வீட்டில் அவனுக்கு நம்மைப்போல் அவ்வளவு கட்டுப்பாடுகள் கிடையாது. எங்கு வேண்டுமானாலும்

போகலாம்; யாருடனும் பேசலாம். அவனிடம் நம் கவலையைக் கூறி உதவி கோரினால் நிச்சயம் நமக்கு உதவி செய்வான். ஆனால், இத்தனை நாட்களாக இல் லாமல் இன்றைக்கு எப்படி நாமாக அவனிடம் சென்று வலியப் பேசுவது?' என்று பலவாருகக் குழம்பிக் கொண்டிருந்தான், வாசு.

"ஒரு புத்தக வியாபாரி 1250 ரூபாய் மதிப்புள்ள புத்தகங்களை 20% வீதமும், 1500 மதிப்புள்ள புத்த கங்களை 30% வீதமும் வாங்கினால் மொத்தம் எவ் வளவு தொகை செலுத்தியிருப்பான்? வாசு இந்தக் கணக்குக்கு என்ன விடை சொல்?" என்றார் கணக்கு ஆசிரியர்.

வாசு சிந்தனைச் சுழலிலிருந்து விடுபட்டான். ஆசிரியர் என்ன கணக்கு கேட்டார் என்றே அவ னுக்குப் புரியவில்லை. பேசாமலிருந்தான். ஆசிரியர் அவன் விடைக்காக மனத்திற்குள் கணக்குப் போடுவ தாக நினைத்துக்கொண்டிருந்தார்.

"என்ன, எவ்வளவு நேரம்? சீக்கிரம்?" என்றார், கணக்கு ஆசிரியர்.

வாசுவுக்கு ஒன்றுமே தோன்றவில்லை. 'நிச்சயம் கணக்கு ஆசிரியரிடம் நாம் திட்டு வாங்கப் போகி ரோம்' என்று பயத்துடன் நடுங்கிக்கொண்டிருந்தான்.

அவன் விழிப்பதைப் பார்த்துக் கந்தசாமி சந்தோஷமடைந்தான். 'நமக்குத் துணையாக வரப் போகிறான். வரட்டும். பெரிய அறிவாளிமாதிரி ஒருவ ருடனும் சேராமல் ஒதுங்கி ஒதுங்கிப்போனானே! இப் பொழுது விழிப்பதைப் பார்!' என்று நினைத்துக் கொண்டிருந்தான்.

நல்லவேளையாக அந்தச் சமயத்தில் அந்த பீரியடு முடிவதற்கு அறிகுறியாக மணியடிக்கவே, கணக்கு ஆசிரியர் வாசுவை மறந்துவிட்டு வேகவேகமாக அடுத்த வகுப்பிற்குச் சென்றார்.

பள்ளிக்கூடம் விட்டதும் வாசு பரமனின் வரவுக்காகத் தயங்கித் தயங்கி நின்றான். ஆனால், பரமனோ வாசுவைக் கவனிக்கவில்லை. நேரே ஆசிரியர்கள் அறைக்குச் சென்றான். அவனுடைய அண்ணாவைப் பார்த்து அவரிடம் ஏதோ பேசிக்கொண்டிருந்தான். கடைசியில் இருவரும் ஒன்றாக வீடு சென்றனர்.

பரமனிடம் தன் சங்கதியைச் சொல்ல இது சரியான சமயம் அல்ல என்று தீர்மானித்த வாசு ஏமாற்றத்துடன் வீடு திரும்பினான். என்றுமில்லாத திருநாளாக அன்றையத் தினம் அவன் அம்மா அவனுக்கு முன்னாலேயே வீட்டுக்கு வந்துவிட்டாள். வாசுவுக்கு ஒரே ஏமாற்றமாகப் போய்விட்டது. 'மாலைப் பலகாரத்தை எடுத்துச்சென்று விற்கமுடியாதபடியாகி விட்டதே!' என்று வருந்தினான்.

"ஏன் அம்மா இன்றைக்குச் சீக்கிரமாகவே வந்துவிட்டே? பலகாரமெல்லாம் விற்றுவிட்டதா?" என்றான்.

"இல்லை, வாசு! வழியில் மயக்கம் வரும்போலிருந்தது. சமாளித்துக்கொண்டு நேரே வீட்டுக்கு வந்துவிட்டேன்"

"நான் அன்றைக்கே சொல்லவில்லையா அம்மா! பேசாமல் வைத்தியரிடம் உடம்பைக் காட்டு என்றால்

இப்படி நோயை முற்றவைத்துக்கொள்கிறாயே, அம்மா?'' என்றான், வாசு.

''சுத்த பைத்தியமாயிருக்கிறாயே! என் உடம்புக்கு ஏதாவது இருந்தால்தானே நான் வைத்தியரிடம் போக வேண்டும்? வேலை செய்த களைப்பு. அவ்வளவுதான்! சரி, சரி, நீ கை காலெல்லாம் கழுவிக்கொண்டு பல காரம் சாப்பிடு'' என்றாள், அம்மா.

வாசு கைகாலெல்லாம் கழுவிக்கொண்டான். பல காரம் வைத்திருந்த கிண்ணத்தை எடுத்து வந்தான். அதிலிருந்த பலகாரங்களைச் சாப்பிடவே அவனுக்குப் பிடிக்கவில்லை. வழக்கமாக அவன் பலகாரம் கொடுத்து வரும் வண்டியோட்டி இன்றையத்தினமும் அவனைப் பசியுடன் எதிர்பார்த்துக்கொண்டிருப்பான்.

இதை நினைத்ததும் அவன் சாப்பிடும் போண்டா அவன் தொண்டையை அடைப்பது போலிருந்தது. விக்கல் எடுத்தது. பலகாரத்தை அப்படியே வைத்து விட்டுத் தண்ணீர் குடிப்பதற்காகப் பானையருகில் சென்றான். குவளையை எடுப்பதற்காகக் குனிந்தான்.

அப்பொழுது அவன் எதிர்பாராத சம்பவம் ஒன்று நடந்துவிட்டது. இத்தனை நாளும் அம்மாவுக்குத் தெரி யாமல் ஒளித்து வைத்திருந்த காசுகள் ஜேபியிலிருந்து 'கலகல'வென்று உருண்டோடின.

அதைக் கண்டதும் அம்மா திடுக்கிட்டுவிட்டாள். உருண்டு செல்லும் சில்லறைக் காசுகளையும், 'திரு திரு'வென்று திருடனைப்போல் விழித்துக்கொண்டிருக் கும் வாசுவையும் மாறி மாறிப் பார்த்த அம்மாவுக்குக் கோபம் பொங்கிக்கொண்டு வந்தது.

“ஏண்டா, வாசு! உனக்கு ஏது இவ்வளவு காசு? மரியாதையாக உண்மையைச் சொல்லிவிடு” என்று கோபத்துடன் கேட்டாள்.

வாசு எப்படி உண்மையைச் சொல்வான்? ‘அப்பாவைப்பற்றி அறிந்து வருவதற்காகப் பலகாரத்தை விற்றுப் பணமாக்கிச் சேர்த்தேன்’ என்று உண்மையைச் சொல்லமுடியுமா?

எந்த ரகசியத்தைத் தான் அறியக்கூடாது என்று அம்மா மறைத்து வைத்தாளோ, அதே ரகசியத்தைத் தான் அறிந்து வரப்போகிறேன் என்று அம்மாவிடம் சொல்லமுடியுமா?

“என்ன விழிக்கிறே? எங்கே திருடினே? உண்மையைச் சொல்லமாட்டே? இரு, இரு! அந்தத் திருட்டுக் கைகளுக்குச் சூடு வலித்தால்தான் புத்தி வரும்” என்று சொல்லியபடியே கரண்டிக் காம்பை எடுத்து அடுப்பில் போட்டாள் அம்மா.

# 5

**எ**வனோ ஒருவன் தேங்காய் பறிப்பதற்காகத் தென்னை மரத்தில் ஏறினான். அவன் ஏறிக்கொண்டிருப்பதை மரத்திற்குச் சொந்தக்காரன் பார்த்துவிட்டான்.

''யாரடா அது, திருட்டுப்பயலே! மரத்திலே எதற்காக ஏறினே?'' என்று கேட்டான்.

அதற்கு மரத்தில் ஏறினவன், ''கன்றுக்குட்டிக்குப் புல் பறிப்பதற்காக ஏறினேன்'' என்றானும்.

இதைக் கேட்டதும் மரத்திற்கு உரியவன், ''ஏண்டா முட்டாள், எங்கேயாவது தென்னை மரத்தில் புல் இருக்குமா?'' என்றான்.

''அது இல்லாததால்தான் இறங்குகிறேன்'' என்று சொல்லியபடியே ஓடிப்போய்விட்டான் அந்தத் திருடன்.

* * *

அம்மா 'கணகண'வென்று பழுக்கக் காய்ந்த கரண்டிக்காம்பை வாசுவின் அருகில் எடுத்து வந்து,

"அப்பனைப்போலத்தானே பிள்ளைக்கும் திருட்டுப்புத்தி இருக்கும்—சூடு வலிக்கிறவரைக்கும் நீ உண்மையைச் சொல்லமாட்டாய்? ஏது இந்தப் பணம்?" என்றாள்.

அப்பொழுது தென்னை மரத்தில் தேங்காய் பறிக்க ஏறியவன் சொன்னதைப்போல் பொருத்தமில்லாத பொய்யாகச் சொல்ல அவனால் முடியவில்லை. "உண்மையைச் சொல்லிவிடுகிறேன், அம்மா! நீ தினசரி எனக்குச் சாப்பிடக் கொடுத்த பலகாரங்களை யெல்லாம் விற்றுப் பணமாக்கி வந்தேன்" என்றான் வாசு.

அம்மா அவனைக் கூர்ந்து பார்த்தாள். அவன் சொல்வது உண்மையாக இருக்கும் என்றே அவளுக்குத் தோன்றியது. நாளுக்கு நாள் வாசு இளைத்து வருவதை அவள் பார்த்து வந்திருக்கிறாள். அப்போதெல்லாம், 'வளர்கிற வயசிலே இப்படித்தான் இருக்கும்' என்று தனக்கே சமாதானம் சொல்லிக்கொண்டாள். ஆனால், இன்றைக்கல்லவா அதன் உண்மைக் காரணம் தெரிந்தது.

'அவன் திருடவில்லை என்பதை ஒப்புக்கொள்ளலாம். ஆனால், இப்பொழுது அவனுக்குப் பணத்தேவை எதற்கு ஏற்பட்டது? ஏன் வயிற்றுக்குக்கூடச் சாப்பிடாமல் பட்டினி கிடந்து பணம் சேர்க்கிறான்? அப்படிச் சேர்க்கவேண்டிய அவசியம் என்ன?' என்று நினைத்தபடியே, "சரி, உனக்கு இப்ப எதற்காகப் பணம் தேவை?" என்று வாசுவைப் பார்த்துக் கேட்டாள் அம்மா.

இதற்கு வாசு என்ன பதில் சொல்லுவான்? "அப்பாவைப் பற்றித் தகவல் அறிந்து வரத் தங்கபுரம்

போகப்போகிறேன். அதற்குத்தான்'' என்று சொல்ல முடியுமா?

'சட்'டென்று அவனுக்கு ஒரு யோசனை உதித்தது.

''இல்லையம்மா, பள்ளிக்கூடத்திலே எல்லாப் பிள்ளைகளும் புதுச்சட்டை போட்டு வருகிறார்கள். அதைப்போல் நானும் ஒன்று வாங்கிக்கொள்ளலாம் என்றுதான்...'' என்று இழுத்தான் வாசு.

''அதுசரி, என்னிடம் சொன்னால் நான் வாங்கித் தரமாட்டேனா?'' என்றாள் அம்மா.

''உனக்குக் கஷ்டத்தைக் கொடுக்கவேண்டாம் என்று நானே பணம் சேர்த்து ஒன்று வாங்கிக்கொள்ள இருந்தேன்'' என்றான் வாசு.

அம்மா கரண்டிக்காம்பைத் தூக்கித் தூர எறிந்தாள். பழுக்கக் காய்ந்த அந்தக் கரண்டிக் காம்பு தண்ணீரில் விழுந்ததும் 'சொய்' என்றது. அம்மா வாசுவை அணைத்துக்கொண்டாள். அவன் தலை மயிரைக் கோதினாள்.

''அசட்டுப் பையண்டா, நீ! என்னைக் கேட்டால் நான் உனக்குப் புதுச்சட்டை வாங்கித் தரமாட்டேனா? இதற்காகவா இப்படி வயிற்றுக்கும் சாப்பிடாமல் பட்டினி கிடந்தாய்?'' என்று பரிவுடன் சொன்னாள் அம்மா.

வாசு பேசாமல் இருந்தான்..

''சரி, அந்தக் காசையெல்லாம் பொறுக்கி என்னிடம் கொடு. நாளைக்கு வரும்போது கடையிலிருந்து நானே உனக்கு ஒரு புதுச்சட்டை வாங்கி வந்து தருகிறேன்'' என்றாள் அம்மா.

அவனுடைய மனக்கோட்டைகள் எல்லாம் இடிந்து விழுந்தன. காசு பூராவையும் அம்மா எடுத்துக்கொண்டால் அவன் எப்படித் தங்கபுரம் போவான்? அப்பாவைப்பற்றி எப்படி விசாரிப்பான்?

அப்பாவைப்பற்றி நினைக்கும்போது அம்மா சொன்ன ஒரு வார்த்தை அவன் நினைவுக்கு வந்தது. 'அப்பனைப்போலத்தானே பிள்ளைக்கும் திருட்டுப் புத்தி இருக்கும்' என்று அம்மா சொன்னார்களே! 'அப்பொழுது அப்பா திருடரா? எங்கே திருடினார்? என்ன திருடினார்?'' என்று வாசுவின் உள்ளம் குழம்பிக்கொண்டிருந்தது.

எப்படியோ ஒன்று தங்கபுரம் போகாமலேயே அம்மாவின் வாய்மூலமாக அப்பாவைப்பற்றிய புதிர் ஒன்றுக்கு விடை தெரிந்தது. இதை வைத்துக் கொண்டு அவன் அப்பாவைக் கண்டுபிடித்துவிட முடியுமா?

படிக்கும்போதும், சாப்பிடும்போதும், தூங்கும் போதும் அப்பாவைப்பற்றிய விவரங்களை எப்படி அறிவது என்றே சிந்தித்துக்கொண்டிருந்தான் வாசு.

அடுத்த நாள் பள்ளிக்கூடம் விட்டதும் வாசு பரமனிடம் சென்றான்.

"பரமு, உன்னிடம் தனியாகச் சில விஷயங்கள் பேசவேண்டும். என்னுடன் பூங்காவுக்கு வருகிறாயா?'' என்றான், வாசு.

பரமனும் 'சரி' என்று ஒப்புக்கொண்டான். இருவரும் அவ்வூரில் உள்ள சிறுவர் பூங்காவிற்குச் சென்றார்கள். அந்தப் பூங்காவில் சிறுவர்கள் விளையாடக்

கூடிய ஏணி, ராட்டினம், ஊஞ்சல், வழுக்குமரம் முதலியவை இருந்தன. எல்லாச் சிறுவர்களும் உற்சாகத்துடன் விளையாடிக்கொண்டிருந்தனர்.

பரமனும் வாசுவும் ஒரு மரத்தின் நிழலில் தனியாக உட்கார்ந்துகொண்டார்கள். வாசு தன் கதை பூராவையும் அவனிடம் சொன்னான். முன் தினம் அம்மா சூடுபோட வந்தவரையில் சொன்னான். 'அப்பனைப் போலத்தானே பிள்ளைக்கும் திருட்டுப்புத்தி இருக்கும்' என்று அம்மா தன்னைத் திட்டியதையும் அவனிடம் கூறினான்.

பரமன் அவன் கதையைக் கேட்டு அவனுக்காக அனுதாபப்பட்டான். தன்னால் முடிந்த உதவிகளை அவனுக்குச் செய்வதாக வாக்களித்தான்.

"பரமு, தயவுசெய்து இந்த விஷயங்களை ஒருவரிடமும் சொல்லிவிடாதே!" என்றான் வாசு.

"பயப்படாதே! ஒருவரிடமும் சொல்லமாட்டேன். நீ சொன்னமாதிரி ஒரு தடவை நான் தங்கபுரம் போய் வந்து உன் அப்பாவைப் பற்றி ஏதாவது விவரம் அறியமுடிந்தால் அறிந்து வருகிறேன்" என்றான் பரமன்.

"எப்படியாவது கஷ்டப்பட்டுப் பணம் சேர்த்து வண்டிச் செலவுக்குக் கொடுத்துவிடுகிறேன். தயவு செய்து எனக்காக இந்த உதவியைச் செய்" என்றான் வாசு.

"நிச்சயம், கண்டிப்பாகச் செய்வேன்" என்றான் பரமன்.

"அப்ப, நான் வரட்டுமா, பரமு! நேற்றுபோல இன்றைக்கும் அம்மா சீக்கிரம் வந்திருந்தால் ஆபத்து.

நான் வருகிறேன். திரும்பவும் நாளைக்குச் சந்திப் போம்'' என்று பரமனின் பதிலைக்கூட எதிர்பாராமல் சென்றுவிட்டான், வாசு.

அப்பொழுது அவர்கள் உட்கார்ந்து பேசிக்கொண் டிருந்த மரத்தின் பின்னாலிருந்து மூன்று சிறுவர்கள் வேறுபுறம் நழுவிச்சென்று, சிறுவர்கள் கூட்டத்தில் மறைந்தனர்.

பரமன் மட்டும் வாசுவை நினைத்துப் பரிதாபப் பட்டான். அவனுக்காகத் தன்னால் முடிந்த உதவிகள் அனைத்தும் செய்யவேண்டும் என்று மனத்திற்குள் தீர்மானித்துக்கொண்டான்.

மணிக்கூண்டுக் கடிகாரம் ஆறுமுறை அடித்தது. இருள் இலேசாகப் பரவிக்கொண்டு வந்தது. பூங்காவி லிருந்த சிறுவர்கள் ஆடிக் களைத்து அவரவர் வீட்டுக் குச் சென்றனர்.

காவல்காரன் நினைவுபடுத்திய பிறகுதான் பரம னின் சிந்தனை கலைந்தது. மரத்தடியிலிருந்து எழுந்து வீட்டுக்குச் செல்லலானான்.

கொஞ்ச தூரம் சென்றதும் பாதை ஓரத்தில் ஜனக் கூட்டமாக இருந்தது. உள்ளே நுழைந்து பார்த்தான். அவனுக்குத் தூக்கிவாரிப் போட்டது! வாசுவின் அம்மா பாதை ஓரத்தில் மயக்கமாக விழுந்து கிடந் தாள். அவள் கொண்டுவந்திருந்த பலகாரக் கூடை ஒரு புறம் உருண்டு ஓடியிருந்தது. கூடையிலிருந்து ஒரு காகிதப் பை வெளியே விழுந்திருந்தது. அதில் ஒரு புதுச் சட்டை இருந்தது.

கூட்டத்தில் இருந்தவர்கள் அம்மாவின் நிலை யைக் கண்டு பரிதாபப்பட்டனர். சிலர் "வீடு எங்கே?"

என்று விசாரித்தனர். சிலர், "சோடா வாங்கி வா!" என்றனர். இந்த மாதிரியான சந்தர்ப்பத்தில் கூட்டத்தை நெருக்கிக்கொண்டு ஒருவன் உள்ளே நுழைந்தான். அம்மாவின் முகத்தைப் பார்த்ததும், "அட போங்கய்யா வேலையைப் பார்த்துக்கொண்டு! இந்த அம்மாவுக்கு உதவுவதற்குப் பதில் தெருவிலே போகிற பிச்சைக்காரனுக்கு உதவலாம்; நன்றி கெட்டவங்க!" என்று ஆத்திரத்துடன் திட்டினன்.

பரமன் அவன் முகத்தைக் கூர்ந்து பார்த்தான். முன் ஒரு தடவை வாசுவின் அம்மா, வீட்டில் மயக்கமாகி இருந்தபோது உதவி செய்வதற்காக ஓடி வந்தவர்களில் அவனும் ஒருவன். கண் விழித்ததும் உதவி செய்ய வந்தவர்களைத்தான், 'உங்க வேலையைப் பார்த்துக்கொண்டு போங்க' என்று வாசுவின் அம்மா விரட்டியடித்துவிட்டாளே !

அவன் பேச்சைக் கேட்ட கூட்டத்தாரும் உதவி செய்யும் எண்ணத்தை விட்டுவிட்டு ஒவ்வொருவராக நழுவிப்போனுர்கள். கடைசியில் பரமன் ஒருவன் மட்டுமே இருந்தான். அவன் இம்மாதிரி ஆபத்தான சமயத்தில் வாசுவின் அம்மாவை அங்கேயே விட்டுவரத் தயங்கினுன். உடனே அந்தப் பக்கமாகச் சென்று கொண்டிருந்த வண்டிக்காரன் ஒருவனைக் கூப்பிட்டான். அம்மாவை வண்டிக்காரன் உதவியுடன் தூக்கி வண்டியில் வைத்துக்கொண்டான். நேரே வாசுவின் வீட்டை நோக்கி வண்டியை விடச் சொன்னுன்.

அந்தச் சமயத்தில் வாசு திண்ணையின்மேல் உட்கார்ந்துகொண்டு புத்தகங்களைப் புரட்டிக்கொண்டிருந்தான். ஆனுல், அவன் மனம் படிப்பில் ஓடவில்லை.

அன்றையத் தினம் பரமனிடம் பூங்காவில் பேசி விட்டு வந்த பிறகு அவசர அவசரமாக வீட்டுக்கு வந்தான். தனக்காக அம்மா வைத்துவிட்டுப் போயி ருக்கும் பலகாரத்தை வண்டியோட்டிக்கு விற்பதற் காகக் கிண்ணத்தைத் திறந்தான். உள்ளே பார்த்ததும் அவனுக்குத் தூக்கிவாரிப் போட்டது.

உடைந்துபோன முறுக்குத் துண்டுகளும், விண்டு போன போண்டா துணுக்குகளுமாக இருந்தன. என்ன செய்வான், பாவம் !

என்னதான் பிட்டுப் பிட்டு சாப்பிடுவதாக இருந் தால்கூட பணம் கொடுத்து வாங்குகிறவர்கள் முழு சாக இருப்பதைத்தானே விரும்புவார்கள். அப்படி யிருக்க இந்த உடைந்த முறுக்குத் துண்டுகளையும், விண்டுபோன போண்டாக்களையும் வாசு எவ்வாறு விற்றுப் பணமாக்குவான்?

தலைவிதியே என்று வேண்டா வெறுப்பாக அவற் றைச் சாப்பிட்டு விட்டுப் புத்தகங்களை எடுத்துச் சென்று திண்ணைமேல் உட்கார்ந்தான் வாசு.

'தங்கபுரம் சென்றுவர பரமனுக்குப் பணம் தருவ தாகக் கூறினேமே; பணம் சேர்க்கவும் வழியில்லாத படி அம்மா செய்துவிட்டாளே! இப்பொழுது என்ன செய்வது?' என்று குழம்பியபடியே பக்கங்களைப் புரட்டிக்கொண்டிருந்தான், வாசு.

தன் வீட்டு எதிரில் ஒரு மாட்டு வண்டி வந்து நின்றபோதுதான் வாசுவின் சிந்தனை கலைந்தது. வண்டியிலிருந்து முதலில் பரமன் இறங்கினான்.

வாசுவுக்குத் தூக்கிவாரிப்போட்டது. 'என்னவோ ஏதோ?' என்று பயந்துகொண்டிருக்கையில் பரமன், "வாசு, படுக்கையை எடுத்துப் போடு" என்று சொல்

லியவாறே, அவனும் வண்டிக்காரனும் மயக்கமாகி இருந்த அம்மாவைத் தூக்கி வந்தனர்.

இதற்குள் வாசு படுக்கையை உதறிப்போட்டு விட்டுப் பரபரப்புடன் அம்மாவின் முகத்தையே பார்த்துக்கொண்டிருந்தான்.

"முகத்திலே கொஞ்சம் தண்ணீர் தெளி" என்றான் பரமன்.

வாசு தெளித்தான்.

கொஞ்ச நேரம் அம்மாவின் முகத்தையே உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தான். கைகால் ஒன்றும் அசைய வில்லை. கண்ணை விழிக்கவில்லை. வாசு அம்மாவின் மேல் விழுந்து 'கோ'வென்று கதறலானான். "பயப் படாதே வாசு! அம்மாவுக்கு ஒன்றுமில்லை!" என்று பரமன் ஆறுதல் கூறினான்.

அப்பொழுதும் வாசுவின் அழுகை ஓயவில்லை. அருகிலிருந்த வண்டிக்காரன் "தம்பீ, கொஞ்சம் கந்தல் துணி இருந்தால் கொடு" என்றான்.

வாசு கிழிந்த துணி ஒன்றை எடுத்து வந்து வண்டிக்காரனிடம் கொடுத்தான். உடனே வண்டிக் காரன் அந்தத் துணிக்கந்தையில் சிறிதளவு கிழித்துப் பக்கத்திலிருந்த விளக்கில் காட்டிக்கொளுத்தினான். கொளுத்திய துணியை அம்மாவின் மூக்கருகில் பிடித் தான். நெருப்புப் பிடித்த துணிக்கந்தையிலிருந்து புகை வந்துகொண்டிருந்தது. அந்தப் புகைநெடி தாளாமல் அம்மாவின் மயக்கம் சிறிது சிறிதாகத் தெளிந்தது. மெல்லக் கண்விழித்துப் பார்த்தாள். சுற்றுமுற்றும் பார்த்தாள். பக்கத்தில் வாசு கண் களில் நீர்வழிய நின்று கொண்டிருந்தான். அவனுக்குப்

பக்கத்தில் பரமன் நின்றுகொண்டிருந்தான். வண்டிக் காரன் அம்மாவுக்குப் புகை காட்டிய கந்தல் துணியை வெளியே எறிந்துவிட்டு வந்தான்.

"நான் எப்படி வீட்டுக்கு வந்தேன்? வரும்போது வழியிலேயே மயக்கம் வரும்போலிருந்தது. நானு கவே வந்தேனு? இல்லே, யாராவது என்னைக் கூட்டி வந்தார்களா?" என்ருள் அம்மா.

"இதோ இந்தப் பையன்தாம்மா வழியிலே மயக்க மாக விழுந்து கிடந்த உங்களை என் வண்டியில் ஏற்றிக் கூட்டி வந்தான். இவன் அந்த வழியாக வந்திராவிட்டால் பாவம், உங்களுக்கு ரொம்பவும் ஆபத்தாகியிருக்கும்" என்ருன், வண்டிக்காரன்.

பரமனை அம்மா கூர்ந்து பார்த்தாள். முன் ஒரு தடவை தான் வீட்டில் மயக்கமாக இருந்தபோது உதவி செய்ய வந்தவர்களுடன் அவனும் இருந்தது அவளுக்கு நினைவு வந்தது. அத்துடன் எல்லோரையும் விரட்டியதுபோல் அவனையும் அம்மா விரட்டியது ஞாபகத்திற்கு வந்தது. 'இன்று இவன் இல்லாவிட் டால் நம் கதி என்ன ஆகியிருக்கும்? இவனுக்கு நம் பேரில் என்ன அக்கறை? அன்றையத் தினம் நாம் விரட்டியடித்தும்கூட தானுகவே வலிய வந்து உதவி செய்தானே!' என்று பரமனை நெஞ்சாரப் பாராட்டினுள் அம்மா.

தன்னுடைய முரட்டுப் பிடிவாதத்தை—மற்றவர் களைக் கண்டாலே விரட்டியடிக்கும் குணத்தை-மூட்டை கட்டிவைத்துவிட்டுப் பரமனை, "உட்கார் தம்பி!" என்ருள்.

இது வாசுவுக்கு ஆச்சரியமாக இருந்தது. இது வரையில் அம்மா தன் ஒருவனைத் தவிர வேறு எவரை

யும் வீட்டுக்குள் வர அனுமதித்தது கிடையாது. அப்படியிருக்க மூன்மாதிரி அவனை விரட்டியடிக்காமல் உட்காரச் சொன்னது அவனுக்கு ஆச்சரியமாக இருந்தது.

அம்மா மடியிலிருந்து சுருக்குப் பையை எடுத்து அதிலிருந்து ஒரு ரூபாய் நாணயத்தை எடுத்து வண்டிக்காரனுக்குக் கொடுத்தாள்.

வண்டிக்காரன் கூலியைப் பெற்றுக்கொண்டு, "உடம்பை ஜாக்கிரதையாகப் பார்த்துக்கொள் அம்மா. சுவரை வைத்துக்கொண்டுதான் சித்திரம் எழுதவேண்டும். முன்னே ஆஸ்பத்திரிக்குப் போய் மருந்து வாங்கிச் சாப்பிடம்மா" என்று சொல்லிவிட்டுச் சென்றான்.

வண்டிக்காரனுடைய பேச்சு அம்மாவுக்குப் புதிய ஞானோதயத்தை உண்டாக்கியது.

'ஆமாம், சுவரை வைத்துக்கொண்டுதான் சித்திரம் எழுதவேண்டும். நாளைக்கே ஆஸ்பத்திரிக்குப் போய் மருந்து வாங்கிச் சாப்பிடவேண்டும்' என்று தீர்மானித்துக்கொண்டாள்.

"வாசு, அம்மாவைப் பத்திரமாகப் பார்த்துக் கொள். நான் வரட்டுமா? அண்ணு எனக்காகக் காத்திருப்பார்" என்று போவதற்காக எழுந்தான் பரமன்.

"வாசு, இவன் உன்கூடப் படிக்கிறவனு?" என்றாள் அம்மா.

"ஆமாம், அம்மா! பரமன்னு பேரு. நாங்க எல்லாம் 'பரமு' என்றுதான் கூப்பிடுவோம்" என்றான், வாசு.

"பார்த்தால் நல்ல பையனாயிருக்கிறான்" என்று சொன்ன அம்மா பரமுவைப் பார்த்து, "பரமு, நீ செய்த உதவியை நான் மறக்கமாட்டேன். இருட்டிவிட்டது; சீக்கிரம் போ. அம்மா உனக்காகத் தேடப் போகிறாள்" என்றாள்.

இதைக் கேட்டதும் பரமனின் கண்களில் நீர் வழிந்தது.

"அம்மா இல்லையா? ஐயோ பாவம்! அப்பா இருக்கிறார் இல்லே?" என்றாள் வாசுவின் அம்மா.

'இல்லை' என்பதற்கடையாளமாகத் தலையாட்டினான் பரமன்.

"அப்படியா? அட கடவுளே! வேறே யார்தான் இருக்கிறார்கள்?" என்றாள் அம்மா.

"அண்ணா ஒருத்தர்தான் இருக்கிறார். அம்மா நான் சின்னக் குழந்தையா யிருக்கும்போதே இறந்து விட்டாள். அப்பா ஒரு தொழிற்சாலையில் வேலை செய்து கொண்டிருந்தார். ஒருநாள் அவருக்குப் பின்னால் அடுக்கி வைக்கப்பட்டிருந்த இரும்புப் பீப்பாய் அப்படியே சரிந்து விழுந்தது. அதன் கீழே நசுங்கி அப்பா இறந்துவிட்டார்" என்றான் பரமன்.

"ஐயோ பாவம்! அப்புறம் நீயும் உன் அண்ணாவும் என்ன செய்தீர்கள்?" என்று கேட்டாள் அம்மா.

"தொழிற்சாலையில் விபத்து ஏற்பட்டதால் அப்பா இறந்ததற்கு நஷ்டாடாக ஐயாயிர ரூபாய் கொடுத்தார்கள். அதை வைத்துக்கொண்டு அண்ணா படித்து என்னையும் ஆதரித்து வருகிறார். அண்ணாவின் படிப்பு முடிந்ததும் வேலைக்கு எழுதிப் போட்டார். இந்த ஊர்

பள்ளிக்கூடத்தில் வேலை கிடைத்தது" என்றான் பரமன்.

"அப்படியானால் சாப்பாட்டிற்கு என்ன செய்கிறீர்கள்?" என்றாள் அம்மா.

"முதலில் ஓட்டலில்தான் சாப்பிட்டுக் கொண்டிருந்தோம். உடம்புக்கு ஒத்துக் கொள்ளவில்லை. இப்பொழுது ஒரு வீட்டில் பணம் கொடுத்து நானும் அண்ணாவும் சாப்பிட்டு வருகிறோம்" என்றான் பரமன்.

பரமனின் கதையைக் கேட்டுப் பரிதாபப்பட்டாள் அம்மா. ஆணியில் மாட்டியிருந்த கூடை ஒன்றை எடுத்தாள். அதில் அவள் சாப்பிடுவதற்காக நாலைந்து முறுக்குகள் எடுத்து வைத்திருந்தாள். அதிலிருந்து இரண்டு முறுக்குகளை எடுத்துப் பரமனிடம் கொடுத்தாள்.

"அடிக்கடி வந்து போய்க்கொண்டிரு தம்பீ" என்றாள் அம்மா.

பரமனும் வாசுவிடமும், அம்மாவிடமும் விடை பெற்றுச் சென்றான்.

வீட்டிற்குப் போனதும் அண்ணா கோபத்துடன் உலவிக்கொண்டிருப்பதைக் கண்டான். பரமனைக் கண்டதும் அவர், "இந்நேரம்வரை எங்கே போயிருந்தாய்? இப்படிப் பாடத்தைப் படிக்காமல் சுற்றிக்கொண்டிருந்தால் எப்படிப் பரீட்சையில் தேறுவாய்?" என்று கோபத்துடன் கேட்டார்.

பரமன் பள்ளிக்கூடம் விட்டது முதல் வாசுவின் வீட்டிற்குச் சென்று வந்ததுவரை ஒன்றுவிடாமல் அண்ணாவிடம் கூறினான்.

அண்ணு வாசுவின் கதையைக் கேட்டுப் பரிதாபப் பட்டார். ஆனுலும் பரமன் இவ்வாறு படிக்கவேண்டிய நேரத்தில் படிக்காமல் நேரம் கழித்து வீட்டுக்கு வந்தது அவருக்குப் பிடிக்கவில்லை.

"சரி சரி, இனிமேலாவது பாடத்தை ஒழுங்காகப் படி. பரீட்சை நெருங்கிக்கொண்டிருக்கிறது" என்று சொல்லிவிட்டுத் தம் வேலையைக் கவனிக்கலாஞர் அண்ணு.

அடுத்த நாள் காலை பரமு வகுப்பிற்குள் நுழைந்ததும் கரும்பலகையைப் பார்த்துத் திடுக்கிட்டான். அந்தக் கரும்பலகையில் முன் தினம் வாசு தன்னிடம் கூறிய ரகசியம் மறைமுகமாக எழுதப்பட்டிருந்தது. எந்தச் சங்கதியை எவருக்கும் தெரிவிக்கக்கூடாது என்று வாசு தன்னிடம் உறுதி மொழி பெற்ருனே அந்த விஷயம் கரும்பலகையில் அம்பலமாகியிருந்தது.

## காணும்!

நம் வகுப்பில் படிக்கும் வாசு என்ற சிறுவனின் அப்பாவை நீண்ட நாட்களாகக் காணும். அவரைக் கண்டுபிடித்துத் தருபவர்களுக்கோ அல்லது அவர் இருப்பிடத்தைத் தெரிவிப்பவர்களுக்கோ தக்க சன்மானம் தரப்படும்.

என்று கொட்டை எழுத்துக்களில் எழுதியிருந்தது.

# 6

ஒருவன் புதுச்சட்டை புதுவேட்டியெல்லாம் அணிந்துகொண்டு ஒரு மரத்தடியில் நின்றுகொண்டிருந்தான். அப்பொழுது மரத்தின் மேலிருந்த காகம் ஒன்று எச்சம் இட்டு அவன் சட்டையைக் கெடுத்து விட்டது.

இதைப் பார்த்துக்கொண்டிருந்த இன்னொருவன் மரத்தடியில் நின்றுகொண்டிருந்தவனின் சட்டையைப் பார்த்து, 'ஹோ ஹோ ஹோ!' என்று சிரித்தான்.

அப்பொழுது வேகமாக வந்த கார் ஒன்று வீதியில் இருந்த சேற்று நீரையெல்லாம் சிரித்தவனின் மேல் அபிஷேகம் செய்துவிட்டுப் போய்விட்டது.

"பார்த்தாயா வாசு? காக்கை கெடுத்த சட்டையைப் பார்த்துச் சிரித்தான். இப்பொழுது அவன் சட்டை வேட்டி பூராவும் சேறு மயமாகிவிட்டது!" என்றான் பரமன்

வாசு வாயைத் திறக்காமல் சென்றுகொண்டிருந்தான். அவனுக்கு அன்றையத் தினம் வகுப்பில் அவனைப் பற்றிக் கரும்பலகையில் எழுதியிருந்த விஷயம் மிகவும் மன வேதனையைக் கொடுத்தது. திரும்பத் திரும்ப அதைப் பற்றியே நினைத்துக்கொண்டிருந்தான்.

வகுப்பிற்குள் நுழைந்ததும் கரும்பலகையில் எழுதியிருந்த 'காணேம்' விளம்பரத்தைப் பார்த்துத் திடுக்கிட்டான். அம்மா தன்னிடம் கூடச் சொல்லாமல் மறைத்து வந்த விஷயம் வகுப்பெல்லாம் அம்பலமாகி விட்டதை அறிந்து துடித்தான்.

'நாம் பரமனிடம் மட்டுந்தானே இந்த விஷயத்தைக் கூறினேம். ஒருவேளை பரமன் வாய் தவறி வேறு எவரிடமாவது கூறிவிட்டிருப்பானே?' என்று சந்தேகப்பட்டான். ஆனால், பிறகுதான் அது கந்தசாமியின் வேலை என்று தெரிந்துகொண்டான்.

வகுப்பிற்குள் அவன் நுழைந்ததும் அவனைப் பார்த்து மாணவர்கள் 'கொல்'லென்று சிரித்தார்கள். அவமானம் தாளமாட்டாமல் வாசு எழுந்து சென்று கரும்பலகையில் எழுதியிருந்த 'காணேம்' விளம்பரத்தைத் துடைக்கப் போனன்.

அப்பொழுது பரமன், "வாசு! துடைக்காதே! நீ எந்தச் சங்கதி ஒருவருக்கும் தெரியக்கூடாது என்று நினைத்துக்கொண்டிருந்தாயோ, அது எல்லோருக்கும் தெரிந்துவிட்டது. இனிமேல் கலைத்து என்ன பிரயோசனம்? அது அப்படியே இருக்கட்டும்" என்றான்.

வாசு தலை குனிந்தபடியே தன் இடத்திற்கு வந்து உட்கார்ந்துகொண்டான்.

மணி அடித்தது. முதல் பீரியடு கணக்கு. கணக்கு ஆசிரியர் வருவதற்குமுன், கந்தசாமி தன் இருப்பிடத்திலிருந்து எழுந்து சென்று கரும்பலகையில் எழுதியிருந்த 'காஞேம்' விளம்பரத்தைக் கலைக்க முயன்றன்.

"நில்லு கந்தசாமி! நாம் எல்லோரும் படித்துவிட்டோம். இன்னும் ஆசிரியர் படிக்கவில்லையே! அவர் படித்ததும் துடைக்கலாம். நீ போய் உட்கார்" என்றன் பரமன்.

"வாசுவின் வக்கீலா நீ? பேசாமல் உன் வேலையைப் பார்த்துக்கொண்டு போ! உன் அண்ணு வாத்தியாராயிருந்தால் நான் ஒன்றும் பயப்படமாட்டேன்" என்று சொல்லியபடியே நீலத் துணியை எடுத்துத் துடைக்கப் போனுன், கந்தசாமி.

பரமன் எழுந்து சென்று கந்தசாமியின் கையில் இருந்த நீலத் துணியை 'வெடுக்' கென்று பிடுங்கிக் கொண்டான்.

இதற்குள் கணக்கு ஆசிரியர் வகுப்பிற்குள் நுழைந்துவிட்டார்.

"ஏண்டா பசங்களா! அங்கே என்ன கலாட்டா?" என்று கூறியபடியே உள்ளே நுழைந்தார்.

பரமன் நடந்த விவரமனைத்தையும் ஆசிரியரிடம் கூறினுன். கணக்கு ஆசிரியர் கண்ணுடியை மாட்டிக் கொண்டு கரும்பலகையில் எழுதியிருந்த விஷயத்தைக் கூர்ந்து படிக்கலானுர்.

"இதை எவண்டா எழுதியது?" என்று கோபமாகக் கேட்டார்.

ஒருவரும் வாயைத் திறக்கவில்லை.

"இந்தக் கந்தசாமிதான் எழுதினான் சார்! இவன் கையெழுத்துதான் இது" என்றான் பரமன்.

"ஏண்டா பரோபகாரி! நீதான் இந்த விளம்பரத்தை எழுதினாயா?" என்று கந்தசாமியைக் கேட்டார் ஆசிரியர்.

கந்தசாமிக்கு மறுக்கவும் முடியவில்லை; உண்மையைச் சொல்லவும் முடியவில்லை.

"என்னடா விழிக்கிறே? மரியாதையாக உண்மையைச் சொல்லிவிடு. கோபம் வந்தால் நான் என்ன செய்வேன் என்று உனக்கே தெரியும்" என்று சொல்லியபடியே அவன் காதருகில் கையை எடுத்துச் சென்றார் கணக்கு வாத்தியார்.

"நான்தான் எழுதினேன்" என்றான் கந்தசாமி.

"உம்...அப்படி வா வழிக்கு! ஏண்டா முட்டாள்! விளம்பரம் கொடுத்தவர்களின் பெயரும் விலாசமும் போடவேண்டாமா? எழுது நான் சொல்றதை" என்று சொல்லியவாறு சாக்குத் துண்டை எடுத்து அவனிடம் கொடுத்தார் கணக்கு ஆசிரியர்.

சாக்குத் துண்டை வாங்கிக்கொண்ட கந்தசாமி கணக்கு ஆசிரியரின் முகத்தையே பார்த்துக்கொண்டிருந்தான்.

"இப்படிக்கு மண்டையடி வீரன்" என்று சொல்லிவிட்டுக் கந்தசாமியைப் பார்த்து, "எழுதுடா" என்றார் ஆசிரியர்.

கந்தசாமி 'காணோம்' விளம்பரத்தின் கீழே, இப்படிக்கு "மண்டையடி வீரன்" என்று எழுதினான்.

"மாங்தோப்பு சூரன் என்று எழுதுடா" என்ருர் ஆசிரியர்.

மாணவர்கள் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துச் சிரித்துக்கொண்டார்கள்.

கந்தசாமி "மாங்தோப்பு சூரன்" என்று எழுதி விட்டுக் கணக்கு ஆசிரியரின் முகத்தைப் பார்த்தான்.

"என்ன எழுதினே? இப்படிக்கு, 'மண்டையடி வீரன்', 'மாங்தோப்பு சூரன்', 'கல்லடி காவாலி' என்று எழுதுடா" என்ருர் கணக்கு ஆசிரியர்.

மாணவர்கள் 'கொல்'லென்று சிரித்தார்கள்.

கந்தசாமி, "கல்லடி காவாலி" என்று எழுதினுன்.

"கல்லடி காவாலி, 'கவண்கல் கந்தசாமி' என்று எழுதுடா" என்று ஆசிரியர் சொன்னதும் வகுப்பு முழுவதும் ஒரே சிரிப்பு மயமாக இருந்தது.

கந்தசாமிக்கு ஒரே அவமானமாகப் போய்விட்டது. வாசுவின் முகத்தில் சேற்றைப் பூசப்போய் இப்பொழுது தனக்கே சேற்றபிஷேகம் ஆகிவிட்டதை அறிந்து வெட்கத்திஞல் தலையைக் குனிந்துகொண்டான்.

"டேய் கவண்கல்! உன்னைப் பற்றிப் பூரா விஷயமும் எனக்குத் தெரியும். நான் அடிக்கடி உன்னைக் கவனித்துக்கொண்டுதான் வருகிறேன். இனிமேல் இந்த மாதிரி அனுவசியமான விஷயங்களில் தலையிட்டாயோ, நேரே தலைமை ஆசிரியரிடம் அனுப்பி விடுவேன். ஜாக்கிரதை" என்று எச்சரித்துவிட்டுப் [illegible] கணக்கு ஆசிரியர்.

பாவம், கந்தசாமி! அவன் வாசுவையும் பரமனையும் மட்டம் தட்ட என்னென்ன காரியங்கள் செய்தாலும், அவை அவனுக்கு விரோதமாகவே திரும்பி விடுகின்றன.

அன்றையத்தினம் வகுப்பில் நடந்த சம்பவங்களை நினைத்து வேதனையுடன் வந்துகொண்டிருந்த வாசுவின் தோள்களை உலுக்கி, "வாசு எதைப்பற்றியும் கவலைப்படாதே! இனிமேல் கந்தசாமி ஏதாவது வாலாட்டினால் நேரே தலைமையாசிரியரிடம் நானே சொல்லிவிடுகிறேன்" என்றான் பரமன்.

இதற்குள் பரமனின் வீடு வந்துவிட்டது.

"சரி வாசு, கவலைப்படாமல் போ! மீண்டும் நாளைக்குச் சந்திப்போம்" என்று சொல்லியவாறு விடை பெற்றுச் சென்றான் பரமன்.

அடுத்த நாள் பரமனுக்கு விடுமுறை நாள். அவனுடைய சலவைத் துணிகளெல்லாம் அழுக்காகிவிட்டன. இலேசாக மழை பெய்துகொண்டு இருந்தது. இந்த மழையில் எங்கே சலவைத் துணிகள் வரப்போகின்றன. துணிகளுக்குச் சோப்பு போட்டுத்தான் துவைத்துக் கொள்ளவேண்டுமென்ற எண்ணத்துடன், சோப்பு வாங்கக் கந்தசாமியின் கடைக்குச் சென்றான், பரமன். அந்த ஊரில் கந்தசாமியின் அப்பாவுடைய கடைதான் பெரிய கடை. அங்கே எல்லாச் சாமான்களும் எப்பொழுதும் தட்டாமல் கிடைக்கும்.

கடையில் அப்பாவுக்கு உதவியாகக் கந்தசாமியும் உட்கார்ந்திருந்தான். தன் கடையை நோக்கி வரும் பரமனைப் பார்த்ததும் கந்தசாமி அவனைச் சுட்டிக் காட்டி, அவன் அப்பாவிடம் என்னவோ சொல்லிக்-

கொண்டிருந்தான். இதைப் பரமன் கவனிக்கத் தவற வில்லை.

பரமன் கடைக்கு வந்ததும், "கந்தசாமி, பத்து பைசா சோப்புக் கட்டி ஒன்று கொடு" என்றான்.

கந்தசாமி அவன் சொன்னதைக் காதில் போட்டுக் கொண்டதாகத் தெரியவில்லை.

"50 கிராம் மிளகாயா?" என்று சொல்லிவிட்டு ஒரு சிறுமிக்கு மிளகாய் கட்டிக் கொடுத்தான்.

"உங்களுக்கு என்ன பெருங்காயமா வேண்டும்? ஐம்பது பைசா கொடுங்க" என்று சொல்லியபடி மற்ற வர்களைக் கவனித்துக்கொண்டிருந்தான். பரமனும் ரொம்ப நேரம் பொறுமையாகக் கால் கடுக்க நின்று கொண்டிருந்தான்.

ஐம்பது கிராம் மிளகாய் நிறுக்கும்போது கந்த சாமி எடை குறைவாக இருக்கும்போதே மிளகாய் இருக் கும் தட்டை ஒரு தட்டுத் தட்டிவிட்டுப் பொட்டல மாகக் கட்டிக்கொடுத்துவிட்டான். கந்தசாமி போட் டது சரியான எடையல்ல என்பதை நன்றாகத் தெரிந்து கொண்டான், பரமன். பாவம், மிளகாய் வாங்கிச் சென்ற அந்தச் சிறுமிக்கு எடை குறைவாகக் கட்டிக் கொடுத்தார்கள் என்ற விஷயம் தெரியாது.

அரிசி வாங்க வந்த ஓர் ஏழை, "சரியாக அளந்து போடுங்க ஐயா" என்று கேட்டதற்கு அரிசியைப் பிடுங்கிக் கொட்டிக்கொண்டு, "இஷ்டமிருந்தால் வாங்கு. இல்லாவிட்டால் போ!" என்று காசைத் தூக்கி அவன் முகத்தில் எறிந்தார், கந்தசாமியின் அப்பா.

"ரொம்ப நேரமாக இருக்கிறேன். என்னைக் கொஞ் சம் சீக்கிரம் அனுப்புங்கள்" என்று நினைவுபடுத்தினான் பரமன்.

"மெயிலுக்குப் போகணுமா? அப்படி அவசரமா யிருந்தால் வேறே எங்கேயாவது போய் வாங்கிக் கொள்" என்று நிர்த்தாட்சண்யமாகப் பதில் அளித் தார், கந்தசாமியின் அப்பா.

"அதை முதலிலே சொல்லியிருந்தால் நான் ஏன் அனுவசியமாகக் காத்துக்கொண்டிருக்கிறேன்?" என்று சற்று ஆத்திரத்துடனேயே கேட்டான், பரமன்.

"என்ன தம்பீ, ஏது ரொம்பப் பேசறே? வாத்தி யார் தம்பி என்கிற தைரியத்திலே பேசுகிறயா? அது கூடப் பள்ளிக்கூடத்திலேதான் வாத்தியாருக்குப் பயப்படுவாங்க..." என்று சம்பந்தா சம்பந்தம் இல்லா மல் உளறினர், கந்தசாமியின் அப்பா.

"ஐயா, சோப்பு கொடுப்பதாயிருந்தால் கொடுங்க. இல்லாவிட்டால் வீண் பேச்சு எதற்கு?" என்ருன், பரமன்.

"ஏண்டா பொடிப்பயலே! நானு வீண் பேச்சுப் பேசுகிறேன். இந்த ஊரிலே நானும் முப்பது வருஷமா கடை வச்சிருக்கிறேன். என்னை ஒரு பயல் எதிர்த்துப் பேசினது இல்லே. என் கிட்டயே இவ்வளவு பேசுகிற வன் என் மகனை என்னென்ன திட்டியிருக்கமாட்டே" என்று கோபமாகப் பேசிக்கொண்டே பரமனை அடிக்க கல்லாப் பெட்டியிலிருந்து எழுந்தார்.

"எல்லோரையும் போல என்னையும் ஏமாளி என்று நினைத்துக் கொள்ளாதீர்கள். நிறுத்துப் போடும் போதும் அளந்து போடும்போதும் தில்லுமல்லு செய்யும்போதும் வாய் பேசாமல் வாங்கிக் கொண்டு

போகிறார்களே, அந்த ஏமாளிகளைப் போல என்னையும் நினைத்தீர்களா?'' என்று உணர்ச்சி வசப்பட்டுப் பேசினான், பரமன்.

இந்தத் தடவை கந்தசாமியின் அப்பாவுக்கு உண்மையிலேயே கோபம் வந்துவிட்டது. 'இவ்வளவு சின்னப் பயல் வந்து நமக்குப் புத்தி சொல்வதா?' என்று ஆத்திரப்பட்டார். பரமனைத் தாக்குவதற்காக அருகில் இருந்த தடிக்கம்பை எடுத்துக்கொண்டு எழுந்தார்.

பரமன் அதற்கும் கலங்கவில்லை.



''என்னை அடித்து விடுவீரா? என் மேல் ஓர் அடி விழட்டும் பார்க்கலாம்'' என்று துணிவாக அவர் முன்னால் போய் நின்றான், பரமன்.

"என்னடா பூச்சாண்டி காட்றே? அடிச்சா என்ன செய்வே?" என்று சொல்லிக்கொண்டே தடியை ஓங்கினுர் கந்தசாமியின் அப்பா.

அப்போது அவர்கள் அருகில் ஒரு கார் வந்து நின்றது. "என்ன மாமா இது! சின்னப் பையன்கிட்டே என்ன தகராறு?" என்று கேட்டவாறே சில்க் சட்டை



யும் வைர மோதிரங்களும் போட்ட ஒருவர் காரிலிருந்து இறங்கினுர்.

"அடடே மாப்பிள்ளையா? வாங்க மாப்பிள்ளை, வாங்க" என்று வரவேற்றபடியே காரிலிருந்து இறங்கி

யவரைக் கடைக்கு அழைத்துச் சென்றார், கந்தசாமி யின் அப்பா.

அவரைப் பார்த்ததும் கந்தசாமி, "என்ன அத்தான், அக்காவைக் கூட்டி வரவில்லையா?" என்றான்.

"நான் வேறே வேலையா இந்தப் பக்கம் வந்தேன். இன்னொரு தடவை வரும்போது அக்காவைக் கூட்டி வரேன். ஆமா, இப்ப நீ எப்படி இருக்கிறே? பழையபடி கவண்கல்தானா?" என்றார் கந்தசாமியின் அத்தான்.

இதற்கு கந்தசாமி பதில் சொல்லவில்லை. அவனுடைய அப்பாதான் பதில் சொன்னார். "இல்லை, மாப் பிள்ளை! முன்னேபோலே இல்லை. முன்னெல்லாம் கடையிலேயே உட்காரமாட்டான். இப்ப பாருங்களேன்" என்று பொட்டலம் கட்டிக் கொண்டிருந்த கந்தசாமியைக் காட்டினார், அப்பா.

"பொட்டலம் கட்டற வேலையிலே படிப்பை மூட்டை கட்டி வச்சிடப்போறே? அது பாட்டுக்கு அது, இது பாட்டுக்கு இது என்று இரண்டையும் விடாம பார்த்துக்கணும்!" என்று சொல்லியவர், கந்தசாமியின் அப்பாவைப் பார்த்து, "என்ன மாமா, நான் வரும் போது ஒரு பையனுடன் சண்டை போட்டுக்கொண் டிருந்தீர்களே, என்ன சங்கதி?" என்றார்.

பரமன் அப்பொழுதுகூட அங்கேயேதான் நின்று கொண்டிருந்தான்.

"ஒன்றுமில்லை மாப்பிள்ளை; சுத்த அரட்டையா யிருக்குது! பெரியவங்க சின்னவங்க மதிப்பு இல்லாம 'வாடா போடா' என்று சொல்கிறான்" என்று பரமன்

போய்விட்டான் என்ற தைரியத்தில் கூசாமல் ஒரு பொய்யைப் புளுகி வைத்தார், கந்தசாமியின் அப்பா.

இதைக் கேட்டுக்கொண்டிருந்த பரமன் ஆத்திரத்துடன் அவர் முன்னால் வந்தான்.

"ஏன் ஐயா பெரியவரே! என்னைப் பார்த்துப் பேசுங்க; நானு உங்களை மரியாதையில்லாம பேசினேன்?" என்று கேட்டான்.

"அறைஞ்சேன்னு, போடா அப்பாலே" என்றார் கந்தசாமியின் அப்பா.

"அறையுங்கள் பார்க்கலாம்" என்றான் பரமன்.

"தம்பீ, பதிலுக்குப் பதில் பெரியவங்க என்கிற மதிப்புத் துளிக்கூட இல்லாம இப்பவே எதிர்த்துப் பேசுகிற நீ நிச்சயம் அவரை மரியாதை யில்லாமல் திட்டியிருப்பே! சந்தேகமே இல்லை. அவர் போடா என்றால் நீயும் அவரைப் போடா என்றுதான் சொல்லியிருப்பாய். எனக்குக் கோபம் வருகிறது. உன்னை உதைப்பதற்குள் இங்கிருந்து ஓடிப்போய்விடு" என்றார் காரில் இருந்து இறங்கியவர்.

பரமன் இதற்கும் அஞ்சவில்லை.

"அடியுங்க பார்க்கலாம்" என்று தைரியமாகக் கூறியபடியே கலங்காமல் நின்றுகொண்டிருந்தான்.

"வாத்தியார் தம்பி என்கிற தைரியத்திலே இவ்வளவு விறைப்பாகப் பேசுகிறான். இந்தக் காலத்திலே கலெக்டருக்கே பயப்படமாட்டார்கள். ஒரு வாத்தியாரின் தம்பிக்கு..." என்று கந்தசாமியின் அப்பா சொல்லிக்கொண்டிருக்கும்போதே, "எந்த வாத்தியாரின் தம்பி?" என்றார் காரிலிருந்து இறங்கியவர்.

"புதிசா ஒரு வாத்தியார் வந்திருக்கிறார். டேய், கந்தசாமி அவர் பேர் என்னடா?" என்றார் கந்தசாமி யின் அப்பா.

"நல்லக்கண்ணு!" என்றான் கந்தசாமி.

"அட பாவி, நல்லக்கண்ணுவின் தம்பியா நீ? தங்க மான பையனுக்கு இப்படி ஒரு தம்பியா? அவனைப் பார்க்கத்தான் வந்தேன். நீ போ. நான் பின்னால் வந்து உன்னைப் பற்றி அவனிடம் பேசிக்கொள்கிறேன்" என்றார் காரிலிருந்து இறங்கியவர்.

சோப்பு வாங்க வந்தவன் சோப்பு வாங்காமல் திரும்பியதுடன் கந்தசாமியின் அப்பாவிடம் திட்டுக் களும் வசவுகளும் வாங்கிக்கொண்டு திரும்பினான். போகும் வழியெல்லாம் கந்தசாமியின் அத்தானைப் பற்றியே நினைத்துக்கொண்டு சென்றான். 'இவர் யார்? நம் அண்ணாவை இவருக்குத் தெரியுமா? கந்தசாமி யின் அப்பா எவ்வளவு பெரிய மனிதராயிருக்கிறார். தலைமயிரெல்லாம் நரைத்திருக்கிறது. எவ்வளவு அபாண்டமாகப் பொய் பேசுகிறார். உம்...தினசரி, பொய்யும் திருட்டும் கலந்து வியாபாரம் செய்யும் அவருக்கு இந்தத் துளியூண்டு பொய் எம்மாத்திரம்! அட கடவுளே! இவருடைய மாப்பிள்ளை நம் அண்ணா வின் நண்பராமே! அவரும் என்னைப் பற்றித் தவறாக நம்பும்படியாகத்தானே நானும் நடந்துகொண்டேன்?'

அன்றையத் தினம் கூட்டத்தில் ஒரு பிரசங்கி பேசும்போது, "கலப்படம் செய்து மக்களை ஏமாற்று பவர்கள் நாயிலும் கேடானவர்கள். காசுக்குத் தகுந்த பொருள் தராமல் ஏழைகளின் வயிற்றில் அடிப்பவர் கள் கொள்ளைக்காரர்கள்" என்றெல்லாம் பேசினாரே,

அதைக் கேட்டுக்கொண்டு மக்கள் கைதட்டி ஆரவாரம் செய்தார்களே! அப்படிப் பார்த்தால் கந்தசாமியின் அப்பாவும் ஒரு கொள்ளைக்காரர்தான்; நாயினும் கேடானவர்தான்.

'என் கண்ணெதிரில் கடலை எண்ணெயையும் நல்ல யெண்ணெயையும் கலப்படம் செய்தார். எடை குறை வாக நிறுத்துப்போட்டார். அரிசி பருப்பு முதலியவை களை அளக்கும்போதும் எவ்வளவோ திருட்டுத்தனங் கள் செய்தார். இவரை 'நாயே' என்று சொல்வதில் தவறு என்ன?' என்று தன்னைத்தானே கேட்டுக் கொண்டான்.

எப்படியிருந்தாலும் ஆத்திரப்படாமல் அவன் தன் கட்சியை நிதானமாக எடுத்துச் சொல்லியிருந் தால் இவ்வளவு தூரத்திற்கு வந்திருக்காது.

கந்தசாமியின் கடையைவிட்டுக் கிளம்பிய பரமன் நேரே வீட்டிற்குப் போகவில்லை. பூங்காவுக்குச் சென் ருன். அவன் மனசே சரியில்லை.

'அண்ணுவின் நண்பர் நம்மைப்பற்றித் தவருக அண்ணுவிடம் கூறியிருந்தால் அண்ணு நம்மைப்பற்றி என்ன நினைப்பார்? அவருடைய குற்றச்சாட்டுக்களை நான் மறுக்கமுடியாதே!' என்று வருந்திக்கொண் டிருந்தான் பரமன்.

மணிக்கூண்டுக் கடிகாரம் பன்னிரண்டு மணி அடித்தது. காலை ஒன்பது மணிக்குச் சோப்பு வாங்க வந்தவன் பகல் பன்னிரண்டு மணி வரையிலும் பூங்கா விலேயே இருந்திருக்கிருன்.

'இனியும் வீட்டிற்குச் செல்லாவிட்டால் அண்ணு வுக்குக் கோபம் ஏற்படும்' என்று நினைத்துக் கவலை

தோய்ந்த முகத்துடன் வீடு நோக்கிச் சென்ருன், பரமன்.

வீட்டுக்குள் நுழைந்ததும், "என்ன, பெரியவர் எங்கே சுற்றிவிட்டு வருகிருரோ? மரியாதைக் குறைவாகக் கூப்பிட்டால் திருப்பி அதே பாடத்தை நமக்கு ஒப்புவிப்பார்" என்று கேலியாகக் கூறியபடியே வரவேற்ருர், அண்ணு.

அறையில் கந்தசாமியின் அத்தானும் அமர்ந்திருந்தார். அவர், "அதற்குத்தான் இந்தக் காலத்தில் சிறியவர்களாயிருந்தாலும் பெரியவர்களாயிருந்தாலும் 'மரியாதை கொடுத்து மரியாதை வாங்கு' என்று சொல்லியிருக்கிருர்கள்" என்ருர்.

பரமனுக்கு ஒன்றுமே புரியவில்லை!

தான் குற்றமற்றவன் என்று என்ன சொன்ஞலும் அவர்களிடம் ஏருது என்பதை உணர்ந்து பேசாமலிருந்தான்.

"தம்பீ, உங்க அண்ணனுக்கு இந்த வேலை கிடைக்கும்படி செய்தவன் நான்தான். அதற்கு என் மாமனுரை மரியாதையில்லாமல் பேசி அவமானம் செய்துவிட்டாய். இதுதான் நீங்கள் காட்டும் மரியாதையா?" என்ருர் கந்தசாமியின் அத்தான்.

அவ்வளவு பெரிய மனிதர்—நன்ருகப் படித்தவர்—பலருடன் பழகியவர்—அவர் சொன்ன பேச்சு பரமனுக்குப் பொருத்தமாகத் தோன்றவில்லை.

அவர் தன் அண்ணனுக்கு வேலை கிடைக்கும்படி செய்திருக்கலாம். அதற்காக இப்படி வெளிப்படையாகத் தம்பட்டம் அடித்துக்கொள்ளவேண்டுமென்பதில்லை. சரி, அப்படித்தான் இருந்தாலும் யார் யாருக்கு

நன்றி செலுத்தவேண்டும் என்ற கேள்வி முறையே கிடையாதா? இன்னும் கொஞ்ச நாள் போனால், 'என் வீட்டு நாயிடமும் நீ மரியாதையாக நடந்துகொள்ள வேண்டும்' என்று சொல்வார் போலிருக்கிறதே! என்ன தான் வேலை வாங்கிக்கொடுத்தாலும் ஒரு மனிதர் இப்படி இருப்பார் என்று கனவிலும் நான் எதிர்பார்க்க வில்லை' என்று நினைத்தான், பரமன்.

"இதோ பார் பரமு! எல்லாச் சங்கதியும் கேள்விப் பட்டேன். முதலில் கந்தசாமியின் அப்பாவிடம் போய் மன்னிப்புக் கேட்டுவிட்டுப் பிறகு வா!" என்றார் அண்ணா.

"அவர் சொன்னது அவ்வளவும் அபாண்டம். நான் அவரை 'வாடா, போடா' என்று சொல்ல வில்லை. அவர் சொன்ன பொய்க்கு முதலில் அவரை மன்னிப்புக் கேட்கச் சொல்லுங்கள். பிறகு நானும் அவரிடம் மன்னிப்புக் கேட்கிறேன்" என்றான், பரமன்.

முதலில் மன்னிப்புக் கேட்கத் தயாராகத்தான் இருந்தான், பரமன். ஆனால், 'சிநேகிதராயிருந்தால் ஒருபுறம் இருக்கட்டும். இவர் அண்ணனுக்கு வேலை வாங்கிக்கொடுத்தவராயிருந்தால் இருக்கட்டும். அதற் காக அநீதிக்கு ஒருபோதும் தலைவணங்கமாட்டேன்' என்று உறுதி பூண்டான், பரமன்.

"சரி, சரி, நான் வரேன். நடக்கறதை அனுபவித் தால்தான் உங்களுக்குப் புத்தி வரும்" என்று கோப மாகக் கூறியவாறே வெளியேற எழுந்தார், கந்தசாமி யின் அத்தான்.

"கொஞ்சம் பொறு அப்பா!" என்று சொல்லி விட்டுப் பரமனைத் தனியே அழைத்துச் சென்றார் அண்ணா.

"பரமு நம் பள்ளிக்கூடக் குழுவில் செல்வாக்கு பெற்ற ஒருவரை என் சிநேகிதனுக்குத் தெரியும். அவர் சிபாரிசால்தான் இந்த வேலை எனக்குக் கிடைத்தது அவர்கள் மனசு வைத்தால் மீண்டும் என்னை வேலையி லிருந்து நீக்கிவிட முடியும். போய் எனக்காகவாவது ஒருமுறை கந்தசாமியின் அப்பாவிடம் மன்னிப்புக் கேட்டுக்கொண்டு வந்துவிடு" என்று கெஞ்சாத குறை யாகச் சொன்னார் பரமனின் அண்ணா.

அவன் மன்னிப்புக் கேட்பதில் எந்தவிதமான தடை யும் இல்லை. ஆனால், 'அந்தக் கந்தசாமி தன்னைப்பற்றி என்ன நினைப்பான்? வகுப்பில் உள்ள மாணவர் அனை வரிடமும் தன்னைப்பற்றி ஒன்றுக்குப் பத்தாகக் கூறி னால், எவ்வளவு அவமானம்? அதற்காக, அண்ணாவின் வேலையே பறிபோய்விடும்படியாகச் செய்வதா? நம் மால் அண்ணனுக்கு உபத்திரவமா?' என்று இருதலைக் கொள்ளி எறும்புபோல் தத்தளித்தான் பரமன்.

கடைசியில் 'வந்தது வரட்டும்' என்கிற துணிவில், "முடியாது" என்று அழுத்தம் திருத்தமாகக் கூறி னான், பரமன்.

# 7

ஒரு மரத்தில் பெரிய தேன்கூடு ஒன்று இருந்தது. அதைப் பார்த்த ஒருவன் அந்தத் தேன் கூட்டை அழித்துத் தேன் எடுக்க நினைத்தான். அதற்கு முன் அவனுக்குத் தேன் எடுத்துப் பழக்கமில்லை. பெரிய வீரனைப்போல் தேன்கூடு இருக்கும் மரத்தண்டை போனான். தோளில் போட்டிருந்த துண்டை எடுத்துத் தலையில் முண்டாசு கட்டிக் கொண்டான். மரத்தின் மேல் ஏறித் தேன் கூட்டைக் கலைத்துவிட்டான். அவ்வளவுதான், வந்தது ஆபத்து!

தேனீக்கள் சரமாரியாகப் படையெடுத்து வந்து அவனைக் கொட்டத்தொடங்கிவிட்டன. 'தேனும் வேண்டாம், ஒன்றும் வேண்டாம். ஆளை விட்டால் போதும்' என்ற நோக்கத்துடன் ஓட்டமாக ஓடலானான், அந்த மனிதன்.

தேனீக்களும் அவனை விடவில்லை. விடாமல் துரத்தி வந்தன. வழியில் ஓர் ஆறு இருந்தது. தேனீக்

களுக்குப் பயந்துகொண்டு ஆற்றில் குதித்தான் அவன். தேனீக்கள் அப்பொழுதும் அவனை விடவில்லை. விடாமல் தொடர்ந்து வந்து அவனைக் கொட்டின.

'அக்கரைக்குப் போனாலும் இவை நம்மைத் துரத்தியே வரும்' என்று நினைத்த அந்த மனிதன், தலையில் கட்டியிருந்த முண்டாசை அவிழ்த்து ஆற்றில் நழுவவிட்டான். பிறகு வேறுபுறமாக நீந்திச் சென்றான். தேனீக்களும் மிதந்து கொண்டிருந்த துணியை மனிதன்தான் என்று நினைத்துப் பின்தொடர்ந்தன. ஆனால், அவனோ 'தலைக்கு வந்தது தலைப்பாகையுடன் போயிற்று' என்று சொல்லியவாறே நீந்திக் கரை சேர்ந்து வீட்டுக்கு ஓடிப் போய்விட்டான்.

* * *

பரமன் பிடிவாதமாகக் கந்தசாமியின் அப்பாவிடம் மன்னிப்புக் கேட்கமாட்டேன் என்று அண்ணனிடம் கூறிவிட்டான்.

தம்பியின் பிடிவாதத்தைக் கண்டு ஆசிரியர் நல்லக்கண்ணுவிற்கு ஒன்றுமே புரியவில்லை.

'கந்தசாமியின் அத்தான் தங்கவேலு, தன்னுடைய நண்பன், தன்னுடன் படித்தவன், தான் இந்த ஆசிரியர் வேலைக்கு வரப் பெருமுயற்சி எடுத்துக் கொண்டவன். அப்படியிருக்க அவன் எதிரிலேயே அவனுடைய மாமனாரை—கந்தசாமியின் அப்பாவை நம் தம்பி அவமானப்படுத்திவிட்டு வந்துவிட்டானே! இது எங்கே போய் முடியுமோ?' என்று ஆசிரியர் நல்லக்கண்ணு கவலைப்பட்டுக்கொண்டிருந்தார்.

அந்தச் சமயத்தில் யாரும் எதிர்பாராத மாதிரி தங்கவேலு (கந்தசாமியின் அத்தான்) "தம்பீ, நீ ரொம்

பவும் தைரியசாலி. நீ எப்படி இருக்கிருய் என்று பார்ப்பதற்காகத்தான் நான் அந்த மாதிரி கூறினேன்" என்ருர்.

இதைக் கேட்டதும் பரமனுக்கும், நல்லக்கண்ணு விற்கும் ஒரே ஆச்சரியமாகப் போய்விட்டது. 'தங்க வேலு உண்மையாகத்தான் இவ்வாறு பேசுகிருஞ?' என்று ஆசிரியர் நல்லக்கண்ணு ஆச்சரியப்பட்டார்.

"நல்லக்கண்ணு, உன் தம்பி சொல்வதிலிருந்து அவன் பேரில் ஒன்றும் தவறு இல்லை என்று தெரி கிறது. இப்பொழுதுதான் என் கண் திறந்தது. சிறிய வர்களாயிருந்தாலும் அவர்களிடம் மரியாதை கொடுத்துதான் பேசவேண்டும் என்ற பாடத்தை என் மாமனுரும் தெரிந்து கொண்டிருப்பார் என்று நினைக் கிறேன்" என்ருர், தங்கவேலு.

"நல்ல ஆளப்பா நீ. நீயே இவனுக்குப் பாடம் சொல்லிக் கொடுப்பாய் போலிருக்கிறதே! இப்பொழுது நான்கூட அவனை 'வாடா, போடா" என்று சொல்லு கிறேன். அவனும் பதிலுக்கு என்னை 'வாடா, போடா' என்று சொல்லலாம் என்று சொல்லிக் கொடுப்பாய் போலிருக்கிறதே!" என்ருர் நல்லக்கண்ணு.

"நல்லக்கண்ணு, கூடுமானவரை நாமும் அவர் களை மரியாதையாகக் கூப்பிடப் பழகுவோம். அப்படி நாம் செய்தால்தான் இவர்கள் தங்களைவிடச் சிறியவர் களிடம் பழகும்போதும் இதே மரியாதையைக் காண் பிப்பார்கள். அவ்வளவு ஏன், இவர்கள் பெரியவர்க ளான பிறகும் அதையே கடைப்பிடிப்பார்கள்" என்ருர் தங்கவேலு.

"ஆமாம் நீ சொல்வதும் உண்மைதான். நாம் எப்படிப் பிறரைத் திட்டுகிருேமோ, அதேமாதிரிதான்

இந்தச் சிறுவர்களும் திட்டுகிருர்கள். சிறுவர்கள் நல்ல முறையில் வளர வேண்டுமாஞல் அவர்களைச் சார்ந்துள்ள பெரியவர்களும் நல்ல முறையில் இருக்கவேண்டும்'' என்ருர் நல்லக்கண்ணு.

பரமன் அவர்களுடைய பேச்சில் கலந்துகொள்ளாமல் தனியே நின்றுகொண்டிருந்தான்.

"இங்கே வா, பரமு" என்று அன்புடன் கூப்பிட்டார், தங்கவேலு.

பரமன் அவர் அருகில் வந்து நின்ருன். அவன் முதுகைத் தடவியபடி, "பரமு, தவறு செய்பவர் எவராயிருந்தாலும் துணிவாகக் கேள். இதை நான் பாராட்டுகிறேன். ஆஞல், ஆத்திரம் மட்டும் கொள்ளாதே! ஆத்திரப்பட்டால் உன் பக்கம் நியாயம் இருந்தாலும் உன் கட்சி தோற்றுவிடும்'' என்ருர் தங்கவேலு.

"சரி அண்ணு!'' என்ருன் பரமன். ஆஞல், உள்ளூர அவன் மனத்தில் வேதனை நிரம்பியிருந்தது. 'கந்தசாமியின் அப்பா தன்னைத் திட்டியபோது தானும் ஆத்திரத்திஞல் அறிவை இழந்திருக்கக் கூடாது' என்று நினைத்தான்.

"சரி நல்லக்கண்ணு, நான் வரட்டுமா? அடிக்கடி கடிதம் எழுது. என்ஞல் உனக்கு ஏதாவது காரியம் ஆகவேண்டுமாஞல் தயங்காமல் எழுது" என்று கூறிவிட்டுப் புறப்பட்டார், தங்கவேலு.

அண்ணனும் தம்பியும் அவரை வாசல்வரை சென்று வழியனுப்பி வைத்தனர். தங்கவேலு சென்ற பிறகு பரமனும், அவன் அண்ணுவும் சாப்பிடக் கிளம்பினர். அவர்கள் வழக்கமாகச் சாப்பிடும் வீடு பக்கத்

துத் தெருவில் இருந்தது. அங்கே ஒரு வீட்டில் பணம் கொடுத்து இருவரும் சாப்பிட்டுக்கொண்டிருந்தனர்.

அந்த வீட்டை நெருங்கியபோது எதிரே கந்த சாமியின் அப்பா வந்து கொண்டிருந்தார். அவரைப் பார்த்ததும் அண்ணு கைகூப்பி அவருக்கு வணக்கம் தெரிவித்தார். ஆனல், அவரோ அவரைப் பார்த்தும் பாராதவரைப்போல் 'உர்'ரென்று முகத்தை வைத்துக் கொண்டு போய்விட்டார்.

'தான் வணக்கம் தெரிவித்ததற்குப் பதில் வணக்கம் கூடத் தெரிவிக்காவிட்டால் போகிறது. கண்டும் காணுதவரைப்போல் சென்றுவிட்டாரே!' என்று வருந்திஞர் ஆசிரியர் நல்லக்கண்ணு.

கந்தசாமியின் அப்பா தன்ஞல்தான் இவ்வாறு கோபமாகச் செல்கிருர் என்று தெரிந்துகொண்டான், பரமன். உடனே ஓடிச் சென்று அவர் அருகில் நின்ருன். அவர் அவனைக் கோபத்துடன் ஏற இறங்க ஒரு முறை பார்த்தார்.

"எதுக்காக குறுக்கே வந்து நிக்கிறே?" என்று கோபமாகக் கேட்டார்.

"ஐயா, நான் தங்களைத் தவருக ஏதாவது சொல்லியிருந்தால் என்னை மன்னித்து விடுங்கள்" என்ருன், பரமன்.

"மன்னிக்கணுமா? உன்னையா? உம்—என்னை யார்னு நினைச்சுக்கிட்டே? பெரியவங்க சின்னவங்க என்கிற மட்டு மரியாதையில்லாம பேசிவிட்டு இப்ப மன்னிப்புக் கேட்க வந்துவிட்டாயா? இப்படித்தான் உன் அண்ணு எல்லாப் பிள்ளைகளுக்கும் பாடம் சொல்லிக் கொடுக்கிருரோ? போ போ, உங்களைப் பார்த்துக்

கொள்கிறேன்'' என்று சொல்லியவாறே தம் கைத்தடியைச் சுழற்றிக்கொண்டு சென்றுவிட்டார், கந்தசாமியின் அப்பா.

பரமன் ஒன்றும் தோன்றாதவனாக நின்றுவிட்டான். 'ஒருவேளை தான் அவரிடம் நடந்து கொண்ட முறை தவறானதுதானோ?' என்று வருத்தப்பட்டான்.

''பரமு அவருடன் என்ன பேச்சு? நீ வா, சாப்பிடப் போவோம்'' என்று பரமனை அழைத்துக்கொண்டு தாம் சாப்பிடப் போகும் வீட்டினுள் நுழைந்தார் நல்லக்கண்ணு.

அப்பொழுது வீட்டுத் திண்ணைமேல் உட்கார்ந்திருந்த வீட்டுக்காரர், ''வாத்தியார் ஐயா, உங்களாலே நமக்குப் பெரிய தொந்தரவு வரும்போல இருக்குது. தயவுசெஞ்சு இன்னிலேயிருந்து நீங்க வேற எங்கேயாவது சாப்பிட்டுக்கங்க'' என்றார்.

இதைக் கேட்டதும் பரமனுக்கும் நல்லக்கண்ணுவுக்கும் தூக்கிவாரிப் போட்டது.

''ஏன் ஐயா நாங்க ஒன்றும் தப்பான வழிக்குப் போகவில்லையே; எதுக்காக இப்படி சொல்றீங்க?'' என்றார் நல்லக்கண்ணு.

''அதெல்லாம் எனக்குத் தெரியாதுங்க. கடைக்காரர் உங்களுக்குச் சாப்பாடு போடக்கூடாது என்று சொல்லிட்டார். அவ்வளவுதான்'' என்றார் வீட்டுக்காரர்.

''ஏன்? அவருக்கு ஏன் நீங்க பயப்படணும்? பணம் வாங்கிக்கொண்டுதானே சாப்பாடு போடப் போறீங்க?'' என்றார் நல்லக்கண்ணு.

"அது சரிங்க. ஆனா, பாருங்க. நான் அவர்கிட்டே ஏராளமா கடன் வாங்கியிருக்கிறேன். அவர் பேச்சைக் கேட்காவிட்டா எங்களுக்குத்தான் ஆபத்து வரும்" என்றார் வீட்டுக்காரர்.

"சரி வா பரமு! சாப்பாட்டுக்கு வேறு எங்கேயாவது ஏற்பாடு செய்துகொள்வோம்" என்று சொல்லியபடியே பரமனை அழைத்துக் கொண்டு திரும்பினார், நல்லக்கண்ணு.

"ஒன்று சொல்கிறேன் கேட்டுக்குங்க. கடைக்காரரை விரோதம் செய்துகிட்டு ஒருவரும் இங்கே வாழமுடியாது அதனாலே ஜாக்கிரதையாக இருந்துக்குங்க" என்றார் வீட்டுக்காரர்.

'அட கடவுளே! இது என்ன புதுத் தொந்தரவு? யார் அவரிடம் விரோதம் பாராட்டினார்கள்? அவர் தானே நாமாக வணக்கம் தெரிவித்தாலும் பாராதவரைப்போல் சென்றுவிட்டார்.

'சிறு பையன் அவனுகக்கூட வலுச்சண்டைக்குப் போகவில்லை. ஏதோ அவரும் நாலு வார்த்தை பேசினார். பதிலுக்கு இவனும் பேசினான். அதை இவர் இவ்வளவு பெரியதாக நினைத்திருக்கவேண்டாம்' என்று நினைத்தவாறே பரமனை அழைத்துக்கொண்டு வீடு திரும்பினார், நல்லக்கண்ணு!

இருவருக்கும் நல்ல பசி. அந்த ஊரில் நல்ல ஓட்டல் எதுவும் கிடையாது. ஒரே ஒரு டீக்கடை இருந்தது. அதுவும் கந்தசாமியின் அப்பாவுடைய மளிகைக் கடைக்குப் பக்கத்திலேயே இருந்தது. அந்த டீக்கடைக்குள் போகவே சகிக்காது. இரண்டு மைல் நடந்து சென்றால் மங்காபுரம் என்றொரு ஊர். அது

கொஞ்சம் பெரிய ஊர். அந்த ஊரிலே ஒரு நல்ல ஓட்டல் இருக்கிறது. பரமனும் அவன் அண்ணாவும் அங்கே போவதற்குள் சாப்பாடு தீர்ந்து விட்டிருக்கும். வெறும் பலகாரங்கள் மட்டும்தான் இருக்கும்.

இந்த விஷயம் நல்லக்கண்ணுவின் நினைவுக்கு வந்ததும் பரமனிடம் ஒரு ரூபாயை எடுத்துக் கொடுத்து, "பரமு மங்காபுரம் போய் ஓட்டலிலே உனக்குத் தேவையானதை வாங்கிச் சாப்பிட்டுவிட்டு அப்படியே எனக்கும் ஏதாவது பலகாரங்கள் வாங்கி வந்துவிடு" என்றார் நல்லக்கண்ணு.

"எனக்குப் பசியில்லை அண்ணா! உங்களுக்கு மட்டும் ஏதாவது பலகாரங்கள் வாங்கி வருகிறேன்" என்றான் பரமன்.

"பரமு, பொய் சொல்லாதே! காலையில் என்னுடன் பலகாரம் சாப்பிட்டதுதானே! உனக்குப் பசியில்லை என்றால் எனக்கும் தேவையில்லை. இரண்டு பேரும் வெறும் தண்ணீர் குடித்துவிட்டுப் பட்டினி கிடப்போம். என்ன சரிதானே!" என்றார் நல்லக் கண்ணு.

'தான் சாப்பிடாவிட்டால் அண்ணனும் சாப்பிடா மல் பட்டினி இருப்பார்' என்பதை நினைத்ததும் பரமன் வருந்தினான்.

"சரி அண்ணா! நீங்க சொன்ன மாதிரியாகவே செய்கிறேன்" என்று சொல்லிவிட்டு மங்காபுரம் செல் லும் பாதையில் நடக்கலானான் பரமன்.

கொஞ்ச தூரம்தான் சென்றிருப்பான். பின்னா லிருந்து அவனை யாரோ கைதட்டிக் கூப்பிடுவதைப் போலிருந்தது.

பரமன் திரும்பிப் பார்த்தான். எதிரே வாசுவும் அவன் அம்மாவும் வந்து கொண்டிருந்தார்கள். வாசு அம்மாவின் கையில் மருந்துப்புட்டி ஒன்று இருந்தது. வாசு, அம்மாவின் கையைப் பிடித்து அழைத்து வந்துகொண்டிருந்தான்.

"என்ன பரமு! நான்தான் உன்னைக் கூப்பிடச் சொன்னேன். எங்கே உன்னை வீட்டுப்பக்கமே காணுமே! நான் ஏதாவது கோபித்துக் கொள்வேன் என்று வரவில்லையா?" என்றாள் வாசுவின் தாய்.

"இல்லை பரீட்சை நெருங்கிக்கொண்டிருக்கிறது. அண்ணா பள்ளிக்கூடம் நேரம் போகப் பாக்கி நேரமெல்லாம் வீட்டிலேயே இருந்து படிக்கச் சொல்லி இருக்கிறார். அதனால்தான் வரவில்லை. இப்ப உங்க உடம்பெல்லாம் எப்படி இருக்கிறது?" என்று கேட்டான், பரமன்.

"ஓ, மயக்கம் வருகிறதைச் சொல்கிறாயா? இப்பொழுது ஒன்றுமில்லை. இங்கே மங்காபுரத்திலே ஒரு டாக்டர் கிட்டே மருந்து வாங்கிச் சாப்பிடுகிறேன். வாசுவின் தொந்தரவு பொறுக்க முடியாமல்தான் டாக்டரிடம் மருந்து வாங்கிச் சாப்பிடுகிறேன். இப்பொழுது கூட நாங்க அங்கேதான் போகிறோம். ஆமாம், இந்நேரத்துக்கு நீ எங்கே கிளம்பி விட்டே?" என்றாள் வாசுவின் அம்மா.

பரமன் பூராக் கதையையும் வாசுவின் அம்மாவிடம் கூறினான். கந்தசாமியின் அப்பாவுடன் ஏற்பட்ட தகராறு, அவர்கள் வழக்கமாகச் சாப்பிட்டுக் கொண்டிருந்த வீட்டில் சாப்பாடு போட மறுத்துவிட்டது முதலியவைகளைக் கூறி இப்பொழுது தனக்கும்

அண்ணனுக்கும் பலகாரம் வாங்கி வர மங்காபுரம் செல்வதாகக் கூறினான், பரமன்.

பரமன் கூறியதைக் கேட்டதும் அவர்கள் நிலைக்காக ரொம்பவும் பரிதாபப்பட்டாள் வாசுவின் அம்மா.

இதற்குள் மங்காபுரம் வந்துவிட்டது. வாசுவும் வாசுவின் அம்மாவும் டாக்டர் வீடு நோக்கிச் சென்றார்கள். பரமன் ஒட்டலை நோக்கிச் சென்றான்.

பலகாரங்கள் வாங்கிக்கொண்டு வந்ததும் பரமனும் அவன் அண்ணாவும் ஒன்றாக உட்கார்ந்து சாப்பிட்டார்கள். சாப்பிடும்போது நல்லக்கண்ணு, "பரமு எத்தனை நாளைக்கு இப்படி ஒட்டல் பலகாரமும் சாப்பாடுமாகச் சாப்பிட்டுக்கொண்டிருப்பது? நாளையிலிருந்து வேறு வீட்டில் சாப்பாட்டுக்கு ஏற்பாடு செய்துகொள்ளவேண்டும்" என்றார்.

"அண்ணா, எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது. பேசாமல் நாமே சமைத்துச் சாப்பிட்டால் என்ன?" என்றான் பரமன்.

"அதெப்படி தம்பி முடியும்? ஒரு நாளைப்போலத் தினமும் காலையில் எழுந்து சமைத்துச் சாப்பிட்டுவிட்டு உடனே பள்ளிக்கூடம் போகமுடியும் என்று நினைக்கிறாயா? அதெல்லாம் கஷ்டம்" என்றார் நல்லக்கண்ணு.

"இல்லை அண்ணா! நாம் ஒரு வீட்டில் பணம் கொடுத்துச் சாப்பிடுவதுகூட எனக்குப் பிடிக்கவில்லை. இரண்டாவதாக இப்பொழுது ஏற்பாடு செய்யப்போகும் வீட்டிலும் கந்தசாமியின் அப்பா நம்மைப் பற்றி ஏதாவது கூறி நமக்குச் சாப்பாடு போட

வேண்டாமென்று கூறிவிட்டால், அப்புறம் இன்னொரு வீடு பார்ப்பீர்களா? வேண்டாம் அண்ணா, பேசாமல் சாதம் வடித்துக்கொண்டு தயிர் ஊற்றிக்கொண்டு நிம்மதியாகச் சாப்பிடுவோம்'' என்றான் பரமன்.

நல்லக்கண்ணுவும் நீண்ட நேர யோசனைக்குப் பிறகு தம்பியின் திட்டத்தை ஏற்றுக்கொண்டார். அண்ணா தன் யோசனையை ஏற்றுக் கொண்டதும் பரமன் அண்ணாவிடம் காசு வாங்கிக் கொண்டு மீண்டும் மங்காபுரம் சென்றான்.

சமையல் செய்வதற்குரிய சாமான்களைக் கந்தசாமி யின் அப்பா கடையிலிருந்தே வாங்கிக் கொள்ள லாம். ஆனாலும், அங்கே வாங்க அவனுக்கு மனமில்லை. நேரே மங்காபுரத்துக்குப் போனான். ஒரு கடையில் அரிசி ஒரு படி வாங்கிக் கொண்டான். பிறகு சின்ன அடுப்பு ஒன்றும், சமைக்கச் சில சட்டிப்பானைகளும் வாங்கிக் கொண்டு சந்தோஷத்துடன் வீடு திரும் பினான், பரமன்.

வீட்டுக்கு வந்ததும் அடுப்பைப் பற்ற வைத்தான். அண்ணா அவனுக்கு உதவியாக வந்தார். இருவரும் சேர்ந்து அரிசியைக் கழுவி உலையில் போட்டனர். பரமன் தயிர் வாங்கி வருவதற்காக ஒரு பாத்திரத்தை எடுத்துக்கொண்டு வெளியே சென்றான். நல்லக்கண்ணு சாதம் வேகிறதற்குள் மாணவர்கள் எழுதிக் கொடுத் துள்ள கட்டுரைப் பயிற்சிகளைத் திருத்திவிடலாம் என்ற எண்ணத்துடன் நோட்டுப் புத்தகக் கட்டை எடுத்து வைத்துக்கொண்டு உட்கார்ந்தார். திருத்திக் கொண்டே இருந்ததில் அடுப்பில் சாதம் கொதித்துக் கொண்டிருப்பதை மறந்துவிட்டார்.

சாதம் குழம்பாகிக் கொண்டிருந்தது!

# 7

தயிர் வாங்கச் சென்ற பரமன் எங்கெங்கோ சுற்றினான். தயிர் கிடைக்கவில்லை. கடைசியில் ஒரு வீட்டில் இருந்தது. வாங்கிக்கொண்டு வீடு திரும்பினான்.

வீட்டுக்குள் நுழைந்ததும் பரமன் திடுக்கிட்டான். 'அண்ணா சாதத்தைக் கவனிக்காமல் கட்டுரைப் பயிற்சியைத் திருத்திக் கொண்டிருக்கிறாரே' என்று வருந்தியவனாகத் தயிர்க் கிண்ணத்தை வைத்துவிட்டு உலையில் வெந்துகொண்டிருந்த சாதத்தை எடுத்துப் பார்த்தான். பாவம், சாதம் பூராவும் நன்றாக வெந்து கூழாகப் போயிருந்தது. இலையில் வைத்துச் சாப்பிட முடியாது. டம்ளரில் ஊற்றிக்கொண்டுதான் குடிக்கவேண்டும்!

**"என்ன அண்ணா இது, சாதம் பூராவும் கூழாகி விட்டதே!" என்றான் பரமன்.**

அப்பொழுதுதான் நல்லக்கண்ணுவுக்குச் சாதத்தின் ஞாபகம் வந்தது. "அடடா! கவனிக்க மறந்து விட்டேனே! இப்பொழுது என்ன செய்வது?" என்றார், நல்லக்கண்ணு.

"என்ன செய்வது? இன்றைக்கு இதைக் குடித்து விடுவோம். நாளையிலிருந்து கொஞ்சம் ஜாக்கிரதை யாகப் பார்த்து வடிப்போம்" என்றான் பரமன்.

"நான் அப்பவே சொன்னேனே கேட்டாயா, பரமு! இதெல்லாம் ரொம்பத் தொந்திரவு. பேசாமல் நாளையி லிருந்து ஒட்டலிலோ வேறு எங்காவதோ சாப்பாட் டுக்கு ஏற்பாடு செய்து கொள்வோம" என்றார் நல்லக்கண்ணு.

"நாளையிலிருந்து எல்லாம் சரியாகிவிடும். நீங்க ஒன்றுக்கும் கவலைப்படாதீர்கள்" என்று சொல்லிவிட்டு அடுப்பிலிருந்த சோற்றுப்பானையை இறக்கினான், பரமன்.

அதே நேரத்தில் வாசுவின் அம்மா சாதம் சமைத்து முடித்ததும் ஒரு பாத்திரத்தை எடுத்து அதில் சாதம் வைத்தாள். சிறிய பாத்திரம் ஒன்றில் சாம்பார் ஊற்றி அதில் வைத்தாள். சாதத்தின் மேல் இலையை வைத்துப் பதார்த்தம் வைத்தாள். இதையெல்லாம் வாசு வியப் புடன் பார்த்துக்கொண்டிருந்தான்.

பாத்திரத்தில் எல்லாம் வைத்து ஆனதும் ஒரு துணியைக் கிழித்து அதில் பாத்திரத்தை வைத்துக் கட்டினாள். பிறகு இரண்டு இலைகளைச் சுருட்டி அதில் வைத்துவிட்டு, "வாசு இதை எடுத்துப்போய் பரமுவின் வீட்டிலே கொடுத்து விட்டு வா. பாவம், மத்தியானம்

வெறும் பலகாரம்தான் சாப்பிட்டிருப்பாங்க" என்றாள்.

பரமனின் கதையைக் கேட்கும்போது வாசுவுக்கும் வருத்தமாகத்தான் இருந்தது. அவன் வருத்தப்பட்டு என்ன செய்ய முடியும்? 'நல்ல வேளையாக அம்மா சற்று தன் குணத்தை மாற்றிக்கொண்டு அவனுடன் பேசவாவது அனுமதித்தாளே! இந்த நிலையில் நாம் அவனுக்கு என்ன உதவி செய்ய முடியும்?' என்று இத்தனை நேரமாக நினைத்துக்கொண்டிருந்தான், வாசு.



இப்பொழுது அம்மா பரமனுக்கும் அவன் அணணுவுக்கும் சாதம் கட்டிக் கொடுத்தது அவனுக்கு மிகவும் மகிழ்ச்சியைத் தந்தது.

"ஏம்மா, அவர்கள் சாப்பாட்டை வாங்கிக் கொள்வார்களா?" என்று சந்தேகத்துடன் கேட்டான், வாசு.

"வாங்கிக் கொண்டால் கொடுத்து விட்டு வா. வேண்டாமென்றால் திருப்பிக் கொண்டு வந்து

விடு'' என்றாள் அம்மா.



வாசு மகிழ்ச்சியுடன் சாப்பாட்டுப் பாத்திரத்தைத் தூக்கிக் கொண்டு பரமனின் வீடு நோக்கிச் சென்றான். 'பரமனும் அவன் அண்ணாவும் சாப்பாட்டுக்கு இவ்வளவு ஏன் கஷ்டப்பட வேண்டும்? வேறு எங்காவது பணம் கொடுத்துச் சாப்பிடுவதை நம் வீட்டில் கொடுத்துச் சாப்பிட்டால் எவ்வளவு நன்றாயிருக்கும்? பரமனிடம் அடிக்கடி சேர்ந்து பழகச் சந்தர்ப்பம் கிடைக்குமே!' என்று பலவாறாக நினைத்தபடியே சென்று கொண்டிருந்தான் வாசு.

மாந்தோப்பின் பக்கமாகச் சென்று வலதுபுறம் திரும்பிச் சற்று தூரம் நடந்து சென்றால் பரமனின் வீடு வந்துவிடும். பரமனும் அவன் அண்ணாவும் முதலில் சாப்பாட்டை வாங்கிக்கொள்ள மறுத்துவிடுகிறார்கள். வாசு எவ்வளவோ கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறான்! ''இந்த ஒரு வேளையாவது வாங்கிக் கொள்ளுங்க சார். வீணாக உடம்பைக் கெடுத்துக் கொள்ள வேண்டாமென்று அம்மா சொன்னார்கள் சார்'' என்று கூறுகிறான்.

வாசுவின் அன்புக்காகவாவது சாப்பாட்டை வாங்கிக்கொள்ள வேண்டுமென்று அவர்களுக்குத் தோன்றுகிறது. சாப்பாட்டுப் பாத்திரத்தைப் பிரித்து வைத்துக் கொள்ளுகிருர்கள். வாசு இருவருக்கும் இலை போடுகிருன். இரண்டு டம்ளர்களில் தண்ணீர்கொண்டு வந்து வைக்கிருன். தன் கையாலேயே இருவருக்கும் பறிமாறுகிருன். இருவரும் மகிழ்ச்சியுடன் சாப்பிடு கிருர்கள். அந்த மகிழ்ச்சியில் தன்னை மறந்து இருக்கிருன் வாசு.

இம்மாதிரி நடந்துகொண்டே தான் பரமனுக்கும், நல்லக்கண்ணுவுக்கும் பறிமாறுவது போலவும், அவர் கள் மகிழ்ச்சியுடன் சாப்பிடுவது போலவும் நினைத்த வாறே போய்க்கொண்டிருக்கிருன் வாசு.

அப்பொழுது மாந்தோப்பிலிருந்து 'சர்'ரென்று ஒரு கல் பறந்து வந்து அவன் கையில் தாக்குகிறது. வலி பொறுக்க முடியாமல் 'ஆ'வென்று கையை உதறுகிருன் வாசு. அவன் கையிலிருந்த சாப்பாட்டுப் பாத்திரம் கீழே விழுந்து உருண்டு ஓடுகிறது.

# 8

ஒரு சிறுவன் வீதியில் அழுதுகொண்டிருந்தான். அந்த வழியாகச் சென்ற வழிப்போக்கன் ஒருவன் அவனை நெருங்கி ''ஏன் தம்பீ அழுகிறாய்?'' என்று கேட்டான். அதற்கு அந்தச் சிறுவன், ''அதோ போகிறானே அந்த மனிதன் என்னிடமிருந்த காசைப் பிடுங்கிக்கொண்டு போய்விட்டான்'' என்கிறான்.

''அப்படியா! என்ன அநியாயம்! வா, தம்பீ, கேட் போம்'' என்று அந்தச் சிறுவன் காட்டிய மனிதனிடம் செல்கிறான், வழிப்போக்கன்.

சிறுவனிடமிருந்து காசைப் பறித்துக்கொண்ட வனின் முகத்தைக் கூர்ந்து பார்க்கிறான் வழிப் போக்கன். உடனே திரும்பிப் பார்க்காமல் ஓட்டம் பிடிக்கிறான் வழிப்போக்கன்.

சிபாரிசுக்காகக் கூட்டிச்சென்று திடீரென்று ஓடி விட்ட அந்த வழிப்போக்கனைப் பற்றி அந்தச் சிறுவன்

என்ன நினைப்பான்? 'இவன் ஏன் இப்படிப் பயந்து ஓடு கிறான்?' என்றுதானே நினைப்பான்.

கிட்டத்தட்ட காசைப் பறிகொடுத்த அந்தச் சிறு வனின் நிலையில் வாசு இருந்தான். பரமனுக்கும், அவன் அண்ணாவுக்கும் சாப்பாடு எடுத்துச் செல்லும் போது மாந்தோப்பிலிருந்து ஒரு கல் வந்து அவ னுடைய கையில் தாக்கியது. சாப்பாட்டுப் பாத் திரத்தைக் கீழே போட்டுவிட்டான். சாப்பாடெல்லாம் தரையில் கொட்டிப் பாழாகிவிட்டது.

கல் அடித்துச் சாப்பாட்டுப் பாத்திரத்தை விழச் செய்தவன் யார் என்று நொடியில் புரிந்துகொண்டான் வாசு. அந்தக் கிளியனூரில் கந்தசாமி ஒருவனைத் தவிர வேறு எவரும் இவ்வளவு துணிச்சலாகக் கவண்கல் அடிக்கமாட்டார்கள்.

'முரட்டுப் பயல், அவனை யார் கேட்க முடியும்? ஏதாவது கேட்டால் முரட்டுத்தனமாகப் பேசுவான். அவனிடம் நமக்கென்ன பேச்சு?' என்று நினைத்த வாசு கண்களில் நீர்வழிய வெறும் பாத்திரத்துடன வீட்டுக் குச் சென்றான்.

சென்ற சிறிது நேரத்திற்கெல்லாம் வாசு திரும்பி வருவதையும் அவன் கையிலிருந்த சாப்பாட்டுப் பாத் திரம் அலங்கோலமான நிலையில் இருந்ததையும் பார்த்த அம்மா பதறியபடியே "என்னடா வாசு! என்ன நடந்தது?" என்று கேட்டாள்.

வாசு கேவியபடியே, "மாந்தோப்பு பக்கமாகப் போய்க்கொண்டிருந்தபோது கந்தசாமி கவண்கல்லால் அடித்துவிட்டான்" என்று ரத்தம் கசிந்துகொண் டிருந்த கையைக் காட்டினான்.

"அடப்பாவி, அவனுக்கு என்ன வந்தது? அவனைச் சும்மா விடக்கூடாது. வா, போவோம்" என்று வாசுவைத் தரதரவென்று இழுத்துக்கொண்டு கந்தசாமியின் அப்பாவின் மளிகைக் கடைக்குச் சென்றாள் அம்மா.

அம்மா கடைக்கு வரும்போது கந்தசாமி நல்ல பிள்ளை மாதிரி கடையில் அப்பாவுக்குக் கூடமாட ஒத்தாசை செய்துகொண்டிருந்தான்.

கந்தசாமியின் அப்பா யாரோ ஒரு தாடிக்காரரிடம் பேசிக்கொண்டிருந்தார்.

வாசுவின் அம்மா வாசுவை அழைத்துக்கொண்டு கையில் வெறும் பாத்திரத்தையும் எடுத்துக்கொண்டு கோபமாக வந்து கொண்டிருந்தாள். அப்பொழுது கந்தசாமியின் அப்பாவிடம் பேசிக்கொண்டிருந்த தாடிக்காரர் கோபத்துடன் வரும் அம்மாவைக் கூர்ந்து பார்த்தார். வாசுவின் அம்மாவும் அந்தத் தாடிக்காரரைக் கூர்ந்து பார்த்தாள். அவ்வளவுதான்; அவள் முகம் பேயறைந்தது மாதிரி மாறிவிட்டது. எவ்வளவு வேகமாக வந்தாளோ, அதே வேகத்துடன் வாசுவை அழைத்துக்கொண்டு வீடு திரும்பினாள். வாசுவுக்கு அம்மாவின் போக்கு புரியவில்லை. 'இவ்வளவு கோபமாக வந்த அம்மா அந்தத் தாடிக்காரரைப் பார்த்து எதற்காகப் பயந்து கொண்டு திரும்பவேண்டும்? அந்தத் தாடிக்காரர் யார்? ஒருவேளை இவர்தான் காணாமல்போன நம் அப்பாவோ' என்று குழம்பிக் கொண்டிருந்தான், வாசு.

"அந்தத் தாடிக்காரர் யார்?" என்று அம்மாவைக் கேட்கவும் அவனுக்குப் பயமாக இருந்தது. 'விடுவிடு

என்று வீட்டுக்கு வந்த அம்மா அந்தத் தாடிக்காரர் தன்னைத் தொடர்ந்து வருகிறாரா என்று திரும்பிப்பார்த் தாள். நல்லவேளையாக அந்தத் தாடிக்காரனைக் காணோம். வீட்டுக்கு வந்து வெளிக்கதவைத் தாழ்ப் பாள் போட்ட பிறகுதான் நிம்மதியாகப் பெருமூச்சு விட்டாள், அம்மா.

“வாசு, எனக்கு உடம்பு என்னவோ போல் இருக் கிறது. நீயே சாப்பாட்டைப் போட்டுச் சாப்பிட்டுக் கொள்” என்றாள் அம்மா.

“மயக்கமாக இருக்கிறதா, அம்மா?” என்று பயந்த குரலில் கேட்டான் வாசு.

“இல்லை, வாசு; மனசு சரியில்லை. நீ போய்ச் சாப்பிடு” என்றாள் அம்மா.

“எனக்கும் பசியில்லை, அம்மா!” என்றான் வாசு.

“பட்டினி இருக்கக்கூடாது வாசு! ஒரு கவள மாவது சாப்பிட்டுவிட்டு வா!” என்றாள் அம்மா.

அதற்கு மேல் மறுத்துச் சொல்ல அவனால் முடிய வில்லை. இயந்திரம் மாதிரி இலையை எடுத்துப் போட்டுக்கொண்டு கொஞ்சம் சாதம் வைத்துக்கொண்டு ரசம் ஊற்றிக்கொண்டான். ஒரு பிடிசோறு எடுத்து வாயில் வைத்தான் அவனுக்குச் சாப்பிடவே பிடிக்க வில்லை. ‘அம்மா எதற்காகக் கவலைப்படுகிறார்கள்? அந்தத் தாடிக்காரர் யார்?’ இதுவே அவன் மனத்தில் மாறி மாறித் தோன்றி அவனை வதைத்துக் கொண் டிருந்தது.

ஏதோ பெயருக்கு நானும் சாப்பிட்டேன் என்று இரண்டு கவளம் சாப்பிட்டுவிட்டுக் கைகளை அலம்பிக்

கொண்டான் வாசு. அம்மா பாயை எடுத்துப் போட்டுப் படுத்துக் கொண்டிருந்தாள்.

வாசு அம்மாவை நெருங்கிப் பார்த்தான். அம்மா கண்களை மூடிக் கொண்டிருந்தாள். ஆனுலும் அவ ளுடைய கண்களிலிருந்து கண்ணீர் தாரை தாரையாக வழிந்துகொண்டிருந்தது.

வாசு அம்மாவின் பக்கத்தில் உட்கார்ந்தான்.

"அழறியா அம்மா?" என்று துக்கம் தொண் டையை அடைக்கக் கூறினுன்.

அம்மா திடுக்கிட்டு எழுந்து உட்கார்ந்தாள். தன்னை மறந்து கண்ணீர் விட்டுக் கொண்டிருந்ததை வாசு பார்த்துவிட்டானே என்று நினைத்தபடி அவசர அவசரமாகப் புடவைத் தலைப்பினுல் கண்களைத் துடைத்துக்கொண்டாள்.

"ஒன்றுமில்லையடா ராஜா; அப்பாவை நினைச்சிக் கிட்டேன். அழுகை வந்துவிட்டது. சாப்பிட்டாயா, கண்ணு" என்று பேச்சை மாற்றினுள் அம்மா.

"சாப்பிட்டேம்மா!" என்ருன் வாசு.

அடுத்தபடியாக அம்மாவின் வாயிலிருந்து தன் தகப்பனுரைப் பற்றி ஏதாவது விஷயங்கள் வருமோ என்று ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தான் வாசு.

ஆனுல் அம்மா அதற்குமேல் ஒன்றும் பேசவில்லை. எழுந்து சென்று சாப்பாட்டுப்பானையைப் பார்த்தாள்.

"வாசு என்னசாப்பிட்டே, நீ? எழுந்துவா இங்கே" என்று ஓர் அதட்டல் போட்டாள்.

"இல்லேம்மா, எனக்குப் பசியில்லே. என்னைத் தொந்தரவு செய்யாதே" என்று ஒரேயடியாகச் சொல்லி விட்டான் வாசு.

"வரவர நீ வயிற்றுக்குச் சரியாகச் சாப்பிடாமல் உடம்பைக் கெடுத்துக் கொள்கிறாய். இது நல்லது இல்லே. அவ்வளவுதான் நான் சொல்லுவேன்" என்று சொல்லிவிட்டு மீதமிருந்த சாதத்தில் தண்ணீர் ஊற்றிவிட்டுத் தன் வேலைகளைக் கவனிக்கலானாள், அம்மா.

அடுத்த நாள் பலகார விற்பனைக்காக மாவு அரைப்பதிலும், வெங்காயம் பச்சை மிளகாய் முதலியவைகளை நறுக்கி வைக்கவும் இரவு பதினொரு மணி வரை ஆகி விடும். இன்றையத் தினம் உடல்நிலை சரியில்லே. என்றாலும் அம்மா பேசாமல் படுத்திருக்கவில்லே. வழக்கம் போலத் தன் வேலைகளைக் கவனிக்கலானாள்.

என்னென்னவோ நினைத்துக்கொண்டு படுக்கையில் படுத்துக்கொண்டிருந்த வாசு ஒன்பது அடிக்கும்போதே தூங்கிவிட்டான்.

இரவு பதினோரு மணிக்குப் பிறகு ஒருவழியாக அம்மாவின் வேலைகள் முடிந்தன. மாவு பாத்திரங்களையும் மற்றவற்றையும் எடுத்து ஒழுங்காக மூடி வைத்துவிட்டுக் கைகளை அலம்பிக்கொண்டாள். பிறகு வாசுவின் அருகில் வந்து பார்த்தாள். வாசு நன்றாகத் தூங்கிக்கொண்டிருந்தான். கொஞ்ச நேரம் வாசுவின் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தாள். பிறகு வாசுவின் பக்கத்தில் இருந்த சிமினி விளக்கின் திரியைச் சற்று சிறியதாக்கிவிட்டுப் போனாள்.

தினமும் அம்மா வாசுவின் முகத்தைப் பார்த்து விட்டுப் பிறகுதான் படுக்கச் செல்வது வழக்கம். இன்றையத் தினம் வழக்கத்திற்கு விரோதமாக தகர டிரங்குப்பெட்டி இருந்த இடத்திற்குச் சென்றாள். பின்னில் குத்திவைத்திருந்த சிறுசாவி ஒன்றை எடுத்து டிரங்குப் பெட்டியின் பூட்டைத் திறந்தாள், அம்மா. டிரங்குப் பெட்டியில் இருந்த துணிகளை யெல்லாம் கலைத்து ஒரு புறமாகத் தள்ளினாள். கீழே இருந்த துணிமுடிப்பு ஒன்றை வெளியே எடுத்தாள். விளக்கு வெளிச்சத்தில் துணிமுடிப்பைப் பிரித்தாள். உள்ளே நோட்டுகள் இருந்தன. ஐந்து ரூபாய், பத்து ரூபாய், ஒரு ரூபாய், இரண்டு ரூபாய் என்று நிறைய நோட்டுகள் இருந்தன. அவற்றை எடுத்து ஒவ்வொன்றாக எண்ணினாள் அம்மா.

இந்தச்சமயத்தில் ஏதோ கனவு கண்டு திடீரென்று கண்விழித்துக்கொண்டான் வாசு. அம்மாவைக் கூப்பிடலாமென்று வாயைத் திறந்தான். ஆனால், அம்மா டிரங்குப் பெட்டியின் அருகில் உட்கார்ந்து கொண்டு நோட்டுகளை எண்ணுவதைப் பார்த்ததும் வாயை அடக்கிக்கொண்டான்.

அம்மா அந்த டிரங்குப் பெட்டியை அவன் கையால் திறக்க விடுவதில்லை. அவனுக்குத் தேவையான துணிமணிகள் ஏதாவது அதிலிருந்து எடுக்க வேண்டி வந்தால் அம்மாவே வந்து திறந்து எடுத்துக் கொடுப்பாள். எப்பொழுதாவது ஒருதடவை அந்தத் துணி முடிப்பு வாசுவின் கண்களில் படும். உடனே அதன் பேரில் வேறு துணிகளைத் தள்ளி வாசுவின் கண்களுக்குப்படாமல் அதை மறைத்துவிடுவாள் அம்மா. அம்மா அந்தத் துணி முடிப்பை மறைத்து வைக்க வைக்க

வாசுவுக்கு எப்படியாவது அதில் என்ன இருக்கிற தென்று பார்த்துவிட வேண்டுமென்று ஆவல். எத்தனையோ தடவை அம்மா கைவேலையாக இருக்கும் பொழுது வேண்டுமென்றே டிரங்குப்பெட்டிச் சாவியைக் கேட்பான் வாசு. அம்மா அப்பொழுது கூட அந்தச் சாவியை வாசுவிடம் தரமாட்டாள். தன் வேலைகள் எல்லாம் முடிந்த பிறகு தானே வந்து டிரங்குப் பெட்டியைத் திறந்து வாசு கேட்டதை எடுத்துக் கொடுப்பாள். அப்பொழுதெல்லாம் வாசுவுக்குப் பெருத்த ஏமாற்றமாயிருக்கும். 'அம்மா, நம்மைக்கூட நம்பி பெட்டிச் சாவியைத் தரமாட்டேன்கிருளே' என்று வேதனைப்படுவான்.

இப்பொழுது அவன் கண்ணெதிரில் — அவன் தூங்குகிருன் என்று நினைத்துத் துணி முடிப்பைப் பிரித்து நோட்டுகளை எண்ணிக் கொண்டிருக்கிருள் அம்மா.

அந்தச் சின்னஞ்சிறிய துணி முடிப்பிற்குள் இவ்வளவு நோட்டுகள் இருக்கும் என்று வாசு கனவில் கூட நினைக்கவில்லை.

'அடேயப்பா, அவ்வளவு நோட்டுகள் இருக்கிறதே! ஐயாயிரம் ருபாய் இருக்குமா, பத்தாயிர ருபாய் இருக்குமா? எல்லாம் பத்துருபாய் நோட்டுகளாயிருந் தாய் அவ்வளவு ருபாய் இருக்கலாம். இல்லை ஒரு ருபாய் நோட்டாயிருந்தால் ஒரு முன்னூறு நானூறு இருக்கும்' என்று நினைத்தவாறே பிரமிப்புடன் கண் கொட்டாமல் பார்த்துக்கொண்டிருந்தான், வாசு.

'அம்மாவுக்கு இவ்வளவு பணம் ஏது? பலகாரம் விற்று அதில் சேர்த்து வைக்கிருள் போலிருக்கிறது.

பெட்டியில் இவ்வளவு பணம் வைத்துக்கொண்டு நமக்கு ஒரு நல்ல சட்டை எடுத்துத் தர மூக்கால் அழுகிறளே!' என்று அம்மாவின் பேரில் குறைப் பட்டுக்கொண்டான்.

அம்மா நோட்டுகளை எண்ணி முடித்துவிட்டு மீண்டும் துணி முடிப்பில் வைத்துக் கட்டிஞள். பழையபடி டிரங்குப் பெட்டியில் வைத்துப் பூட்டி விட்டுப் படுக்க வந்துவிடுவாள் என்று நினைத்து இலேசாகக் கண்களை மூடிக்கொண்டான் வாசு.

ஆனல் அம்மா அந்தப் பணமுடிப்பை டிரங்குப் பெட்டியில் வைக்கவில்லை. ஒரு பெருங்காய டப்பியில் வைத்தாள். எழுந்து அடுப்பண்டை சென்ருள். கீழே தரை சூடாகிவிடாமல் இருக்க மணல் கொட்டி யிருந்தது. அந்த மணலையெல்லாம் ஒருபுறமாகத் தள்ளிஞள். தரையில் இருந்த செங்கல்லை அப்படி அப்படியே எடுத்து வைத்தாள். கீழே பள்ளமாக இருந்தது. அதற்குள் அந்தப் பெருங்காய டப்பியை வைத்துவிட்டுப் பழையபடி செங்கல்களை அடுக்கிஞள். பிறகு முன்போல மணலைப் பரப்பிஞள். அதன்பேரில் அடுப்பை எடுத்து வைத்தாள். பிறகு கைகளைக் கழுவிக் கொண்டு விளக்கைச் சிறிதாக்கிவிட்டு வாசுவின் அருகில் வந்தாள். அம்மா அருகில் வரும்போது இத்தனை நேரமாக விழித்துக்கொண்டிருந்த வாசு கண்களைக் கெட்டியாக மூடிக்கொண்டு தூங்குவதைப் போல் பாசாங்கு செய்துகொண்டிருந்தான்.

பொழுது விடிந்ததும் வாசு அம்மாவைப் பார்த்தான். அம்மா அடுப்படியில் வேலைசெய்துகொண் டிருந்தாள். இரவு நடந்த சம்பவங்கள் எல்லாம் கனவோ என்று சந்தேகப்பட்டான், வாசு. அடுப்பின்

பக்கத்தில் மணல் பரவியிருந்ததைப்பார்த்து 'நிச்சயம் கனவாயிருக்காது' என்று நினைத்துக் கொண்டான், வாசு.

இருந்தாலும் 'டிரங்குப் பெட்டியில் பணமுடிப்பு இருக்கிறதா, இல்லையா?' என்று தெரிந்துகொள்ள அவனுக்கு ஆவலாக இருந்தது.

குளித்துவிட்டு வந்ததும், "அம்மா, சட்டையும் நிஜாரும் எடுத்துக் கொள்ள வேண்டும். பெட்டிச் சாவியைக் கொடு" என்ருன், வாசு.

அம்மா குளித்துவிட்டு எதிரே நிற்கும் வாசுவைப் பார்த்தாள். "உனக்கு எப்போதும் ரயிலுக்குப் போகிற மாதிரிதான் அவசரம். இந்தா" என்று சொல்லிக் கொண்டே சாவியைக் கழற்றி அவனிடம் தந்தாள்.

வாசு ஆவலாகச் சென்று டிரங்குப் பெட்டியைத் திறந்தான். அவன் விரும்பிய சட்டையும் நிஜாரும் மேலேயே இருந்தன. இருந்தாலும் அதைக் கவனிக்காதவன் போல் பெட்டி பூராவையும் கிளறினுன். அந்தத் துணிமுடிப்பைக் காணேம்!

'ஆமாம், அம்மா அதை அடுப்புக்கு அடியில் தான் புதைத்து வைத்திருக்கிருள். அதனுல்தான் தைரியமாகச் சாவியை நம்மிடம் கொடுத்தாள். அம்மா புதைத்து வைத்திருக்கிற இடம் நமக்குத் தெரியாதென்று நினைத்திருக்கிருள், பாவம்!' என்று நினைத்தபடியே அடியிலிருந்த ஒரு துணியைத் தள்ளினுன், வாசு. அதற்குள்ளிருந்து காகிதத்தில் சுற்றிய அட்டை ஒன்று விழுந்தது. காகிதத்தை விலக்கி அந்த அட்டையைப் பார்த்தபோது அது ஒரு புகைப்படம் என்பது தெரிந்தது. அதில் இருந்த உருவங்களைப் பார்த்தான்.

ஓர் அம்மா கைக்குழந்தையை வைத்துக்கொண்டு நின்று கொண்டிருக்கிருள். பக்கத்தில் ஒருவர் நின்று கொண்டிருக்கிறார். வாசு புகைப்படத்தில் உள்ள உருவங்களைக் கூர்ந்து பார்த்தான்.

'ஆமாம், அம்மாதான் இது. பக்கத்தில் நிற்பவர் யார்? இவர்தான் நம் அப்பா. அம்மா தூக்கி வைத்துக் கொண்டிருப்பது என்னையா? அடடே! அடையாளமே தெரியவில்லையே! கன்னமெல்லாம் உப்பிப் பொக்கை வாயைத் திறந்து சிரித்துக் கொண்டிருப்பது நான்தானு?' என்று வாசு நினைத்துக் கொண்டிருக்கும் போது, "என்னடாது, ஒரு சட்டையும் நிஜாரும் எடுக்க இத்தனை நேரமா?" என்று சொல்லியபடியே திரும்பிப் பார்த்த அம்மா, வாசுவின் கையிலிருந்த புகைப் படத்தைப் பார்த்துவிட்டாள். உடனே கைவேலையை அப்படியே போட்டுவிட்டு எழுந்து வந்து அந்தப் புகைப்படத்தை வெடுக்கென்று அவன கையிலிருந்து பிடுங்கிக்கொண்டாள்.

"இது என்ன வேலை? இதற்குத்தான் உன்னிடம் சாவி தரமாட்டேன் என்கிறது. போ, போ" என்று சொல்லிவிட்டு ஒரு சட்டையையும் நிஜாரையும் எடுத்து வெளியில் எறிந்துவிட்டு முன்போல் பெட்டியைப் பூட்டிச் சாவியைப் பத்திரமாகப் 'பின்'னில் கோத்துக் கொண்டாள், அம்மா.

அன்றையத் தினமெல்லாம் வாசுவுக்கு ஒன்றுமே ஓடவில்லை. 'அம்மா எதற்காக இவ்வளவு பணம் சேர்த்து வைத்திருக்கிருள்? திடீரென்று அதை எடுத்து இடம் மாற்றி வைக்கவேண்டிய அவசியம் என்ன? கந்தசாமியின் அப்பாவின் கடையில் பார்த்த தாடிக்

காரர் யார்? அவர்தான் நம்முடைய அப்பாவாக இருப்பாரோ? அப்படியானால், அவரை வீட்டுக்கு அழைத்து வருவதற்கென்ன? எதற்காக அவரைப் பார்த்து அம்மா பயந்துபோய் ஓடிவரவேண்டும்? ஒன்றுமே புரியவில்லையே' என்று மூளையைப் போட்டுக் குழப்பிக் கொண்டிருந்தான், வாசு.

அம்மாவின் வேலைகள் எல்லாம் முடிந்தன. பலகாரக் கூடையை எடுத்து இடுப்பில் வைத்துக் கொண்டாள். "வாசு உனக்குப் பலகாரம் வைத்திருக்கிறேன். அதைச் சாப்பிட்டுவிட்டு அந்தத் தூக்கில் ரெண்டுபேர் சாப்பிடும்படியான சாப்பாடு வைத்திருக்கிறேன். மத்தியானம் பரமுவுக்கும் போட்டு நீயும் சாப்பிடு" என்றாள் அம்மா.

'பரமு' என்று சொன்னபிறகுதான் வாசுவுக்குத் தன் நண்பனின் நினைவு வந்தது. முன்தினம் அவனுக்காகவும் அவனுடைய அண்ணாவுக்காகவும் சாப்பாடு எடுத்துச் சென்றது, கந்தசாமி மாந்தோப்பில் இருந்து கல் எறிந்தது, கந்தசாமியின் கடையில் தாடிக்காரரைப் பார்த்தது எல்லாம் நினைவுக்கு வந்தன.

தாடிக்காரரைப் பார்த்த பிறகு அம்மா நடந்து கொண்ட விதத்தில் அவன் பரமுவைப் பற்றி அடியோடு மறந்துவிட்டான். மீண்டும் இப்பொழுதுதான் அவனுக்குப் பரமனின் நினைவு வந்தது.

'ஐயோ பாவம்! ராத்திரி சாப்பிட்டானோ இல்லையோ. இன்றைக்குச் சாப்பாட்டிற்கு என்ன செய்வான்? அதுதான் அம்மா அவனுக்கும் சேர்த்துச் சாதம் வைத்திருக்கிறாளே. இரண்டுபேரும் எதிரும் புதிருமாக உட்கார்ந்துகொண்டு சிரித்துப் பேசிய

படியே ஆனந்தமாகச் சாப்பிடலாம். ஆனால் பாவம், வாத்தியார் சாப்பாட்டுக்கு என்ன செய்வார்?' இதை நினைத்ததும் அவனுக்குப் பரமனின் அண்ணா நல்லக் கண்ணுவின் மீது அனுதாபம் ஏற்பட்டது.

'இன்றைக்குப் பள்ளிக்கூடம் போவதற்கு முன் பரமுவின் வீட்டுக்குப் போய் அவனையும் கூட்டிக் கொண்டு போகவேண்டும்' என்று நினைத்தான் வாசு. அம்மா போனபிறகு கையிலிருந்த புத்தகத்தைத் தூர வைத்துவிட்டு உள்ளே செல்வதற்காக எழுந்தான். அப்பொழுது அவன் வீட்டை நோக்கி ஓர் உருவம் வந்துகொண்டிருந்தது. வாசு சற்று நேரம் நின்று அந்த உருவத்தைக் கூர்ந்து பார்த்தான்.

'ஆமாம். அதே தாடிக்காரர்தான். இங்கே ஏன் வருகிறார்?' என்று அவன் குழம்பிக்கொண்டிருந்தபோதே, "என்ன தம்பி, அம்மா இல்லையா?" என்று கேட்டபடி வந்தார் தாடிக்காரர். வாசு பதில் சொல்வதற்குள் ரொம்பவும் உரிமை உள்ளவர்மாதிரி திண்ணையில் உட்கார்ந்துகொண்டார். வாசுவின் புத்தகங்களைப் பார்த்துவிட்டு, "ஓ, எட்டாவது வகுப்பு படிக்கிறாயா? நன்றாகப்படி, நன்றாகப்படி" என்று சொல்லிவிட்டு வீட்டுக்குள் சுற்றுமுற்றும் பார்த்தார் தாடிக்காரர். அவர் கண்ணுக்கு முதலில் தென்பட்டது அந்தப் பழைய டிரங்குப் பெட்டிதான்.

அவரிடம் என்ன பேசுவது என்று புரியாமல் திகைத்துக்கொண்டிருந்த வாசு ஒரு வழியாகத் தட்டுத் தடுமாறி, "நீங்க யாருன்னு தெரியலையே" என்றான்.

"நானா? நான் உங்களுக்கு ரொம்பவும் வேண்டியவன்" என்றார் தாடிக்காரர்.

'இவர் சொல்வது ஒன்றும் புரியவில்லையே! ஒரு வேளை இவர்தான் நம் அப்பாவோ? அப்படியானல் இவர் ஏன் இத்தனை வருஷங்கள் நம்மையும் அம்மா வையும் தவிக்கவிட்டுத் தலைமறைவாக இருந்து வரு கிருர்?' இப்படிப் பல கேள்விகள் அவன் மனத்தில் அடுக்கடுக்காகத் தோன்றி மறைந்தன.

அந்தக் கேள்விகளுக்கு விடையையும் ஒருமாதிரி யாக அவனே ஊகித்துக் கொள்ளலானன். ஒருமுறை அவன் தங்கபுரம் போய் காணமல்போன தன் அப்பா வைப் பற்றி செய்தி அறிந்துவரத் தனக்குச் சாப்பிடக் கொடுத்த பலகாரங்களைச் சாப்பிடாமல் விற்றுப் பணமாக்கினனே, அந்தப் பணத்தைப் பார்த்ததும் அவன் அம்மா அவனை அடித்து, 'எங்கே திருடினய்? மரியாதையாகச் சொல். உனக்கும் உன் அப்பா மாதிரி திருட்டுப் புத்திதானே இருக்கும்' என்று திட்டியது ஞாபகத்திற்கு வந்தது. அதிலிருந்து அவன் அப்பா ஏதோ திருட்டுக் குற்றம் செய்துவிட்டார் என்று மட்டும் தெரிந்துகொண்டான். ஆனல், 'அவர் எங்கே திருடினர்? எவ்வளவு திருடினர்? ஏன் திருடினர்?' என்பதைப் போன்ற கேள்விகளுக்கு இதுவரை அவ னுக்குப் பதில் கிடைக்கவில்லை.

"தம்பீ, உன் பேர் என்ன?" என்ருர் தாடிக்காரர் வாசுவைப் பார்த்து.

'நம் அப்பாவாக இருந்தால் இவர் ஏன் நம் பெய ரைக் கேட்கிருர்? இவர் நம் அப்பா இல்லையோ?' என்று சந்தேகப்பட்ட வாசு தன் பெயரைச் சொன்னன்.

"ஓ வாசு, வாசு! ஆமாம். மறந்தே போய்விட் டேன். சின்ன வயசிலே பார்த்தது. அப்பப்பா! எவ்வ

ளவு ஜோராய் வளர்ந்திருக்கிருய்?'' என்று அவனைத் தட்டிக் கொடுத்தார் தாடிக்காரர்.

அவர் பேசுவதிலிருந்து அவனுல் ஒன்றும் ஊகிக்க முடியவில்லை. 'சட்'டென்று, ''நீங்கள்தான் என்அப்பாவா? ஏன் இத்தனை நாள் என்னையும் அம்மாவையும் தவிக்க விட்டுச் சென்றீர்கள்?' என்று கேட்கவும் முடியாத நிலை. ஒருவேளை அவர் அப்பாவுக்குத் தெரிந்த நண்பராகவோ அல்லது உறவினர்களில் ஒருவராகவோ இருந்துவிட்டால், எவ்வளவு மோசமாய்ப் போய்விடும். அதனுல்தான் வாசு தன் ஆவலையெல்லாம் அடக்கிக்கொண்டு அவர் வாய் மூலமாக என்ன வருகிறது என்று கவனிக்கலானுன்.

''அடடே, பேச்சுப் பராக்கில் நேரம் போனதே தெரியவில்லையே. ஆமாம், உனக்கு இன்றைக்குப் பள்ளிக்கூடம் இல்லையா?'' என்ருர் தாடிக்காரர்

''இருக்கிறது, பலகாரம் சாப்பிட்டுவிட்டுப் போக வேண்டும்'' என்ருன் வாசு.

''சரி சரி, போய்ச் சாப்பிட்டுவிட்டுப் புறப்படு. நேரமாகிறது'' என்ருர் தாடிக்காரர்.

வாசு புத்தகங்களை அடுக்கிப் பையில் போட்டுக்கொண்டு உள்ளே சென்ருன். வெளியே ஒருவரைக் காக்க வைத்துவிட்டுத் தான்மட்டும் தனியாகச் சாப்பிடுவது அவனுக்குப் பிடிக்கவில்லை. தனக்காக அம்மா வைத்துவிட்டுப் போன பலகாரத்தில் பாதியை இன்னொரு தட்டில் வைத்து தாடிக்காரரிடம் கொடுத்து, ''சாப்பிடுங்க'' என்ருன்.

''அடடே, பலகாரமா? எனக்கு எதுக்கு வாசு? சரி, சரி கொடு. இவ்வளவு அன்பா நீ கொடுக்கும்போது

வேண்டாம் என்று சொல்லக்கூடாது'' என்று சொல்லியபடியே இட்டிலியைப் பிட்டு வாயில் போட்டார் தாடிக்காரர்.

"ஆகா, என்ன ருசி, என்ன ருசி! நீ சின்னப் பையனாயிருக்கும்போது உன் அப்பாவுடன் அடிக்கடி உங்க வீட்டுக்கு வருவேன். உன் அப்பாகூட உன்னைப் போலத்தான் எதிரில் ஒருத்தர் இருக்கும்போது அவர்களை விட்டுவிட்டுச் சாப்பிட மாட்டார்'' என்று தாடிக்காரர் சொல்லிக்கொண்டிருக்கும்போதே வாசுவுக்கு அவர் யாரென்று தெளிவாகத் தெரிந்துவிட்டது.

அந்தத் தாடிக்காரர் அவனுடைய அப்பா அல்ல; அப்பாவின் நண்பர். 'அப்படியானால் அம்மா அவரைக் கண்டு பயப்படக் காரணம் என்ன? இவருக்கு அப்பாவைப் பற்றிய ரகசியம் ஏதாவது தெரிந்திருக்குமோ? இவரைக் கேட்டால் அப்பாவைப் பற்றிய பூரா விவரமும் சொல்வாரே?' என்று பலவாறாக நினைத்துக்கொண்டிருந்தான் வாசு.

அப்பொழுது கந்தசாமியின் அப்பா ஏதோ வேலையாக அந்தப் பக்கம் வந்துகொண்டிருந்தார். அவரைப் பார்த்ததும் இட்டிலித் தட்டைத் தள்ளி வைத்துவிட்டு அவரை நோக்கிப் போனார் தாடிக்காரர்.

# 9

ஒருவனுக்குப் பாயசம் சாப்பிட வேண்டுமென்று வெகுநாளாக ஆசை. வீட்டில் அவன் மனைவியிடம் பாயசம் காய்ச்சுமாறு ஒருநாள் சொன்னான். அந்த அம்மாவுக்கு உண்மையாகவே பாயசம் காய்ச்சத் தெரியாது. 'தெரியாது' என்று வெளிப்படையாகச் சொல்லிவிடலாம் அல்லவா? அதை விட்டுவிட்டு, ''பாயசம்தானே? காய்ச்சி விடுகிறேன்'' என்று ரொம்ப ஜம்பமாக அந்த அம்மாள் சொல்லிவிட்டாள்.

கணவன் போனபிறகு பாயசம் காய்ச்சுவதற்காக அடுப்படியில் சென்றாள் அந்த அம்மாள். 'பாயசம் காய்ச்சுவது எப்படி? அடுப்பில் பாலை ஊற்றி... சே, சே; அடுப்பிலாவது, பாலை ஊற்றுவதாவது; அப்படி இல்லை. அடுப்பில் கிண்ணத்தை வைத்து நெய்யை ஊற்ற வேண்டும். பிறகு அதில் பாலை ஊற்ற வேண்டும். இவ்வளவுதானா? பாயசத்தில் முந்திரிப் பருப்பு இருக்கிறது, சேமியா இருக்கிறது, ஜவ்வரிசி இருக்

கிறது. இதையெல்லாம் எப்படிப் போடுவது? எதை எதை முன்னால் போட வேண்டும்? எவ்வளவு போட வேண்டும்? என்று ஒன்றுமே புரியவில்லை அந்த அம்மா ளுக்கு. 'பூ பாயசம்தானே, என்ன பிரமாதம், நாமே காய்ச்சி விடுவோம்' என்று நினைத்த அந்த அம்மாளின் எண்ணத்தில் ஒருபிடி உப்பு விழுந்தது. 'என்ன செய் வது?' என்று வெகுநேரம் யோசனை செய்தாள். கடைசி யில் பக்கத்து வீட்டுப் பாட்டியிடம் போய் பாயசம் செய்யும் முறைகளைத் தெரிந்து வந்து அதன்படி காய்ச்சிவிடலாம் என்ற கருத்துடன் பக்கத்து வீட்டுக் குப் போனாள்—பாட்டியைப் பார்த்து விஷயத்தைச் சொன்னாள்.

எல்லாவற்றையும் கேட்ட பாட்டி, "பாயசமா? எந்தப் பாயசம் செய்ய வேணும்? பால் பாயசமா? அவல் பாயசமா? சேமியா பாயசமா? தேங்காய் பாயசமா?" என்று அடுக்கிக்கொண்டே போனாள்.

"அட ஆண்டவா! பாயசத்தில் இத்தனை ரகங் கள் இருக்கின்றனவா? நான் சேமியா பாயசம் ஒன்று தான் இருக்கும் என்றல்லவா நினைத்திருந்தேன்" என்று நினைத்தபடி, "சேமியா பாயசம் செய்றதுக்கே சொல்லுங்க பாட்டி" என்றாள் அந்த அம்மாள்.

பாட்டி நீட்டி முழக்கிக் கொண்டே, "முதலில் சட்டி யில் கொஞ்சம் நெய்யை விட்டு..." என்று சொல்லிக் கொண்டிருக்கும்போதே, "ஓ, ஓ அதுக்கு மேலே எனக் குத் தெரியும்" என்று சொல்லியபடியே வீட்டுக்கு ஓடிப்போய்விட்டாள் அந்த அம்மாள்.

சட்டியில் நெய்யை விட்டபிறகு என்ன செய்ய வேண்டும்? என்னவோ தெரிந்தமாதிரி ஓடிவந்துவிட்

டாள். பிறகு ஒன்றுமே புரியவில்லை. மறுபடியும் பாட்டியிடம் ஓடினுள். "பாட்டி சட்டியில் நெய்யை விட்டு விட்டேன். அதற்குமேல் என்ன செய்வது?" என்ருள்.

"முந்திரிப்பருப்பை வறுத்து..." என்ருள், பாட்டி.

"இவ்வளவுதானு? எனக்குத் தெரியுமே!" என்று வீட்டிக்கு ஓடிப்போய் முந்திரிப்பருப்பை வறுத்தாள். 'அதற்குப் பிறகு என்ன செய்ய வேண்டும்? பாலை ஊற்றவேண்டுமா? நெய்யை ஊற்ற வேண்டுமா? என்ன செய்யவேண்டும்?' என்று ஒன்றும் புரியவில்லை. மீண்டும் பாட்டியிடம் ஓடினுள். பாட்டி பக்குவம் சொல்லிக்கொண் டிருக்கும்போதே பழையபடி அரை குறையாகக் கேட்டுக்கொண்டு வந்துவிட்டாள். அப்பொழுதும் பாயசம் வந்தபாடாக இல்லை. மீண்டும் பாட்டியிடம் ஓடினுள். "அடுத்து என்ன செய்ய வேண்டும்?" என்று கேட்டாள். பாட்டிக்கோ மகா எரிச்சல்! "ஒருபிடி உப்பை அள்ளிக் கொட்ட வேண்டும்! அவ்வளவுதான்" என்ருள்.

நல்ல வேளையாகப் பரமன் பாயசம் காய்ச்சுவதற்காகப் பாட்டியிடம் யோசனை கேட்டு வந்த அம்மாளைப் போல, "சமையல் செய்வதற்கு என்னென்ன செய்ய வேண்டும்?" என்று பக்கத்து அண்டை வீட்டில் இருப்பவர்களைத் தொந்தரவு செய்யவில்லை.

முன் தினம், சாதம் பாயசமாக மாறிப்போன பிறகு அண்ணுவுக்கு என்னமோ மகா எரிச்சல்! 'சே, சின்னப் பையன் சொன்னதைக் கேட்டுக்கொண்டு எல்லாவற்றுக்கும் தலையாட்டினேமே, சோருக்கிச் சாப்பிடுவது என்பது நம்மால் முடிகிற காரியமா?' என்று நினைத்தார்.

"பரமு பேசாமல் அந்தக் கூழைக் கொண்டுபோய் கழுநீர்ப் பானையில் ஊற்றிவிட்டுச் சமையலுக்கு ஒரு முழுக்குப் போடு" என்றார் நல்லக்கண்ணு.

"அவசரப்படாதீங்க அண்ணு. அடுப்பில் சாதத்தை வைத்துவிட்டு, வெந்ததும் இறக்கி வடிக்காதது நம் தப்பு. அதற்காக நமக்கு சமைக்கவே தெரியாது என்று முடிவு கட்டிவிடுவதா? கொஞ்ச நேரம் பேசாமலிருங்கள், நான் உங்களுக்குச் சாதம் வடித்துப் போடுகிறேன்" என்று சொல்லிவிட்டுக் கூழாகிப் போயிருந்த சாதத்தை எடுத்து ஒரு பிச்சைக்காரனுக்குக் கொடுத்துவிட்டு மீண்டும் அரிசியைக் கலேந்து உலேயில் போட்டான், பரமன்.

இம்முறை அடுப்பின் பக்கத்திலேயே உட்கார்ந்திருந்து வெந்ததும் இறக்கி வடித்தான். சாதத்தை வடிக்கும்போது கொஞ்சம் சூடான கஞ்சித் தண்ணீர் அவன் கையில் பட்டுவிட்டது. இருந்தாலும் பல்லேக் கடித்துக்கொண்டு எடுத்த காரியத்தை வெற்றியுடன் செய்துமுடித்தான் பரமன்.

நல்லக்கண்ணுவிற்கு ஒரே ஆச்சரியம்! 'இதெல்லாம் இவனுக்கு எப்படித் தெரிந்தது? இன்றைக்குச் சாதம் வடித்துவிட்டான். நாளேக்குக் குழம்பே வைத்துவிடுவான்!' என்று சற்று முன்னர் தம்பியின் பேரில் கோபமாக இருந்தவர், இப்பொழுது அவனே ஒரேயடியாகப் புகழ ஆரம்பித்துவிட்டார்.

இரண்டு இலேகளேப் போட்டுச் சுடச்சுட சாதத்தைப் பறிமாறினுன் பரமன். பிறகு சட்டைப்பையில் கையைவிட்டு இரண்டு பொட்டலங்களே எடுத்து வெளியில்

வைத்தான். அவை வாழைமட்டையால் கட்டப்பட்டு இருந்தன. அவற்றின் உள்ளே ஊறுகாய் இருந்தது.

'அட ஊறுகாய் கூட இந்த மாதிரி மட்டையில் வைத்துக் கட்டி விற்கிறார்களா?'' என்று ஆச்சரியப் பட்டார் நல்லகண்ணு.

''எல்லாம் இருக்குது. சாதம் ஒன்று மட்டும் நாம் சமைத்துக் கொண்டால், ரசம், சாம்பார் எல்லாம் வைப்பதற்கு ரொம்ப சுலபமாக அவற்றைப் பொடியாக அரைத்துக் கடைகளில் விற்கிறார்கள். வெந்நீரில் நமக்கு எது தேவையோ அந்தப் பொடியைப் போட்டால் ரசமோ, சாம்பாரோ தயார்!'' என்றான் பரமன்.

''அடேயப்பா, இவ்வளவு தூரம் விசாரித்துக் கொண்டு வந்துவிட்டாயா? நீ சாம்பாரும் செய்ய வேண்டாம், ரசமும் வைக்கவேண்டாம். இந்தத் தயிர் சாதத்திற்கும் ஊறுகாய்க்கும் எவ்வளவு ஜோராக இருக்கிறது, தெரியுமா?'' என்று சொன்ன நல்லக் கண்ணு பிறகு, ''அதோ அந்தப் பையில் ரெண்டு வடை இருக்கிறது, அதை எடுத்துவா'' என்றார்.

''மத்தியானம் நீங்க சாப்பிடாம அப்படியே மிச்சப்படுத்தி வைத்தீர்களா?'' என்று கேட்டபடியே பையிலிருந்து வடைப் பொட்டலத்தை எடுத்துப் பிரித்து அண்ணுவுக்கு ஒன்று வைத்துவிட்டுத் தானும் ஒன்று வைத்துக்கொண்டான் பரமன்.

மத்தியானம் பூராவும் சாப்பாடு இல்லாமல் இருந்துவிட்டு இரவு நெடுநேரத்திற்குப் பிறகு சாப்பிட்டதும் இருவருக்கும் களைப்பாக இருந்தது படுத்து உறங்கிவிட்டார்கள்.

அடுத்த நாள் காலை அண்ணு கண் விழிக்கும் போது பரமன் அடுப்பைப் பற்ற வைத்துக்கொண்டிருந்தான். அடுப்பு சரியாக எரியாததால் வீடெல்லாம் ஒரே புகை! கண்களைக் கசக்கிக்கொண்டே எழுந்தார் நல்லக்கண்ணு.

"பரமு இது என்ன, பொழுது விடிந்ததும் விடியாததுமாக, அடுப்படியில் உட்கார்ந்து விட்டாய்? உனக்கு என்ன, படித்து முன்னுக்கு வரவேண்டும் என்கிற எண்ணம் இல்லையா?" என்று கேட்டார்.

'சோறு ஆக்குகிறேன் என்று ஒரேயடியாகப் படிப்பைக் கோட்டை விட்டுவிட்டால் பிறகு கஷ்டப்படுவானே' என்று நினைத்துதான் அந்த மாதிரி சொன்னார் நல்லக்கண்ணு.

"படிப்பு வேலையெல்லாம் முடிந்து விட்டது. அதனல்தான் அடுப்படிக்கு வந்தேன்" என்று கூறிய பரமன் வீட்டுப்பாடங்கள் எழுதியிருந்த நோட்டுப் புத்தகங்களைக் கொண்டுவந்து அண்ணுவிடம் காட்டினன்.

நல்லக்கண்ணு ஒவ்வொரு நோட்டாகப் பிரித்துப் பார்த்துக் கொண்டே வந்தார். அவருக்கு ஒரே ஆச்சரியமாகப் போய்விட்டது. தமிழில் கட்டுரையும் பயிற்சியும் மொத்தமாக ஆறு பக்கங்களுக்குக் குறையாமல் எழுதியிருந்தான். அதற்குப் பிறகு ஆங்கிலம், விஞ்ஞானம், கணக்கு முதலிய எல்லாப் பாடங்களையும் புரட்டிப் பார்த்தார் நல்லக்கண்ணு. எல்லாப் பாடத்தையும் துளிக்கூடப் பாக்கி வைக்காமல் கச்சிதமாக எழுதி முடித்திருந்தான், பரமன்.

'இரவு நம்முடன்தான் இவன் படுத்தான். நேற்று பூராவும் இவன் ஒன்றும் எழுதவில்லை. இவ்வளவை

யும் எழுதி முடிக்கக் குறைந்தது மூன்று மணி நேரமா வது ஆகியிருக்குமே. எப்பொழுது எழுதினான்?" என்று நினைத்தபடியே நல்லக்கண்ணு, "பரமு இங்கே வா" என்றார்.

பரமன் அண்ணாவின் அருகில் வந்து உட்கார்ந் தான். அவனை அன்புடன் தடவிக் கொடுத்தார் நல்லக் கண்ணு. 'நிச்சயம் இவன் நடு இரவிலோ அல்லது விடியற்காலையிலோ எழுந்துதான் இவ்வளவையும் செய்திருப்பான்' என்று நினைத்த நல்லக்கண்ணு முன்தினம் மாணவர்கள் எழுதியிருந்த கட்டுரைப் பயிற்சி நோட்டுப் புத்தகங்களைத் தாம் அரை குறையாகத் திருத்தி வைத்திருந்ததை நினைத்துக் கொண்டார்.

'இன்றைக்கு வகுப்பிற்குப் போன உடனே திருத்திய நோட்டுப்புத்தகங்களை மாணவர்களுக்குத் தரவேண்டும். பரமுவை இவ்வளவு தூரம் கோபித்துக் கொண்ட நான் என் வேலையை ஒழுங்காகச் செய் தேனா?' என்று நினைக்கும்பொழுதே அவருக்கு வெட்க மாக இருந்தது.

"அண்ணா, நேரம் போகிறது தெரியாமல் நாம் இரண்டு பேரும் பேசிக்கொண்டிருந்தால் இன்றைக் கும் சாதம் பாயசமாகத்தான் ஆகிவிடும்" என்று சொல்லிக்கொண்டே எழுந்தான் பரமன்.

"இதோ பல் விளக்கிவிட்டு நானும் வந்துவிடுகி றேன். ஒரு நொடியில் சமைத்துவிடலாம்" என்று சொல்லிக்கொண்டே படுக்கையைவிட்டு எழுந்தார் நல்லக்கண்ணு.

அண்ணா பல் விளக்கிவிட்டு வருவதற்குள் ஒரு டம்ளரில் சூடாகக் காப்பி கொண்டுவந்து வைத்தான்

பரமன். நல்லக்கண்ணுவிற்கு ஒன்றுமே புரியவில்லை. 'தன் தம்பியிடம் அல்லாவுதீனின் அற்புத விளக்கு இருக்கிறதா' என்றெல்லாம் ஆச்சரியப்படலானார்.

"இதில் ஆச்சரியப்பட ஒன்றும் இல்லை அண்ணா. காலையில் எழுந்ததும் பல் விளக்கிக்கொண்டு பாலும் தயிரும் வாங்கி வந்துவிட்டேன். நேற்று அரிசியெல்லாம் வாங்கியபோதே காப்பித்தூள் வாங்கி வந்துவிட்டேன்" என்றான், பரமன்.

"அதுசரி, அடுப்புப் பற்ற வைத்ததும் முதலில் காப்பி போட்டு விட்டாய் என்று சொல்லு" என்றார், நல்லக்கண்ணு.

"ஆமாம், போட்டு நான் ஒரு டம்ளர் குடித்து விட்டு மீதியைத்தான் உங்களுக்கு வைத்தேன். இதற்காக என்னைக் கோபித்துக் கொள்ள மாட்டீர்களே!" என்றான், பரமன்.

"பைத்தியம், பைத்தியம்! இவ்வளவு புத்திசாலித் தம்பி எனக்குக் கிடைத்ததற்காக உன்னைப் பாராட்டு வேனா, அதை விட்டுவிட்டு உன்பேரில் என்னகோபம்?" என்றார் நல்லக்கண்ணு

அடுப்பில் உலைநீர் கொதித்துக் கொண்டிருந்தது. பரமன் அரிசியைக் களைந்து உலைப்பானையில் போட்டான்.

'காலையில் எழுந்திருந்து வீட்டுப்பாடங்களை யெல்லாம் எழுதி முடித்து விட்டு ஓய்வு ஒழிச்சல் இல்லாமல் வேலை செய்கிறானே, இப்படித் தினந் தோறும் செய்தால் இவன் உடம்பு என்னத்துக்கு ஆகும்?' என்று நல்லக்கண்ணு கவலைப்படலானார்.

"இதோ பார் பரமு. வீட்டுப்பாடங்களையெல்லாம் சாயந்திரமே எழுதிவிடு. தினந்தோறும் விடிகாலையிலிருந்து வேலை செய்தால் உன் உடம்புக்கு ஆகாது" என்றார் நல்லக்கண்ணு.

"அது சரி அண்ணா! அப்படியானால் சாயந்திரம் சமையல்?" என்றான் பரமன்.

"அதை நான் பார்த்துக் கொள்கிறேன். சாயந்திர வேளையில் நீ அடுப்புப் பக்கம் வரக்கூடாது. என்ன தெரியுமா?" என்றார் நல்லக்கண்ணு. பிறகு முன் தினம் அரைகுறையாகத் திருத்திய கட்டுரைப் பயிற்சி நோட்டுப் புத்தகங்களைத் திருத்தலானார். அவர் திருத்தி முடிப்பதற்குள் பரமன் சோற்றை வடித்து நிமிர்த்திவிட்டு இலையைப் போட்டு "சாப்பாடு தயார்" என்றான்.

அப்படியும் இப்படியுமாக மணி ஒன்பதாகி விட்டது. நல்லக்கண்ணு ஏதோ நினைத்துக் கொண்டவர் போல், "பரமு, இன்றைக்குப் பள்ளிக்கூடத்தில் ஆசிரியர்கள் கூட்டம் ஒன்று இருக்கிறது. நான் சீக்கிரம் போகவேண்டும். நீ நிதானமாகச் சாப்பிட்டு விட்டு வா" என்று சொல்லிக்கொண்டே கை கால்களைக் கழுவிக்கொண்டு இலையின் முன்னால் அமர்ந்தார்.

தினந்தினம் சாப்பிடுகிற கூட்டு, பொரியல், குழம்பு, ரசம், எதுவும் இல்லை. சாதம், வெறும் தயிர், ஊறுகாய் இவை மட்டுமேதான் இருந்தன. இருந்தாலும் நல்லக்கண்ணுவிற்குப் பலவித காய்கறிகளுடனும் குழம்பு ரசத்துடனும் சாப்பிடுவதைவிட அதிக ருசியாக இருந்தது.

சாப்பிட்டு முடிந்ததும் உடைகளை மாற்றிக் கொண்டு பள்ளிக்கூடத்திற்குச் சென்றுவிட்டார். அண்ணு சென்ற பிறகு இடத்தையெல்லாம் சுத்தம் செய்துவிட்டுத் தானும் ஓர் இலை போட்டுக்கொண்டு சாப்பிட உட்கார்ந்தான் பரமன். அப்பொழுதுதான் வாசுவும் அவன் வீட்டுக்குள் நுழைந்தான். பரமன் இலையில் அமர்ந்து சாப்பிட்டுக்கொண்டிருப்பதைக் கண்டு வாசுவுக்கு ஒரே ஆச்சரியமாக இருந்தது. அவன் என்ன நினைத்தான்? 'பாவம், பரமனும் அவன் அண்ணுவும் சாப்பாட்டுக்கு ரொம்பவும் கஷ்டப்படுவார்கள்' என்று நினைத்தான். அவன் மட்டுமா அப்படி நினைத்தான்? கந்தசாமியின் அப்பாகூடத்தான் 'சாப்பாடு போடு மிடத்தில் 'முடியாது' என்று சொன்ன பிறகு நல்லக் கண்ணுவும் பரமனும் ஓட்டல் சாப்பாட்டிற்கு நாயாக அலைவார்கள்' என்று நினைத்தார். ஆனல், நடந்தது என்ன?

"என்ன வாசு, அப்படிப் பார்க்கிறே? என்னடா இது, இவன் காலையிலேயே சாப்பிடுகிருனே என்று பார்க்கிருயா? சொந்தச் சமையல். இனிமேல் தினமும் இப்படித்தான்" என்ருன், பரமன்.

வாசு பரமனின் பக்கத்தில் உட்கார்ந்தான். அவன் இலையைப் பார்த்தான். அதில் காய்கறிகள் எதுவும் இல்லை. 'இந்த வெட்டிச் சாதத்தை இவன் எப்படி சாப்பிடுகிருன்?' என்று அவனுக்காகப் பரிதாபப்பட்டான். உடனே அம்மா அவனுக்கும் பரமனுக்கும் சேர்த்துச் சாப்பாடு கொடுத்திருந்தது நினைவுக்கு வந்தது. கையுடன் கொண்டுவந்திருந்த சாப்பாட்டுப் பாத்திரத்தைத் திறந்து அதிலிருந்து காய்கறிகளை எடுத்துப் பரமனுக்கு வைக்கப் போனுன்.

"ஐயையே, என்ன இது; இதையெல்லாம் வைத்து என் நாக்கைக் கெடுத்துவிடாதே! இனிமேல் தினந்தோறும் இதைப்போலவே சாப்பிடச் சொல்லும்" என்றான் பரமன்.

வாசு பகல் உணவுக்கு அவனுக்கும் பரமனுக்கும் சேர்த்துதான் அம்மா கொடுத்தனுப்பியதாகக் கூறினான். பரமன் வேண்டாமென்று எவ்வளவோ மறுத்தான்.

"பரமு, எங்க வீட்டுச் சாப்பாடு சாப்பிடக் கூடாதா? இவ்வளவுதானா உன் சிநேகிதம்?" என்று கண் கலங்கக் கூறினான் வாசு.

"பைத்தியமே, அதற்காகச் சொல்லவில்லை. வீணாக எதற்கு என்றுதான் சொன்னேன். சரி, சரி. வை சாப்பிடுகிறேன். ஆனால், ஒன்று; இனிமேல் தினமும் கொண்டுவந்தால் நான் கண்டிப்பாகச் சாப்பிட மாட்டேன்" என்று சொல்லிவிட்டு வாசு வீட்டுப் பதார்த்தங்களைச் சுவை பார்க்கலானான் பரமன்.

வாசு மெதுவாக முன்தினம் அவனுக்கும் அவன் அண்ணாவுக்கும் சாதம் கொண்டுவந்தபோது மாந்தோப்பிலிருந்து கந்தசாமி கல் எறிந்து சாப்பாட்டுப் பாத்திரத்தைத் தட்டிவிட்டதைக் கூறினான்.

"எங்களைக் கேட்காமல் சாப்பாடு எடுத்து வந்தாய் பார், அதற்குச் சரியான தண்டனைதான்" என்று சொன்ன பரமன், "என்ன இந்தக் கந்தசாமி வரவர ரொம்ப மோசமாகப் போகிறானே! அவன் அப்பாவும் அவன் பக்கம். இந்த நிலையில் அவன் எப்படித் தான் திருந்தப் போகிறானோ?"

அதற்குப் பிறகு அம்மாவும் அவனும கந்தசாமி யின் அப்பாவிடம் புகார் செய்வதற்காக அவர் கடைக்குச் சென்ற விவரத்தைக் கூறினுன்.

"உம்...போ, போ! என் பையன் அந்தமாதிரியெல்லாம் செய்யமாட்டான், என்று கந்தசாமியின் அப்பா உங்களை விரட்டிவிட்டார். அப்படித்தானே?" என்ருன் பரமன்.

"இல்லேடா, பூரா சொல்வதற்குள் அவசரப்படுகிருயே! நாங்கள் கந்தசாமியின் கடைக்குப்போனேம். அங்கே ஒரு தாடிக்காரன் உட்கார்ந்திருந்தான். அவனைப் பார்த்ததும் அம்மா அலறியடித்துக்கொண்டு வந்த காரியத்தையும் மறந்து வீட்டுக்குத் திரும்பி விட்டாள்" என்ருன் வாசு.

அவன் எதிர்பார்த்ததற்கு நேர்மாருக முடிவு இருந்ததால் சாப்பிடுவதைக்கூட நிறுத்திவிட்டு வாசு சொல்வதையே கவனமாகக் கேட்கலாஞன் பரமன்.

தாடிக்காரனைக் கண்டு அம்மா பயப்பட்டது. டிரங்குப் பெட்டியில் இருந்த பணத்தை எடுத்து அடுப்படியில் புதைத்து வைத்தது வரை கூறிய வாசு திடீரென்று ஏதோ சொல்லக்கூடாத ஒரு ரகசியத்தை வெளியிட்டு விட்டவன் போல் கைகளை உதறிக் கொண்டான்.

"சொல்லு, சொல்லு. என் தலைமேல் ஆணை. நான் யாரிடமும் இதைப்பற்றி மூச்சுகூட விடமாட்டேன். மேற்கொண்டு என்ன ஆயிற்று?" என்ருன் பரமன்.

அதற்குப் பிறகு காலையில் அந்தத் தாடிக்காரன் அம்மா இல்லாத பொழுது வீட்டுக்கு வந்தது, இட்டிலி சாப்பிட்டுக் கொண்டிருந்த அவன் கந்தசாமியின்

அப்பாவைப் பார்த்ததும் அவருடன் சென்றுவிட்டது வரை சொன்னான் வாசு.

"அந்தத் தாடிக்காரன் பெரிய போக்கிரியாயிருப்பானே என்று நான் நினைக்கிறேன். இல்லாவிட்டால் உன் அம்மா ஏன் அவனைப் பார்த்துப் பயப்பட வேண்டும்?" என்றான் பரமன்.

"அந்தத் தாடிக்காரன் என் அப்பாவுக்குச் சிநேகிதராம். நான் சின்னக் குழந்தையாயிருக்கும்போது அடிக்கடி அப்பாவுடன் எங்க வீட்டுக்கு வருவாராம்" என்றான் வாசு.

"அந்தத் தாடிக்காரன் சொன்னதுதானே. இதை எப்படி உண்மையென்று நம்ப முடியும்? உன் அப்பாவே வந்து இவன் என் சிநேகிதன்தான் என்று சொன்னால் நம்பலாம். இல்லாவிட்டால் உன் உம்மா அந்தத் தாடிக்காரன் அப்பாவின் சிநேகிதர்தான், என்று சொல்லவேண்டும். உன் அம்மா அப்படிச் சொன்னார்களா?" என்றான் பரமன்.

"எந்தச் சங்கதியை என்கிட்டே அம்மா சொன்னாங்க, இதைச் சொல்வதற்கு? எனக்கு என்னவோ அவர் சொன்னது உண்மையாயிருக்கும் என்று தோன்றுகிறது. அவரைக் கேட்டால் அப்பாவைப் பற்றிப் பூரா சங்கதியும் தெரியும்" என்றான் வாசு.

"சரி, அப்படியாவது கேட்டுப் பார்த்தாயோ?" என்று பரமன் கேட்க, "கேட்பதற்குள்தான் கந்தசாமியின் அப்பாவைப் பார்த்ததும் போய்விட்டாரே!" என்றான் வாசு.

"அதுசரி, இந்தத் தாடிக்காரருக்கும் கந்தசாமியின் அப்பாவுக்கும் என்ன தொடர்பு? எதற்காக அவன்

அவரைச் சுற்றிக் கொண்டிருக்கிருன்? இரண்டு பேரு மாகச் சேர்ந்து உங்களைக் கவிழ்க்க ஏதாவது சதி செய் கிருர்களோ?" என்ருன் பரமன்.

"சே, சே! அந்தத் தாடிக்காரரைப் பார்த்தால் அப்படியெல்லாம் தோன்றவில்லை. இருந்தாலும் அவர் களுக்கும் எங்களுக்கும் என்ன விரோதம்?" என்ருன் வாசு.

"இதோ பார் தம்பீ, இதில் பணவிஷயம் சம்பந்தப் படுகிறது. ஒருவேளை அதற்காகத்தான் இருவரும் சேர்ந்து கூட்டாகச் சதி செய்கிருர்களோ என்று கேட் டேன்" என்ருன் பரமன்.

5ா பார் பரமு, அம்மாவிடம் நிறையப் பணம் இருக்கிறதென்று உனக்கும் எனக்கும் தவிர வேறு யாருக்கும் தெரியாது. அப்படியிருக்க பணத்திற்காகத் தான் இருவரும் சதி செய்கிருர்கள் என்று எப்படிக் கூறமுடியும்?" என்ருன் வாசு.

"உனக்கு ஒன்றும் தெரியாது வாசு. திருடனுக்குப் 'பணம் இருக்கிறது. வந்து திருடிக்கொண்டு போ' என்று யாராவது தண்டோரா போடுகிருர்களா? இந்தக் காலத்தில் திருடர்கள் பணத்தின் வாசனையைக் கொண்டே இருக்கும் இடத்தைக் கண்டு பிடித்துவிடு வார்கள். அவ்வளவு தூரத்திற்குக் காலம் கெட்டுப் போய்விட்டது" என்று பெரிய மனிதர் பாணியில் பேசிவிட்டுக் கைகழுவ எழுந்து சென்ருன் பரமன்.

வாசுவுக்கு ஒன்றுமே புரியவில்லை. நமக்குக்கூட அம்மாவிடம் பணம் இருப்பது தெரியவில்லையே! அப்படியிருக்க அந்த ரகசியம் தாடிக்காரருக்கும்

கந்தசாமியின் அப்பாவுக்கும் எப்படித் தெரிந்தது? பரமன் சொல்லுகிற மாதிரியைப் பார்த்தால் எங்கே ஒளித்து வைத்தாலும் திருடிக்கொண்டு போய்விடுவார் கள் என்றல்லவா படுகிறது. இதற்கு என்ன செய்ய லாம்? கஷ்டப்பட்டு அம்மா சேர்த்து வைத்திருக்கும் பணத்தை எப்படித் திருடர்களிடமிருந்து காப்பாற்ற லாம்?' என்றெல்லாம் வாசு மூளையைப் போட்டுக் குழப்பிக்கொண்டான். கடைசியில் பரமனையே இதற் கும் ஒரு யோசனை கேட்டான்.

"வாசு அண்ணுதான் அடிக்கடி சொல்வார், பணத்தை எதற்காகப் பெட்டியில் வைத்துப் பூட்டிப் பயந்து பயந்து சாகிறீர்கள். 'பேசாமல் தபாலாபீசிலோ பாங்கிலோ போட்டால் பணம் பாதுகாப்பாக இருக் கிறது மட்டுமில்லை; வட்டியும் போட்டுத் தருவார்கள்' என்று பலதடவை சொல்லி இருக்கிருர். அதுதான் நல்ல யோசனை என்று எனக்குப் படுகிறது. பேசாமல் அம்மாவிடம் சொல்லிப் பணத்தைத் தபாலாபீஸில் போட்டு வைக்கச் சொல்லேன்" என்ருன், பரமன்.

"நான் சொன்னுல் அம்மாவுக்கு இல்லாத சந்தேக மெல்லாம் வரும். 'உனக்கு எப்படித் தெரியும்?' என்று என் பேரில் பாய ஆரம்பித்து விடுவாள்" என்ருன், வாசு.

"சரி. நானே ஒருதடவை உன் அம்மாவைப் பார்த்துப் பொதுவாகச் சொல்வதுபோல் சொல்கிறேன். அதிலிருந்து அவர்களுக்கும் நான் சொல்லும் யோசனை பிடித்துவிடும்" என்ருன், பரமன்.

பள்ளிக்கூட மணி அடித்தது!

"அடடா, பேச்சுப் பராக்கில் நேரம் போனதே தெரியவில்லையே! முதல் மணிகூட அடித்துவிட்டார்கள், சீக்கிரம் கிளம்பு" என்று துரிதப்படுத்திய பரமன் வாசுவை அழைத்துக்கொண்டு வேகமாகப் பள்ளிக்கூடத்தை நோக்கி ஓடினான்.

பரமன் பள்ளிக்கூடத்திற்குள் அடியெடுத்து வைக்கும்போது அவன் பின்னுலிருந்து யாரோ அவன் சட்டையைப் பிடித்து இழுப்பதை உணர்ந்து திடுக்கிட்டான். பரமு திரும்பிப் பார்த்தான். பின்னுல் கந்தசாமியின் நண்பன் சுண்டெலி சுக்கல் சுக்கலாகக் கிழிக்கப்பட்டிருந்த காகிதத் துண்டுகளை அவனிடம் கொடுத்து, "இதைக் கந்தசாமி உன்னிடம் கொடுக்கச் சொன்னுன்" என்றுன்.

பரமனுக்கு ஒன்றுமே புரியவில்லை. 'கந்தசாமிக்குப் பைத்தியமா, என்ன? எதற்காக நம்மிடம் கிழிந்த காகிதத் துண்டுகளைக் கொடுக்கச் சொன்னுன்?' என்று நினைத்தவாறே கோபத்துடன் அவற்றை வீசி எறிந்தான். காகிதத் துண்டுகள் மூலைக்கு ஒன்றுகப் பறந்து ஓடின.

"ஏண்டா, சுண்டெலி! அது அவனுக்கு யார் எழுதிய கடுதாசி என்று சொல்லவில்லையே! அதையும் சொல்லுடா அவனுக்கு. மூர்ச்சை போட்டு விழுவான" என்று கேலியாகக் கூறியபடியே அங்கே வந்தான், கந்தசாமி.

# 10

ஒரு பையன் கோடை விடுமுறையின்போது மாமா வீட்டிற்குப் போயிருந்தான். விடுமுறை முடிந்து வீட்டுக்கு வந்ததும், "ஏண்டா, தடிப்பயலே! இத்தனை நாள் மாமா வீட்டில் இருந்தாயே ஒரு கடிதமாவது போட்டாயா?" என்று அக்கா அவனைக் கோபித்துக் கொண்டாள். அதற்கு அந்தப் பையன், "நிறையச் செலவாகுமே என்றுதான் கடிதம் போடவில்லை" என்றான்.

அக்காவுக்கு ஒன்றும் புரியவில்லை! 'கார்டில் எழுதினால் ஆறு காசு ஆகும்; கவரில் எழுதினால் பதினைந்து காசு ஆகும். இதற்கா நிறையச் செல வாகும்?' என்று புரியாத அக்கா, "ஒரு கடுதாசு எழு தறதுக்கு அப்படி என்னடா நிறைய செலவு ஆகும்?" என்று கேட்டாள். அதற்கு அந்தப் பையன், "இதோ பார் அக்கா. என் கையெழுத்தோ உனக்குப் புரியாது! கடிதத்துடன் கூட நானும் புறப்பட்டு வந்தால்தான் உனக்கு அதைப் படித்துக் காட்டமுடியும்" என்றான்.

பரமனுக்கு எழுதியதாகக் கூறப்பட்ட கடிதத் துணுக்குகள் காற்றில் பறந்துவிட்டன. அதில் என்ன எழுதியிருந்தது என்று கந்தசாமி சொன்னால்தான் அவனுக்குத் தெரியும். இல்லாவிட்டால் கடிதம் எழுதியவனே நேரே புறப்பட்டு வந்து, "நான் எழுதிய சங்கதி இதுதான்" என்று சொன்னால்தான் ஓரளவு பரமனுக்கு விஷயம் புரியும்.

கடிதத்தில் எழுதியிருந்தது என்ன என்பதைவிட அதை எழுதியவர் யார் என்பதைத்தான் முக்கியமாகத் தெரிந்துகொள்ள விரும்பினான், பரமன். அதுவுமல்லாமல் கந்தசாமி சுண்டெலியிடம், 'எழுதினவன் பெயரைச் சொல்லுடா. ஆள் அப்படியே மூர்ச்சை போட்டு விழுவான்' என்று சொன்னது இன்னும் அதிகமாக அவன் ஆவலைக் கிளறிவிட்டது.

சுண்டெலி கந்தசாமியின் பக்கம் திரும்பி, "சொல்லட்டுமா? சொன்னால் அப்புறம் கோபித்துக் கொள்ளமாட்டாயே!" என்றான்.

"நீ சொல்லாவிட்டால்தான் கோபித்துக்கொள்வேன். சொல்லுடா என்றால் என்னமோ குறி கேட்டுக் கொண்டிருக்கிறாயே!" என்று அவன் பேரில் எரிந்து விழுந்தான், கந்தசாமி.

"பட்டணத்திலிருந்து மோகன்தான் உனக்கும் கடுதாசி எழுதியிருந்தான். அதை..." என்று சுண்டெலி சொல்வதற்குள் கந்தசாமி குறுக்கிட்டு, "அந்த மடப்பயலுக்கு உன் விலாசம் தெரியலையாம். எனக்கு ஒரு 'லெட்டர்' எழுதி அத்துடன் ஒரு கடிதத்தை வைத்து உன்னிடம் அதைக் கொடுத்துவிடுமாறு

எழுதியிருந்தான். கடுதாசி சேர்ந்ததோ, இல்லையோ'' என்று கேலியாகக் கேட்டான், கந்தசாமி.

இதற்குள் இரண்டாவது மணியும் அடிக்கப்பட்டு விட்டது. எல்லா மாணவர்களும் பிரார்த்தனைக் கூடத்தில் கூடினார்கள். பரமனின் வாய் பிரார்த்தனை கீதம் பாடிக்கொண்டிருந்ததே தவிர மனமெல்லாம் வேறு எங்கேயோ இருந்தது.

'பட்டணத்திலிருந்து மோகன் என்ற பையன் எனக்குக் கடுதாசி எழுதியிருக்கிறானே! யார் அவன்? அவன் எதற்கு எனக்குக் கடுதாசி எழுதுகிறான்? அப்படி எழுதுகிறவன் என் விலாசத்துக்குத்தானே எழுத வேண்டும்? என் விலாசம் தெரியவில்லை யென்றால், கந்தசாமியின் விலாசம் மட்டும் அவனுக்கு எப்படித் தெரிந்தது?' என்று பலவாறாகக் குழம்பிக் கொண்டிருந்தான் பரமன்.

'பெயரைக் கேட்டதும் மயக்கம் போட்டு விழுந்து விடுவாய்' என்று கந்தசாமி சொன்னதற்குப் பதில் 'பெயரைக் கேட்டதும் குழப்பமடைந்து தத்தளிப்பாய்' என்று சொல்லியிருக்க வேண்டும். தவறாகச் சொல்லி விட்டானோ, இல்லை வேண்டுமென்றேதான் அவ்வாறு சொன்னானோ, என்னவோ?

தினந்தோறும் பிரார்த்தனை கீதம் முடிந்ததும் தலைமையாசிரியர் மாணவர்களுக்குச் சில அறிவுரைகள் சொல்லுவார். அதற்குப் பிறகு விசேஷ செய்திகள் ஏதாவது இருந்தால் கடைசியில் சொல்லுவார்.

அன்றையத்தினம் அறிவுரைக்குப் பின் கடைசியாகத் தலைமையாசிரியர் என்ன சொல்லப் போகி

ளரோ என்று அனைவரும் ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர்.

உண்மையிலேயே அன்றையத்தினம் தலைமையாசிரியர் சொன்ன செய்தி மாணவர்களைக் குதூகலத்தில் ஆழ்த்தியது.

"மாணவர்களே, நம் பள்ளியில் படித்த பழைய மாணவர் ஒருவர் மாணவர்களின் திறமையைப்பெருக்கி அவர்களை ஊக்குவிப்பதற்காக ஒரு பரிசுத்திட்டம் ஏற்படுத்தி இருக்கிறார். அதாவது ஒவ்வொரு வகுப்பிலும் நிறைய மதிப்பெண்கள் வாங்குவதுடன் வகுப்பில் நல்ல மாணவனாகவும் இருக்கும் சிறந்த மாணவனுக்கு விலையுயர்ந்த பேனா ஒன்று பரிசளிக்கப் போகிறார். ஆகையினால் எல்லோரும் போட்டியிட்டு நிறைய மார்க்குகள் வாங்குவதுடன் நல்ல மாணவர்களாகவும் இருப்பீர்களென்று நினைக்கிறேன்" என்றார் தலைமையாசிரியர்.

'நிறைய மார்க்குகள் வாங்குவது சுலபம். ஆனால் நல்ல மாணவனாக இருப்பது எப்படி?' என்று கந்தசாமி கவலைப்பட்டான். சுண்டெலி, 'நிறைய மார்க்குகளுக்கு ஒரு பரிசு; நல்ல மாணவனுக்கு ஒரு பரிசு என்று இரண்டு பரிசுகள் தரக்கூடாதா? இதில் என்ன கஞ்சத்தனம்?' என்று நினைத்தான்.

இரண்டு என்ன, இருநூறு பரிசுகள் வைத்தாலும் ஒன்றுகூட—தவறிப்போய்க்கூடச் சுண்டெலிக்குக் கிடைக்காது. ஒரு வேளை பரிசே வாங்காத மக்கு மாணவனுக்கு ஒரு பரிசு வைத்தால் நிச்சயம் அவனுக்கு ஒரு பரிசு கிடைக்கும். இப்படிப்பட்டவன் 'இரண்டு பரிசுகள் வைத்திருக்கக்கூடாதா?' என்று நினைந்தான்.

அவன் நினைப்பதும் ஓரளவு உண்மைதான். 'நிறைய மார்க் வாங்குகிற பையன் போக்கிரியாகவும் நல்ல பையனாக இருப்பவன் மக்காகவும் இருந்துவிட்டால்...?' நியாயமான சந்தேகம்தானே!

தலைமையாசிரியர் சொன்ன இந்தச் செய்தி மாணவர்களிடையே ஒரு புதுத் தெம்பை ஏற்படுத்தியது. மக்கு மாணவன்கூடத் தனக்குப் பரிசு கிடைக்க வேண்டும் என்று நல்லபடியாகப் படித்து நல்ல மாணவன் என்று பெயர் எடுக்க வேண்டும் என்று தீர்மானித்துக்கொண்டான்.

சுண்டெலியும் எப்படியாவது அந்த விலையுயர்ந்த பேனாவைப் பரிசாகப் பெற்றுவிட வேண்டும் என்று தீர்மானம் செய்துகொண்டான்.

'நிறைய மார்க்குகள் வாங்குவதற்குத் தகுந்த மாதிரிக் கஷ்டப்பட்டுப் படித்துவிடுவோம். ஆனால், நல்ல மாணவனாக இருப்பதற்கு என்ன வழி?' என்று யோசித்தான்.

உண்மையில் அவன் கெட்ட மாணவன் அல்ல. இந்தக் கவண்கல் கந்தசாமியின் பின்னால் எந்நேரமும் வால் மாதிரி சுற்றிக் கொண்டிருப்பான். அவ்வளவு தான! இதுவரை ஒரு கல்லை எடுத்து நாயின்மேல் போட்ட பாவத்தைக்கூடச் செய்து அறியாதவன்.

'இந்தக் கந்தசாமிதான் போக்கிரிப்பையன் என்று ஊரெல்லாம் பெயர் வாங்கியிருக்கிறானே, அவனோடு சேர்ந்தால் நம்மையும்தானே அப்படிச் சொல்வார்கள்? இதனால் ஒருவேளை நமக்குப் பரிசு கிடைக்காமல் போய் விடுமோ? என்று பயந்தவனாக அன்றையத்தினத்திலிருந்து கந்தசாமியின் சிநேகத்திற்கு ஒரு முழுக்குட்

போட்டு விடுவதென்று தீர்மானித்துக் கொண்டான், சுண்டெலி.

பரிசுத் திட்டத்தைப் பற்றிக் கவலைப் படாதவர்கள் இரண்டுபேர். ஒருவன் கந்தசாமி. இன்னொருவன் பரமன். ‘நிச்சயம் கிடைக்காது’ என்பவனும், ‘நிச்சயம் நமக்குத்தான் பரிசு’ என்று நினைப்பவனும் எதற்காகப் பரிசுத்திட்டத்தைப் பற்றிக் கவலைப்படப்போகிறார்கள்.

பரமனின் கவலையெல்லாம் வேறு, ‘பட்டணத்தில் உள்ள மோகன் யார்? அவன் நமக்கு எதற்காகக் கடிதம் எழுதினான்?’ என்பதே அவனுடைய கவலை.

மாலை பள்ளிக்கூடம் விட்டதும் வாசுவும் பரமனும் ஒன்றாகச் சென்றார்கள். அவர்களுக்கு முன்னால் கந்தசாமி சென்று கொண்டிருந்தான். ‘அந்த மோகன் என்பவன் யார்?’ எனபதை அவனிடமே கேட்டுத் தெரிந்து கொள்ள நினைத்தான் பரமன். வாசுவைக் கொஞ்ச நேரம் பொறுத்திருக்கும்படி கூறிவிட்டுக் கந்தசாமியிடம் சென்றான்.

“கந்தசாமி, ஒரே ஒரு கேள்விக்கு மட்டும் பதில் சொல்லிவிடு. அந்த மோகன் என்பவன் யார்?” என்று கேட்டான், பரமன்.

பரமனின் கேள்வியைக் கேட்ட கந்தசாமி ஆச்சரியத்தினால் வாயை அகல விரித்தான்.

“நிஜமாகவே உனக்கு மோகனைத் தெரியாதா?” என்று தாழ்ந்த குரலில் கேட்டான், கந்தசாமி.

“தெரிந்தால் உன்னிடம் ஏன் கேட்கிறேன். உண்மையாகவே எனக்கு மோகனைத் தெரியாது” என்றான், பரமன்.

"பட்டணத்திலே எங்க தங்கவேலு அத்தான் இல்லே- அவர்தான் உன் அண்ணாவின் சிநேகிதர். அவருடைய தம்பிதான் மோகன். ஒருவேளை முன்னாலே உன்னை அவனுக்குத் தெரிந்திருக்குமோ என்று நினைத்தேன்" என்றான், கந்தசாமி.

"அது சரி, கந்தசாமி! நான் சொல்லுகிறேனென்று கோபித்துக் கொள்ளாதே. வேறு ஒருவருக்கு வந்த கடிதத்தை அவர்களிடம் அப்படியே கொடுக்காமல் கிழித்துக் கொடுப்பது உனக்கே நியாயமாக இருக்கிறதா?" என்று கேட்டான், பரமன்.

"மகா நியாயத்தைக் கண்டு விட்டே? அவன் எதற்கு உனக்கு எழுதிய கடிதத்தை என் கடிதத்துடன் அனுப்பினான்?" என்று கேட்டான் கந்தசாமி.

"என் வீட்டு விலாசம் அவனுக்குச் சரியாகத் தெரிந்திருக்காது. அதற்காக உனக்கு எழுதிய கடிதத்துடன் என் கடிதத்தையும் வைத்து அனுப்பியிருக்கிறான்" என்றான் பரமன்.

"நான் ஒன்றும் அவன் வேலைக்காரன் இல்லை" என்று கடுமையாகக் கூறினான் கந்தசாமி.

"முழுக் கடிதத்தை என்னிடம் கொடுத்தால் வேலைக்காரனாகி விடுவாய். ஆனால், கிழிந்த துண்டுகளைக் கொடுத்தால் வேலைக்காரனாக மாட்டாய். அப்படித்தானே!" என்றான் பரமன்.

"நானா உன்னிடம் கொடுத்தேன்? சுண்டெலி தானே கொடுத்தான்?" என்றான், கந்தசாமி.

உடனே சுண்டெலி, "ஏண்டா, நான் மட்டும் வேலைக்காரனா?" என்று கந்தசாமியிடம் கோபமாகக் கேட்டான்.

"என் பேரில் உனக்கு என்னதான் கோபம் இருந்தாலும் நீ எனக்கு வந்த கடிதத்தை இப்படிக் கிழித்திருக்கக்கூடாது" என்ருன் பரமன்.

"நான் அப்படித்தான் கிழிப்பேன். ஒருதடவை அல்ல, நூறு தடவை. நூறு தடவை என்ன, நூருயிரம் தடவை கிழிப்பேன். நீ யார் என்னைக் கேட்க? உனக்கு வந்த கடிதத்தை நான் கிழித்தால் நான் கெட்ட பையன். நீயே நல்ல பையனுக இரு. நீ வாத்தியார் தம்பி. உனக்கு நிறைய மார்க்கும் கிடைக்கும்; பரிசும் கிடைக்கும்" என்று குத்தலாகச் சொன்ருன் கந்தசாமி.

பேச்சின் இடையில் தன் அண்ணுவையும் சம்பந்தப்படுத்தியது பரமனுக்குப் பிடிக்கவில்லை. 'தன் அண்ணு வாத்தியார்ாக இருப்பதால் கண்ணை மூடிக்கொண்டு தனக்கு நிறைய மார்க்குகள் போட்டுவிடுவாரா? இது வரையில் பள்ளிக்கூடம் தவிர வீட்டில் பாடத்தில் ஒரு சிறு விளக்கம்கூடப் பரமனுக்குச் சொல்லிக் கொடுத்த தில்லை. அவனே படித்து நிறைய மார்க்குகள் வாங்கி வந்தான். பொருமைக்காரக் கந்தசாமி அவன் திறமையினுல் மார்க் வாங்கவில்லை, அண்ணுவின் தயவால் தான் நிறைய மார்க்குகள் வாங்குகிருன் என்பதைச் சொல்லாமல் சொன்னுல் அவன் மனம் என்ன பாடு படும்.

ஆத்திரத்தினுல் அவன் உதடுகள் துடித்தன. கைகள் படபடத்தன. ஆயினும் அடக்கிக் கொண்டான் பரமன்.

வெகுநேரமாகப் பரமன் வராததால் வாசு அவனிடம் வந்தான். அவனைப் பார்த்ததும் கந்தசாமி, "வாரும்

திருவாளர் திருடனூரின் திருமகனாரே! நண்பர்க்குச் சிபாரிசோ?'' என்று குத்தலாக வரவேற்றான்.

வாசுவுக்குப் பேச நா எழவில்லை. அம்மா அன்றைக்குச் சொன்னது என்ன? 'அப்பனைப்போலத்தானே உனக்கும் திருட்டுப்புத்தி இருக்கும்' என்று சொனனாள். இன்றைக்கு அதையேதான் இந்தக் கந்தசாமி சொல்கிறான்.

"டேய், கந்தசாமி, இனிமேல் அனாவசியமாகப் பேசினால் பொறுக்கமாட்டேன்'' என்று கோபத்துடன் கூறினான், பரமன்.

''ஓஹோ, அவருக்கு நீங்கள் சிபாரிசோ? போங்கடா வேலையற்றவன்களா? டேய் வாசு, உன்னைப்பற்றியும் உன் அப்பாவைப்பற்றியும் எனக்கு நிறையத் தெரியும். எங்கள் அப்பாவுக்குத் தெரிந்த தாடிக்காரர் உங்களைப் பற்றி வண்டி வண்டியாகச் சொல்லியிருக்கிறார்'' என்றான் கந்தசாமி.

''கொண்டுபோய் குப்பை மேட்டில் கொட்டு. தாடிக்காரரைப்பற்றியும், உங்கள் அப்பாவைப் பற்றியும் எங்களுக்கும் லாரி லாரியாகத் தெரியும். போ, போ; ஒரு நாளைக்கு அந்த ரகசியத்தையும் கண்டுபிடிக்காமல் விடுகிறோமா?'' என்று கூறியபடி வாசுவின் கையைப் பிடித்து இழுத்துக்கொண்டு போய்விட்டான், பரமன்.

''பரமு, அவன் பேரில் ஏன் கோபித்துக்கொள்கிறே? அவன் சொன்னது உண்மையாகக்கூட இருக்கலாம். ஏன் என்றால் ஒரு தடவை அம்மாவே வாய்தவறி அப்பாவைத் திருடர் என்று கூறியதை என் காதால் கேட்டேன்'' என்றான், வாசு.

"அதற்காக வாயில்லாப்பூச்சியாகிய உன்னைக் கிண்டல் செய்வதா? உன் நிலையில் நான் இருந்தால் சும்மா இருக்கமாட்டேன்" என்ருன், பரமன்.

"என்ன செய்வாய்?" என்ருன் வாசு.

"என்ன செய்வேனு? அவன் ஆயுசு இருக்கிற வரைக்கும் மறக்கமுடியாதபடி பாடம் கற்றுக் கொடுப் பேன். சரி, சரி. வா போவோம்" என்ருன் பரமன்.

வாசுவுடன் அவன் வீட்டுக்குச் சென்று, முடிந் தால் அவன் தாயாரிடம் வீட்டில் பணத்தை வைத்திருப் பது எப்பொழுதும் ஆபத்தைத் தரும் என்பதைப் பேச்சுவாக்கில் சொல்லி அவள் மனத்தை மாற்று வோம் என்ற எண்ணத்துடன்தான் பள்ளிக்கூடம் விட்டதும் அவனுடன் சென்ருன்.

மாலைவேளை சாப்பாட்டுச் சங்கதி பூராவும் அண்ணுவின பொறுப்பு. மாலையில் அவனை வீட்டுப் பாடங்கள் மட்டும் தவருமல் எழுதச்சொன்னுர். தாமத மாக வீடு செல்வதற்கு இன்றைக்கு ஒருநாள் மட்டும் அண்ணுவிடம் மன்னிப்புக் கேட்டுக்கொள்வோம் என்ற எண்ணத்தில் தைரியமாக வாசுவுடன் அவன் வீட்டுக் குச் சென்ருன் பரமன்.

வீட்டை நெருங்கும்போதே வீட்டுக் கதவு திறந் திருப்பதை இருவரும் கண்டார்கள்.

வாசுவின் அம்மா இன்றைக்குச் சீக்கிரமாகவே பலகார விற்பனையை முடித்துவிட்டு வந்துவிட்டார்கள் போலிருக்கிறது. பல விஷயங்களைப் பேசிக் கடைசி யில் பணத்தைப் பற்றிப் பேசுவோம். பணத்தைப் புதைத்து வைத்துத் திருடர்களிடம் கோட்டைவிட்ட வர்களின் கதையைச் சொல்வோம். இதையெல்லாம்

கேட்டதும் நிச்சயம் வாசுவின் அம்மாவின் மனம் மாருதா ?'' என்ற எண்ணத்துடன் வீட்டுக்குள் நுழைந்தான், பரமன்.

வாசுவும் அவனும் வீட்டுக்குள் நுழைந்ததும் இருவருக்கும் தூக்கிவாரிப்போட்டது. கலவரத்திஞல் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டிருந்தனர்.

அம்மாவின் எதிரில் டிரங்குப் பெட்டி திறந்து கிடந்தது. பெட்டியிலிருந்த துணிமணிகள் எல்லாம் மூலைக்கு ஒன்ருகச் சிதறி இருந்தன. அம்மா கலவரத்துடன் அடுப்பை நகர்த்தி மணலைத் தள்ளிக்கொண்டு இருந்தாள்.



''கலவரத்தில் வீட்டுக் கதவைக்கூடத் தாழ்ப்பாள் போட மறந்து விட்டீர்களே!'' என்று கூறியவாறு பரமன் சென்று வெளிக் கதவைத் தாழ்ப்பாள் போட்டான்.

பரமன் இவ்வாறு கேட்டது வாசுவின் அம்மா வைத் திடுக்கிட வைத்தது. இருந்தாலும், 'அவன் சொல் வதும் நியாயம்தானே' என்றும் பட்டது. ஒன்றும் பேசாமல் அப்படியே உட்கார்ந்து விட்டாள். அவ ளுடைய முகம் பேய் அறைந்தது மாதிரி இருந்தது.

பரமன் டிரங்குப் பெட்டியின் அருகில் உடைந்து போயிருந்த பூட்டைப் பார்த்துவிட்டு, ''பூட்டை உடைத்தீர்களா?'' என்று கேட்டான்.

''இல்லை'' என்பதற்கு அறிகுறியாகத் தலையை ஆட்டினாள் வாசுவின் அம்மா.

உடனே, பரமன் வாசுவின் பக்கம் திரும்பி, ''நான் சந்தேகப்பட்ட மாதிரியாகவே நடந்துவிட்டது. அம்மா இல்லாத வேளையில் யாரோ வீட்டில் புகுந்து பூட்டை உடைத்துப் பெட்டியைக் குடைந்திருக்கிறார்கள்'' என்றான், பரமன்.

இத்தனை நேரம் பேசாமலிருந்த அம்மா, ''இப்படி நடக்கும் என்று நினைத்தாயா? உனக்கு எப்படித் தெரியும்?'' என்று அவசர அவசரமாகக் கேட்டாள்.

''இதுமட்டுமில்லை, இனிமேல் இப்படியும் நடக் கலாம் என்றும் சொல்வோம். உதாரணமாக நீங்கள் பெட்டியில் எதை மறைத்து வைத்தீர்களோ—திருடன் எதற்காக உங்கள் டிரங்குப் பெட்டியைக் குடைந் தானோ— அதை எப்படியாவது முயற்சி செய்து

இன்னொரு நாளைக்குக் கிளப்பிக் கொண்டு போய் விடுவான்'' என்றான், பரமன்.

''என்ன சொல்கிறே, நீ? எனக்குப் புரிய வில்லையே'' என்றாள் வாசுவின் அம்மா.

''சொன்னால் எங்கள் பேரில் கோபித்துக் கொள்ள மாட்டீர்களே!'' என்றான், பரமன்.

''மாட்டேன்'' என்பதற்கு அறிகுறியாகத் தலையை ஆட்டினாள் அம்மா.

''முதலில் அடுப்படியில் புதைத்து வைத்திருக்கும் பணத்தை எடுத்துக் கொண்டு போய்த் தபாலாபீசில் கட்டு விடுங்கள். வீட்டில் இருந்தால் ஆபத்து ஏற்படும் என்று என் மனசுக்குப் படுகிறது'' என்றான், பரமன்.

'அடுப்படியில் பணத்தைப் புதைத்து வைத்தது வாசுவுக்குக் கூடத் தெரியாதே! இவனுக்கு எப்படித் தெரிந்தது? ஒரு வேளை வாசு புதைத்து வைக்கும் போது பார்த்திருப்பானோ? அப்படியிருந்தாலும் இதை இப்படி எல்லோரிடமும் சொல்லலாமா?' என்று வாசுவைக் கோபத்துடன் பார்த்தாள், அம்மா.

''அவனைக் கோபித்துக் கொள்ளாதீர்கள் நான் யாரிடமும் சொல்ல மாட்டேன். அவன் என்னிடம் சொன்னதுகூட ஒரு விதத்தில் நல்லதுதான். நீங்கள் முதலில் அடுப்படியில் தோண்டிப் பார்த்து உங்கள் சந்தேகத்தைப் போக்கிக் கொள்ளுங்கள். அடுத்தபடியாக அதை இன்றையத் தினம் இரவு பூராவும் எப்படியாவது கஷ்டப்பட்டுக் காப்பாற்றிவிட்டு நாளைக் காலையில் முதல் வேலையாகத் தபாலாபீசுக்குச் சென்று உங்கள் பெயரில் கட்டிவிடுங்கள்'' என்றான், பரமன்.

யோசித்துப் பார்த்ததில் பரமன் சொல்லுவதும் ஒரு விதத்தில் நியாயம் என்றே அம்மாவின் மனசுக்குப் பட்டது. உடனே மணலைத் தள்ளி செங்கல்களை ஒவ்வொன்ருக எடுத்து வெளியே வைத்தாள். கடைசிக் கல்லை எடுத்துவிட்டுப் பள்ளத்தில் கையை விட்டாள்.

அப்பொழுது—

வெளிக் கதவை யாரோ பலமாகத் தட்டும் சப்தம் கேட்டது.

# 11

ஒரு காய்கறித் தோட்டம். அதில் நிறையக் காய்கறிச் செடிகள் பச்சைப் பசேலென்று வளர்ந்திருந்தன. ஒவ்வொரு செடியிலும் பூவும் பிஞ்சுமாக நிறைய இருந்தன. ஒருநாள் அவ்வழியே சென்ற ஒரு மாடு அந்தத் தோட்டத்தைப் பார்த்துவிட்டது. பச்சைப் பசேலென்று வளர்ந்திருக்கும் செடிகளைப் பார்த்ததும் அதன் நாக்கில் தண்ணீர் ஊறிற்று. உடனே தோட்டத்திற்குள் புகுந்து செடிகளை மேய ஆரம்பித்தது. இதைப் பார்த்துவிட்ட தோட்டக்காரன் உடனே ஓடிவந்து அதை அடித்து விரட்டிவிட்டான்.

அதற்குப் பிறகு தோட்டக்காரன் மாடுகளின் தொல்லையைக் காப்பதற்காகத் தோட்டத்தைச் சுற்றி ஒரு வேலி எழுப்பினான். இப்பொழுது மாட்டினால் சுலபமாகத் தோட்டத்திற்குள் போக முடியவில்லை. தோட்டக்காரன் இல்லாத சமயத்தில் வேலியைத் தாண்டி உள்ளே சென்று செடிகளை மேய்ந்து விடுவது என்று அந்த மாடு தீர்மானித்துக்கொண்டது.

அதன்படி ஒருநாள் தோட்டக்காரன் இல்லாத பொழுது மாடு வேலியைத் தாண்டித் தோட்டத்திற்குள் புகுந்தது. ஆனால், பாவம்; அங்கே உள்ளே தோட்டக் காரன் செடிகளுக்குத் தண்ணீர் பாய்ச்சிக்கொண்டிருந் தான்.

திருட்டுத்தனமாக வேலியைத் தாண்டி உள்ளே நுழைந்த மாட்டைக் கண்டதும் பக்கத்திலிருந்த தடிக் கம்பை எடுத்துக்கொண்டு ஓடிவந்தான்.

"என்ன ஒரு தடவை பூசை வாங்கினது போதாதா? திரும்பவும் அடி வாங்குவதற்காக வந்தாயா?" என்று மாட்டைப் பார்த்துக் கேட்டான் தோட்டக்காரன்.

உடனே அந்த மாடு, "நான் செடிகளை மேய்வதற் காகவா வந்தேன்? என்றால் உள்ளே வரமுடியாது என்றுதானே வேலியெழுப்பினாய்? வேலியைத் தாண்டி யும் என்றால் உள்ளே வரமுடியும் என்பதை உனக்குக் காட்டுவதற்காகத்தான் உள்ளே வந்தேன்" என்று திமிராகச் சொல்லிற்று அந்தத் திருட்டு மாடு.

* * *

வாசுவின் வீட்டில் டிரங்குப்பெட்டியை உடைத்துச் சோதனை போட்டது யாராக இருக்கும் என்பது மூவருக் கும் நன்றாகத் தெரிந்திருந்தது. வாசு சொன்ன தகவல் களிலிருந்து தாடிக்காரன்தான் அவ்வாறு செய்திருப் பான் என்று பரமன் நினைத்தான். வாசு முதலில் தாடிக்காரன் பேரில் சந்தேகப்படாவிட்டாலும் கூட 'பரமன் சொன்னது உண்மையாகத்தான் இருக்கும்' என்று நினைத்தான். அம்மாவுக்குப் பெட்டியை உடைத்தது யார் என்று நன்றாகத் தெரிந்திருந்தது. ஒருவேளை இப்படி ஏதாவது நடக்கலாம் என்று எதிர்

பார்த்துதான் முன்தினம் பணத்தை அடுப்படியில் புதைத்து வைத்தாளோ என்னவோ?

அம்மா புதைத்து வைத்திருக்கும் பணத்தை எடுக்கும்போது வெளிக்கதவை யாரோ பலமாகத் தட்டும் சப்தம் கேட்டது. பள்ளத்தினுள் அவள் வைத்திருந்த பெருங்காய டப்பியைப் பார்த்தாள். இலேசாக அதைத் திறந்து பார்த்தாள். உள்ளே நோட்டுக்கள் இருந்தன. எண்ணிப் பார்ப்பதற்குக் கூடநேரமில்லை. 'பரபர' வென்று செங்கல்களைப் போட்டுப் பள்ளத்தை மூடிவிட்டு மணலைத் தள்ளி அடுப்பை எடுத்து அதன் மேல் வைத்தாள். பரமனும், வாசுவும் அம்மாவுக்கு உதவி செய்தனர். வெளிக் கதவு மீண்டும் பலமாகத் தட்டப்பட்டது. எல்லா



வற்றையும் ஒழுங்குபடுத்தியான பிறகு வாசு போய்க் கதவைத் திறந்தான்.

எதிரே தாடிக்காரன் சிரித்தபடியே நின்றுகொண் டிருந்தான். அவனைக் கண்டதும் வாசுவுக்குப் பற்றிக் கொண்டு வந்தது. அவனைக் கண்டதும் அவனை எரித்துவிடுவதைப்போல் பார்த்தான். வாசற்படியின் குறுக்கே நின்றுகொண்டு வழியை மறித்துக்கொண்டு "எங்கே வந்தீங்க?" என்று கேட்டான்.

இதற்குள் அம்மாவும் பரமுவும் அங்கே வந்தார் கள். வாசு கேட்ட கேள்விக்குச் சிரித்தபடியே தாடிக் காரன், "எங்கே வந்தேன் என்று கேட்கிறாயா? இல்லை, எதற்காக வந்தேன்னு கேட்கிறாயா?" என்றான்.

"இரண்டையும்தான் கேட்கிறேன்" என்றான், வாசு.

"அப்படிக் கேள். எங்கே வந்தேன் என்றுதானே கேட்கிறாய்? கேள், பதில் சொல்லுகிறேன். என் சிநேகிதனின் வீட்டுக்கு வந்தேன். எதற்காக வந்தேன் என்று கட்டாயம் சொல்லவேண்டுமா? ஏம்மா துளசி, உன் பையன் கேட்கிறான், சொல்லட்டுமா?" என்று தாடியை உருவிவிட்டபடி அம்மாவைப் பார்த்துச் சொன்னான் தாடிக்காரன்.

"வேண்டாம், அண்ணா! உங்கள் காலில் விழுந்து கெஞ்சிக் கேட்டுக்கொள்கிறேன். அந்த ரகசியத்தை இவனுக்குச் சொல்லாதீர்கள்" என்றாள் வாசுவின் அம்மா.

"சரி, சொல்லவில்லை. உன் புருஷனைக் காட்டிக் கொடுக்கமாட்டேன். இப்பொழுது பலகாரம் விற்று

எவ்வளவு பணம் சேர்த்து வைத்திருக்கிருய்?'' என்று அதிகாரத்துடன் கேட்டான், தாடிக்காரன்.

''பைசாக்கூடக் கிடையாது, அண்ணு! வரவுக்கும் செலவுக்கும் சரியாகிவிடுகிறது'' என்று கூசாமல் பொய் சொன்ஞள் அம்மா.

''பொய் சொல்லுகிருய். உன்னிடமா பணம் இருக்காது? முன்னே கடைசியிலே தங்கபுரத்திலே உன்கிட்டே பணம் வாங்கினதுதான். அப்புறம் உன்னை எங்கெங்கேயோ தேடிப் பார்த்தேன். ஆளே கண்ணுக்குத் தென்படவில்லை'' என்ருன் தாடிக் காரன்.

அவன் பேச்சிலிருந்து வாசுவின் அப்பாவைப் பற்றிய ரகசியம் ஏதோ அவனிடம் சிக்கியிருக்கிறது. அதை வைத்துக்கொண்டு அவன் அம்மாவிடமிருந்து பணம் பறித்துக்கொண்டிருக்கிருன். 'அவனுக்குப் பயந்துதான் அம்மா அடிக்கடி ஊர் மாற்றிக்கொண் டிருக்கிருளோ?' என்று நினைத்தான், வாசு.

''என்ன சொல்கிறே? சீக்கிரம் சொல்லு. இல்லா விட்டால் நேரே போலீஸ் ஸ்டேஷனுக்குப் போய் எல்லா சங்கதியையும் சொல்லிவிடுவேன். அப்புறம் உன் புருஷன் ஜெயிலுக்குப் போகவேண்டும். அது மட்டுமா? தூக்குமேடைக்கே போகவேண்டும்'' என்ருன் தாடிக் காரன்.

''என்னய்யா சும்மா மிரட்டுகிறே? சரி—போய்ச் சொல்லு. இத்தனை வருஷமாக அவர் எங்கேயிருக் கிருர் என்று தெரியாதபொழுது போலீஸ்காரர்களா வது அவரைத் தேடிக் கண்டுபிடிக்கட்டும்'' என்ருன், பரமன்.

''ஏம்மா துளசி, யார் இந்தப் பொடியன்? ரொம்பத் திமிராகப் பேசுகிருனே? போலீஸில் சொன்ஞல் ஆளைக் கண்டுபிடிக்க மாட்டார்கள் என்று நினைத்தாயா? இதோ பார் இந்தப் படத்தை—இதில் இருக்கிற ஆளின் உருவத்தைப் பல படங்கள் எடுத்து எல்லா இடங்களுக்கும் அனுப்பி எங்கேயிருந்தாலும் வலை போட்டு இழுத்து வந்துவிடுவார்கள். அப்புறம் என்ன? ஜெயில், தூக்குமேடை'' என்ருன் தாடிக்காரன்.

''ஐயேயோ, அப்படியெல்லாம் செய்து என மானத்தை வாங்கிவிடாதீர்கள். உங்களுக்குப் புண்ய மாயிருக்கும்'' என்று அவனைக் கையெடுத்துக் கும்பிட்டாள், வாசுவின் அம்மா.

''சரி, அப்பொழுது பணத்தை எடு'' என்று கம்பீரமாகச் சொன்ஞன் தாடிக்காரன்.

''முடியாது. போ, போய் போலீஸ் ஸ்டேஷனில் சொல்லு. நான்கூட வந்து சில சங்கதிகளை அங்கே சொல்கிறேன். இரண்டு மூன்று வருஷங்களுக்குமுன் ஒரு சிறுவன் பள்ளிக்கூடப் புத்தகங்கள் வாங்க ஐந்து ரூபாய் பணத்துடன் சென்று கொண்டிருக்கும்போது, அவனை ஒரு சந்தில்மடக்கி மிரட்டி அவனிடமிருந்து ஒருவன் பணம் பறிக்கப் பார்த்தான். அப்பொழுது அந்த வழியாக வந்த வேருெரு சிறுவன் கூச்சல் போட்டு ஜனங்களைக் கூட்டிவிட்டான். அந்தத் திருடனும் ஓடிவிட்டான்...'' என்று பரமன் சொல்லிக் கொண்டிருக்கும்போதே தாடிக்காரனின் முகம் மாறுதலடைந்தது. இருந்தாலும் பயத்தை வெளியே காட்டாதவஞக, ''என்ன தம்பீ, கதை அளக்கிருயா?'' என்ருன்.

"என்னதான் அடையாளம் தெரியாதபடி தாடி வளர்த்தாலும், அதோ உங்கள் வலது காதில் இருக்கும் மச்சம் உங்களைக் காட்டிக் கொடுத்துவிடுகிறது. உங்களைப் பார்த்த உடனே சந்தேகப்பட்டேன். அது சரியாகப்போய்விட்டது" என்றான் பரமன்.

"நீ சொன்னால் யாரும் நம்பமாட்டார்கள். ஆனால், நான் சொன்னால் நம்புவார்கள். என்னிடம் எல்லா ருஜுவும் இருக்கிறது" என்றான், தாடிக்காரன்.

"சரி, போ! போய் உன்னாலானதைப் பார்த்துக் கொள். ஒரு பைசாக் காசுகூட உனக்குத் தரமுடியாது" என்றான் பரமன்.

வாசுவின் அம்மாவுக்கு ஒன்றும் புரியவில்லை! தாடிக்காரனிடம் பரமன் இப்படித் துணிச்சலாகப் பேசுகிறானே. இதனால் என்னென்ன ஆபத்துக்கள் வருமோ என்று பயந்தாள். "சும்மா இரு பரமு!" என்று அவனை அடக்கினாள்.

"சும்மா இருங்க அம்மா, வாசுவின் அப்பா இப்படி போலீசுக்குப் பயந்துகொண்டு வருஷக்கணக்காகத் தலைமறைவாக இருப்பதற்குப் பதில் துணிந்து தண்டனையை ஏற்றுக்கொள்ளலாம்" என்றான் பரமன்.

"சரி, சரி, நான் பிறகு வந்து உங்களைப் பார்த்துக் கொள்கிறேன்" என்று சொல்லியவாறு தாடிக்காரன் போய்விட்டான். தாடிக்காரன் போனதும், பரமன் "வாசு, எனக்காக அண்ணா காத்திருப்பார். நான் வரட்டுமா?" என்றான்.

"கொஞ்சநேரம்தான் இருந்து போயேன், தம்பி!" என்றாள் வாசுவின் அம்மா.

"இல்லை... அண்ணுவிடம் சொல்லிக்கொள்ளாமல் வந்துவிட்டேன். அண்ணு கோபித்துக்கொள்வார்" என்று சொல்லிப் பரமன் அவர்களிடம் விடைபெற்றுச் சென்ருன்.

வீட்டை நெருங்கியதும் எப்பொழுதும் கந்தசாமியின் பின்னுலேயே வால்மாதிரி சுற்றிக்கொண்டிருக்கும் சுண்டெலியும் மாணிக்கமும் அவனுடைய வீட்டுத் திண்ணையின்மேல் உட்கார்ந்து கொண்டிருப்பதைக் கண்டான், பரமன். பரமனைக் கண்டதும் அவர்கள் இருவரும் எழுந்துவந்து, "எங்களை மன்னித்துவிடு, பரமு! இத்தனைநாள் தெரியாமல் அந்தப் போக்கிரிக் கந்தசாமியுடன் சுற்றிக்கொண்டிருந்தோம். இப்பொழுதுதான் புத்தி வந்தது. இனிமேல் நாங்கள் அவன் இருக்கும் திசைப்பக்கம் கூடத் திரும்பிப் பார்க்கமாட்டோம்" என்ருர்கள்.

பரமனுக்கு ஒரே வியப்பாக இருந்தது! நேற்று வரை—நேற்றுவரை என்ன—காலைவரை சுண்டெலியும் மாணிக்கமும் கந்தசாமியின் பின்னுல்தானே திரிந்து கொண்டிருந்தார்கள். 'திடீரென்று இவர்களுக்கு ஞாேனாதயம் ஏற்படக் காரணம் என்ன?' என்று யோசித்துக்கொண்டிருந்தான்.

மாணிக்கமும் சுண்டெலியும் கந்தசாமியைவிட்டு விட்டுப் பரமனிடம் வந்ததற்கு இரண்டு காரணங்கள் இருந்தன. முதலாவது, கெட்ட பையன் கந்தசாமியுடன் இனியும் சிநேகமாக இருந்தால் தங்களுக்குப் பரிசு கிடைக்காது என்பதுடன், புத்திசாலி மாணவனை பரமனிடமிருந்து பாடத்தில் தங்களுக்குத் தெரியாத பல சந்தேகங்களையும் தெரிந்துகொள்ளலாம்

என்பதுதான்! எப்படி அவர்கள் யோசனை? ஒரேகல்லில் இரண்டு மாங்காய்!

"அதுசரி, இப்ப எங்கே வந்திங்க?" என்று கேட்டான் பரமன்.

"ஒண்ணுமில்லே, வந்து...இத்தனை நாள் நடந்த பாடத்துக்கு நாங்க குறிப்பு எடுக்கவில்லே. நீ எழுதியிருக்கிறதைக் கொடுத்தால் பார்த்து எழுதிக்கொண்டு திரும்பத் தந்துவிடுவோம்" என்றான், சுண்டெலி.

பரமனும் அவர்கள் பேரில் பரிதாபப்பட்டு 'நோட்ஸ்' எழுதியிருந்த நோட்டுப் புத்தகங்களை எடுத்துவர உள்ளே போனான். 'உள்ளே போனதும் அண்ணா இருப்பார். அவர், 'எங்கே போயிருந்தாய், இந்நேரம்?' என்று கேட்பார் என்று நினைத்தவாறே உள்ளே சென்றான். ஆனால், அங்கே அவன் அண்ணா இல்லை. அவர்களுடைய அறை பூட்டியிருந்தது.

'பள்ளிக்கூடத்திலிருந்து இன்னும் அண்ணா வரவில்லையா? எங்கே போனார்? ஒருவேளை நம்மைக் காணாமல்தான் அறையைப் பூட்டிக்கொண்டு நம்மைத் தேடப் போயிருக்கிறாரோ?' என்று நினைத்தான், பரமன். அப்பொழுது அந்த வீட்டின் பின்புறம் குடியிருக்கும் ஒரு பையன் அங்கே வந்தான். அவனிடம், "அண்ணா, வரவில்லையா?" என்று கேட்டான், பரமன்.

"அவர் இன்னும் வரவில்லையே! எங்கே போனார் என்று உனக்குத் தெரியாதா?" என்றான், அந்தச் சிறுவன்.

பரமன் பேசாமல் வெளியே சென்று திண்ணையின் மேல் நண்பர்களின் பக்கத்தில் உட்கார்ந்தான்.

"என்ன, பரமு! 'நோட்ஸ்' எடுத்து வரலேயா? பத்திரமாகத் திருப்பிக் கொடுத்துவிடுகிறோம்டா" என்ருன் மாணிக்கம்.

"இல்லே, மாணிக்கம். அறைச் சாவி அண்ணு விடம் இருக்கிறது. அவர் வந்ததும் அறையைத் திறந்து உனக்கு 'நோட்ஸ்' எடுத்துத் தருகிறேன்" என்ருன் பரமன்.

"ஏன், பரமு! பள்ளிக்கூடம்விட்டு ரொம்ப நேரம் ஆச்சே! இப்பத்தான் வீட்டுக்கு வருகிருயா? இந்நேரம் எங்கே போயிருந்தாய்?" என்ருன் மாணிக்கம்.

"வாசுவின் வீட்டிற்கு!" என்ருன், பரமன்.

"நான் அப்பவே நினேச்சேன். வாசு ரொம்ப நல்ல பையன். இல்லேயா?" என்ருன் சுண்டெலி.

"எல்லோரும் நல்லவர்கள்தான். சிலபேர் ரொம்ப நல்லவங்களாக இருப்பாங்க. இன்னும் சிலபேர் கொஞ்சம் நல்லவங்களாக இருப்பாங்க. கெட்டவங்க என்று நாம் நினேக்கிறவர்களிடம்கூட ஏதாவது நல்ல குணம் இருக்கும்" என்ருன், பரமன்.

"அடேயப்பா, என்னமாகப் பேசுகிருன்? நம் மூளேக்கு இதெல்லாம் எட்டமாட்டேனென்கிறதே!" என்ருன் சுண்டெலி.

அப்பொழுது நல்லகண்ணு வீட்டை நோக்கி வேகமாக வருவது தெரிந்தது. அவரைப் பார்த்ததும் மூவரும் எழுந்து நின்ருர்கள்.

"உன்னே ரொம்ப நேரம் காக்க வச்சுட்டேன் பரமு. அவசர வேலேயாக மங்காபுரம் போகவேண்டியிருந்தது. போய் சீக்கிரம் திரும்பிவிடலாமென்று

நினைத்துதான் உன்னிடமும் சொல்லவில்லை. போன இடத்தில் நேரமாகிவிட்டது. ஆமாம், இந்தச் சுண்டெலியும் மாணிக்கமும் எங்கே வந்தார்கள்?'' என்றார், நல்லக்கண்ணு.

''நோட்ஸ் வேண்டுமாம். எழுதிக்கொண்டு திருப்பிக்கொடுத்து விடுவதாகச் சொன்னார்கள்'' என்றான் பரமன்.

''பரீட்சை நெருங்கிக் கொண்டிருக்கிறது. நன்றாகப் படியுங்கள்'' என்று சுண்டெலியையும் மாணிக்கத்தையும் பார்த்துச் சொல்லிவிட்டு உள்ளே சென்று அறையைத் திறந்தார் நல்லக்கண்ணு.

பரமன் 'நோட்ஸ்' எழுதிய நோட்டுப் புத்தகங்களைக் கொண்டு வந்து சுண்டெலியிடம் கொடுத்து, ''சீக்கிரமாகத் திருப்பிக் கொடுத்து விடுங்க. நானும் படிக்கவேண்டும்'' என்றான்.

''ரொம்ப நன்றி. சீக்கிரமாகத் திருப்பிக் கொடுத்து விடுகிறோம்'' என்று சொல்லியவாறே சுண்டெலியும் மாணிக்கமும் பரமனிடம் விடைபெற்றுச் சென்றார்கள்.

உள்ளே நுழைந்ததும், ''பரமு, காலையில் உன்னிடம் இனிமேல் மாலைச் சாப்பாட்டை நான் கவனித்துக் கொள்கிறேன் என்று சொன்னேனே, அது முடியாது போலிருக்கிறது'' என்றார் நல்லக்கண்ணு.

''ஏன் அண்ணா'' என்றான் பரமன்.

''இன்றைய தினத்திலிருந்து மங்காபுரத்தில் ஒரு பையனுக்கு 'ட்யூஷன்' சொல்லிக் கொடுக்க ஒப்புக் கொண்டேன். அதற்காகத்தான் மங்காபுரம் போயிருந்தேன். அவர்கள் இன்றைய தினத்திலிருந்தே பாடம்

"என்ன, பரமு! 'நோட்ஸ்' எடுத்து வரலையா? பத்திரமாகத் திருப்பிக் கொடுத்துவிடுகிறேம்டா" என்றான் மாணிக்கம்.

"இல்லை, மாணிக்கம். அறைச் சாவி அண்ணு விடம் இருக்கிறது. அவர் வந்ததும் அறையைத் திறந்து உனக்கு 'நோட்ஸ்' எடுத்துத் தருகிறேன்" என்றான் பரமன்.

"ஏன், பரமு! பள்ளிக்கூடம்விட்டு ரொம்ப நேரம் ஆச்சே! இப்பத்தான் வீட்டுக்கு வருகிறாயா? இந்நேரம் எங்கே போயிருந்தாய்?" என்றான் மாணிக்கம்.

"வாசுவின் வீட்டிற்கு!" என்றான், பரமன்.

"நான் அப்பவே நினைச்சேன். வாசு ரொம்ப நல்ல பையன். இல்லையா?" என்றான் சுண்டெலி.

"எல்லோரும் நல்லவர்கள்தான். சிலபேர் ரொம்ப நல்லவங்களாக இருப்பாங்க. இன்னும் சிலபேர் கொஞ்சம் நல்லவங்களாக இருப்பாங்க. கெட்டவங்க என்று நாம் நினைக்கிறவர்களிடம்கூட ஏதாவது நல்ல குணம் இருக்கும்" என்றான், பரமன்.

"அடேயப்பா, என்னமாகப் பேசுகிறான்? நம் மூளைக்கு இதெல்லாம் எட்டமாட்டேனென்கிறதே!" என்றான் சுண்டெலி.

அப்பொழுது நல்லக்கண்ணு வீட்டை நோக்கி வேகமாக வருவது தெரிந்தது. அவரைப் பார்த்ததும் மூவரும் எழுந்து நின்றார்கள்.

"உன்னை ரொம்ப நேரம் காக்க வச்சுட்டேன் பரமு. அவசர வேலையாக மங்காபுரம் போகவேண்டியிருந்தது. போய் சீக்கிரம் திரும்பிவிடலாமென்று

நினைத்துதான் உன்னிடமும் சொல்லவில்லை. போன இடத்தில் நேரமாகிவிட்டது. ஆமாம், இந்தச் சுண்டெலியும் மாணிக்கமும் எங்கே வந்தார்கள்?'' என்ருர், நல்லக்கண்ணு.

''நோட்ஸ் வேண்டுமாம். எழுதிக்கொண்டு திருப்பிக்கொடுத்து விடுவதாகச் சொன்ஞர்கள்'' என்ருன் பரமன்.

''பரீட்சை நெருங்கிக் கொண்டிருக்கிறது. நன்ருகப் படியுங்கள்'' என்று சுண்டெலியையும் மாணிக்கத்தையும் பார்த்துச் சொல்லிவிட்டு உள்ளே சென்று அறையைத் திறந்தார் நல்லக்கண்ணு.

பரமன் 'நோட்ஸ்' எழுதிய நோட்டுப் புத்தகங்களைக் கொண்டு வந்து சுண்டெலியிடம் கொடுத்து, ''சீக்கிரமாகத் திருப்பிக் கொடுத்து விடுங்க. நானும் படிக்கவேண்டும்'' என்ருன்.

''ரொம்ப நன்றி. சீக்கிரமாகத் திருப்பிக் கொடுத்து விடுகிருேம்'' என்று சொல்லியவாறே சுண்டெலியும் மாணிக்கமும் பரமனிடம் விடைபெற்றுச் சென்ருர்கள்.

உள்ளே நுழைந்ததும், ''பரமு, காலையில் உன்னிடம் இனிமேல் மாலைச் சாப்பாட்டை நான் கவனித்துக் கொள்கிறேன் என்று சொன்னேனே, அது முடியாது போலிருக்கிறது'' என்ருர் நல்லக்கண்ணு.

''ஏன் அண்ணு'' என்ருன் பரமன்.

''இன்றைய தினத்திலிருந்து மங்காபுரத்தில் ஒரு பையனுக்கு 'ட்யூஷன்' சொல்லிக் கொடுக்க ஒப்புக் கொண்டேன். அதற்காகத்தான் மங்காபுரம் போயிருந்தேன். அவர்கள் இன்றைய தினத்திலிருந்தே பாடம்

ஆரம்பித்துவிடச் சொன்னார்கள்" என்றார் நல்லக்கண்ணு.

"அதற்கு என்ன, அண்ணு; சாயங்தரச் சமையலையும் நானே செய்துவிடுகிறேன்" என்றான், பரமன்.

"சே, சே, அப்புறம் உனக்குப் படிக்க, விளையாட நேரமே இருக்காது. இனிமேல் இரண்டு வேளைக்கும் சேர்த்துக் காலையிலேயே சமைத்துவிடுவோம். இரண்டு பேருமே காலையில் சமையல் வேலையைக் கவனிப்போம்" என்றார், நல்லக்கண்ணு.

அதன்படி தினந்தோறும் அண்ணுவும் தம்பியும் அதிகாலையில் எழுந்து சமையல் வேலையைக் கவனிப்பார்கள். அண்ணு அடுப்படியில் இருக்கும்போது பரமன் கடைவீதிக்குச் சென்று பால் தயிர் முதலியவைகளை வாங்கி வருவான். இருவரும் சீக்கிரமாகச் சமையல் வேலையை முடித்துவிட்டுப் பிறகு அவரவர் வேலையைப் பார்ப்பார்கள்.

பரமன் வீட்டுப் பாடங்கள் எழுதுவான். பாடங்களை ஒருமுறை கவனம் செய்துகொள்வான். அண்ணு மாணவர்களின் பயிற்சி நோட்டுப் புத்தகங்களைத் திருத்துவார். இல்லாவிட்டால் அன்றையத் தினம் வகுப்பில் நடத்தவேண்டிய பாடங்களுக்குக் குறிப்புக்கள் எடுத்துக்கொள்வார்.

மாலை பள்ளிக்கூடம் விட்டதும் பரமனுக்கு ஒரு வேலையும் இருக்காது. அண்ணு இரவு எட்டு மணிக்கு மேல்தான் மங்காபுரத்திலிருந்து திரும்புவார். அது வரை வாசுவின் வீட்டில் இருப்பான், பரமன்.

வாசுவின் அம்மாவுக்குப் பரமனை மிகவும் பிடித்துப் போய்விட்டது. அவன் சொன்ன யோசனையின்படியே

புதைத்து வைத்திருத்த பணத்தை எடுத்துத் தபாலாபீ ஸில் தன் பெயரில் கட்டிவிட்டாள். மொத்தம் ஆயிரத்து முன்னூற்றி ஐம்பது ரூபாய் இருந்தது. 'அடேயப்பா; சிறுகச் சிறுக சேர்த்த பணம் இவ்வளவு பெருந் தொகையாகச் சேர்ந்துவிட்டதே' என்று அம்மாவுக் குத் தலைகால் புரியாத சந்தோஷம். ஆனால், பாவம்; அடுத்த நிமிஷமே வேறொரு எண்ணம் தோன்றி அவ ளுடைய மகிழ்ச்சியை விழுங்கிவிட்டது.

'எப்படியாவது இன்னும் அறுநூற்றி ஐம்பது ரூபாய் சேர்த்து, அவர் வேலை செய்துகொண்டிருந்த கம்பெனியில் கட்டிவிட்டால் அவர் பேரில் உள்ள திருட்டுப்பட்டம் ஒழியும்' என்று அம்மா நினைத்தாள்.

அப்பா எடுத்துக்கொண்டு ஓடிவிட்டதாகச் சொல் லப்படும் பணத்தை அம்மா கட்டிவிட்டால், அவருக்கு ஏற்பட்டிருந்த கெட்ட பெயர் போய்விடுமா? எப்படிப் போகும்?… …

அப்பா திருடியதாகச் சொல்லப்படும் தொகையைத் தான் அம்மா கட்டிவிடுகிறாள். ஆனால், 'அந்தத் தாடிக் காரப் பிசாசின் சிநேகிதனை இவர் கொன்றுவிட் டாராமே' அதிலிருந்து அவரை எப்படிக் காப்பாற்ற முடியும்?' என்று பலவாறாக மூளையைப் போட்டுக் குழப்பிக்கொண்டாள். அந்தத் தாடிக்காரன் நண்பனை அப்பா கொன்றது யாருக்கும் தெரியாது. அந்தத் தாடிக்காரன் வந்துதான் இந்தப் பயங்கரச் செய்தியை அம்மாவிடம் கூறினான்.

அப்பொழுது வாசு சின்னக் குழந்தை. அப்பா பண வசூலுக்காக வெளியூர் சென்றிருந்தார். வருவதாகச் சொன்ன தினத்தன்று அவர் வரவில்லை. அடுத்தநாள்

காலையில் தாடிக்காரன் வந்தான். அப்பொழுது அவனுக்குத் தாடிமீசையெல்லாம் கிடையாது. வந்தவன் சுற்றுமுற்றும் பார்த்துவிட்டு ஒருவரும் இல்லையென்று தெரிந்துகொண்டு மிக மெல்லிய குரலில் அந்தப் பயங்கரச் செய்தியை அம்மாவிடம் சொன்னான்.

வாசுவின் அப்பா வசூலுக்குச் சென்ற ஊரில் அந்தத் தாடிக்காரனும் அவன் நண்பன் ஒருவனும் ஏதோ வேலையாகச் சென்றிருந்தார்கள். அங்கே அப்பா அவர்களைச் சந்தித்தார். தாடிக்காரன் அப்பாவை அழைத்துக்கொண்டு தான் தங்கி இருந்த இடத்துக்குப் போனான். அப்பா கடை வேலையாகப் பணவசூலுக்குப் புறப்பட்டுச்சென்றார். வேலை முடிந்ததும் கைப்பையைத் தன் நண்பனின் அறையில் வைத்துவிட்டுக் குளிக்கச் சென்றார். குளித்துவிட்டு உடை மாற்றிக் கொண்டு பணத்தைக் கம்பெனிக்கு அனுப்பி விடுவதற்காகக் கைப்பையைத் திறந்தார். அவருக்குத் திக்கென்று ஆகிவிட்டது. கைகால்களெல்லாம் உதறலெடுக்க ஆரம்பித்துவிட்டன. வசூல் செய்து வந்திருந்த இரண்டாயிர ரூபாய்-இரண்டு பத்து ரூபாய் கட்டுகள் பையில் காணப்படவில்லை. தன் நண்பனிடம் விஷயத்தைக் கூறினார். அந்தப் படுபாவி "எனக்குத் தெரியாது" என்று கூறிவிட்டான். பிறகு அவனுடன் இருந்த அவன் நண்பனைக் கேட்பதற்காக அடுத்த அறைக்குச் சென்றார். அவன் ஒருநோயாளி. அப்பொழுதுதான் ஏதோ மாத்திரை ஒன்றை விழுங்கிவிட்டுத் தண்ணீர் குடித்துக் கொண்டிருந்தான். அப்பாவுக்கு அவன் பேரில்தான் சந்தேகம். ஏனென்றால் அவர் வந்தபொழுது தாடிக்காரன் அறையில் இல்லை—பிறகுதான் வந்தான். எனவே நிச்சயம் நோயாளிதான் எடுத்திருக்கவேண்டும் என்று நினைத்தவராக ஆத்திரத்துடன் அவனை நெருங்கிச்

சென்று, "மரியாதையாக என் கைப்பையிலிருந்து எடுத்த பணத்தைக் கொடுத்துவிடு" என்று கோபமாகக் கேட்டார்.

"பணமா? எந்தப் பணம்" என்றுன், அந்த நோயாளி.

"தெரியாது உனக்கு? பாசாங்கா செய்கிருய்?" என்று கூறியபடியே அவன் கன்னத்தில் ஓங்கி ஓர் அறை அறைந்தார்.

அடுத்தகணம் அவர் பார்த்துக் கொண்டிருக்கும் போதே கண்கள் இரண்டும் சொருகிக்கொள்ளத் தடால் என்று விழுந்துவிட்டான் அந்த நோயாளி.

இந்தச் சத்தத்தைக் கேட்டுத் தாடிக்காரன் வந்து விட்டான். "அடப்பாவி, அந்த வியாதிக்காரனை அநியாயமாகக் கொன்றுவிட்டாயே!" என்று சொல்லியபடி கைகால்களை அசைத்துப் பார்த்தான். அவை கட்டை போல் இருந்தன. மூக்கில் கைவைத்துப் பார்த்தான்.

"இவனைக் கொலை செய்துவிட்டாயே, கொலைகாரா! உன்னை என்ன செய்கிறேன் பார்" என்று அப்பாவைப் பார்த்துக் கத்திஞன் தாடிக்காரன்.

அப்பாவுக்குத் திகிலாகப் போய்விட்டது. "ஐயோ, கொலை! நாஞ கொலை செய்தேன்?" என்று பயந்து நடுங்கிக் கொண்டிருந்தார். அவர் உடம்பு பூராவும் வியர்வையிஞல் தெப்பமாக நனைந்திருந்தது.

"இதோ பார், நான் சொல்லுகிறமாதிரி செய். இல்லாவிட்டால் போலீசைக் கூப்பிடுவேன்" என்று மிரட்டிஞன், தாடிக்காரன்.

"வேண்டாம், வேண்டாம். நீ என்ன சொன்னாலும் கேட்கிறேன்" என்றார், அப்பா.

"சரி, நான் சொல்லுகிறபடி எழுது. 'முருகேசன் பேரில் வீணாகச் சந்தேகப்பட்டு, ஆத்திரத்தினால் அவனை அடித்துக் கொன்றேன்' என்று எழுதி உன் கையெழுத்தைப்போட்டுக் கொடு" என்று அப்பாவை மிரட்டினான், தாடிக்காரன்.

அந்த நேரத்தில் அப்பாவுக்கு ஒன்றுமே தோன்றவில்லை. தாடிக்காரன் சொன்ன மாதிரியாக வெல்லாம் ஆடினார். கடிதம் எழுதி முடித்ததும் கையெழுத்திட்டு அவனிடம் கொடுத்தார். அதை வாங்கிக்கொண்ட தாடிக்காரன், "இதோ பார், நீ என் சிநேகிதன் ஆனதாலே உனக்கு உயிர்ப் பிச்சை அளிக்கிறேன். எங்கேயாவது கண்காணாத இடத்திற்கு ஓடிவிடு இல்லாவிட்டால் போலீசில் மாட்டிக் கொள்வாய்" என்று மிரட்டினான்.

அப்பாவும் என்ன செய்கிறோம் என்று அறியாதவராக ஓடியே போய்விட்டார்.

தாடிக்காரன் அப்பா எழுதிக் கொடுத்திருந்த காகிதத்தை அம்மாவிடம் காட்டிப் பயமுறுத்தினான். அம்மா அவனைப் போலீசுக்குப் போகவேண்டாமென்று சொல்லித் தான் போட்டிருந்த நகைகளை எல்லாம் கழற்றி அவனிடம் கொடுத்தாள். தாடிக்காரன் அதை வாங்கிக்கொண்டு போனபிறகு, அம்மா வாசுவைத் தூக்கிக்கொண்டு வேறு ஊருக்குச் சென்றுவிட்டாள்.

இப்பொழுது அந்தத் தாடிக்காரன் மீண்டும் வந்து அம்மாவைப் பயமுறுத்திச் சென்றிருக்கிறான். பரமுவோ 'உன்னால் ஆனதைப் பார்த்துக் கொள்' என்று துடுக்குத்

தனமாகக் கூறிவிட்டான். இதை, மனசில் வைத்துக் கொண்டு அந்தத் தாடிக்காரன் என்னென்ன செய்வானே என்று பயந்து கொண்டிருந்தாள் அம்மா.

அம்மா பயந்தமாதிரி ஒன்றும் நடக்கவில்லை. தாடிக்காரன் மிரட்டிவிட்டுச் சென்று அன்றுடன் ஒரு வாரம் ஆகிறது. அன்று முதல் அவனை அந்த ஊரிலேயே காணேம். பரமனும், வாசுவும் அவனை வேவு பார்ப்பதற்காகவே அடிக்கடி கந்தசாமியின் மளிகைக் கடைப் பக்கம் சென்ருர்கள். கடை பூட்டியிருந்தது. இரவு பகல் இருபத்திநான்கு மணி நேரமும் திறந் திருக்கும் கந்தசாமியின் அப்பாவுடைய மளிகைக்கடை ஒரு வாரமாக மூடியிருந்தது வாசுவுக்கும் பரமனுக்கும் ஆச்சரியத்தைத் தந்தது.

'தாடிக்காரனையும் ஊரில் காணேம். கந்தசாமியின் அப்பாவையும் காணேம். இரண்டு பேருமாகச் சேர்ந்து ஏதாவது சதி செய்கிருர்களோ?' என்று நினைத்தான் வாசு.

அப்பா ஊரில் இல்லாதது கந்தசாமிக்கு ரொம்ப வும் வசதியாகப் போய்விட்டது. 'இல்லாவிட்டால் நேரம் காலம் இல்லாமல் கூப்பிட்டு ஏதாவது வேலை சொல்லிக்கொண்டே இருப்பார்' என்று நினைத்துச் சந் தோஷப்பட்டான். இப்பொழுது இருட்டி வெகுநேரம் ஆனபிறகும்கூட வீட்டுக்கு வருவதில்லை. எந்நேரமும் மாந்தோப்பிலேயே பழியாகக் கிடப்பான். அந்தக் குட்டை மரத்தின் அடியில் இருக்கும் கடப்பைக் கல் லின்மேல் உட்கார்ந்துகொண்டு ஏதேதோ நினைத்துக் கொண்டிருந்தான். இப்பொழுதெல்லாம் சுண்டெலி யும், மாணிக்கமும் அவனுடன் சேருவதில்லை. அவனு

டன் சேருவதில்லை என்பதென்ன, அவனைக் கண்டாலே காணாதவர்கள்போல் வேறுபுறம் சென்றுவிடுவார்கள்.

'அந்தச் சுண்டெலியும் மாணிக்கமும்கூட இப்பொழுது பரமனுடன் சுற்றுகிறார்களே! நன்றியில்லாதவர்கள்' என்று முணுமுணுத்தான், கந்தசாமி. இப்பொழுது அவனுக்குத் துணை கவண்கல்தான். நண்பர்கள் பேரில் உள்ள ஆத்திரத்தையெல்லாம் சேர்த்து மாந்தோப்பிலுள்ள பறவைகளின்மேல் காட்டுவான். சந்தோஷமாகக் கொஞ்சிக் கொஞ்சிப் பேசும் கிளிக் கூட்டத்தைக் கண்டாலே அவனுக்குப் பிடிக்கவில்லை.



உடனே ஒரு கல் எடுத்துக் கவண்வில்லில் வைத்துக் குறி பார்த்து அடிப்பான். அடுத்த கணம் கிளிகளின் கீச்சுக் கீச் சென்ற சப்தமும், அவைகள் பயத்தினால் இங்குமங்கும் பறந்து போகும் சப்தமும் மாந்தோப்பையே குலுங்க வைக்கும்.



இரவு எட்டு மணி ஆகிவிட்டது என்பதை அறிவிக்க மணிக்கூண்டுக் கடிகாரம் எட்டுத் தடவை அடித்தது. அப்பொழுதுகூடக் கந்தசாமிக்கு வீட்டுக்குப் போகவேண்டும் என்றே தோன்றவில்லை. எவ்வளவு நேரமானாலும் இரவு பூராவும் மாந்தோப்பிலேயே பழியாக இருப்பான். ஆனால், பசி வந்து குறுக்கிட்டதால் வேண்டா வெறுப்பாக வீட்டுக்குப் புறப்பட்டான். மாந்தோப்பிலிருந்து கிளியனூருக்குச் செல்லும் பாதை ஒரே இருட்டாக இருந்தது. தூரத்தில் அங்கொன்றும் இங்கொன்றுமாகத் தெரு விளக்குகள் மங்கலாக எரிந்துகொண்டிருந்தன. விளக்குகள் உள்ள இடத்தில்தான் சிறிதளவு வெளிச்சம் இருந்தது. மற்ற இடங்களில் எதிரே யார் வந்தாலும் தெரியாது. அவ்வளவு இருட்டு.

இருட்டு நேரத்தில் தன்னந்தனியாக வரும் கந்தசாமியைக் கண்டு ஒரு தெரு நாய் குரைத்தது. கந்தசாமிக்கு ஆத்திரம் பொறுக்கமுடியவில்லை. கீழே கிடந்த கல் கன்றைப் பொறுக்கி நாயைக் குறிபார்த்து அடித்தான்.

அடுத்தகணம் அந்த வெறிநாய் பயங்கரமாகக் குரைத்துக்கொண்டு கந்தசாமியை நோக்கிப் பாய்ந்தது.

அதுவரை அவனை எந்த நாயும் எதிர்க்கத் துணிந்ததில்லை. கல்லடி பட்டதும் 'வாள், வாள்' என்று குரைத்துக்கொண்டே ஓடத்தொடங்கிவிடும். ஆனால், இந்த நாய் பயங்கரமாகக் குரைத்துக்கொண்டு தனனை நோக்கி வருவதைக் கண்ட கந்தசாமி வேகமாக எதிர்த் திசையில் ஓடினான். அவன் கையிலிருந்த கவண்வில் நழுவிக் கீழே விழுந்தது.

அப்பொழுது மங்காபுரத்தில் டியூஷனை முடித்துக் கொண்டு வீடு திரும்பிக்கொண்டிருந்த நல்லக்கண்ணு, ஒரு பையன் நாய்க்குப் பயந்து ஓடிவருவதையும், நாயும் விடாமல் அவனைத் துரத்துவதையும் கண்டார். இன்னும் கொஞ்சதூரம்தான். நாய் நிச்சயம் அவன் பேரில் பாய்ந்துவிடும். உடனே நல்லக்கண்ணு நாயின் கவனத்தை வேறுபுறம் திருப்புவதற்காகப் பாதையில் கிடந்த கல் ஒன்றை எடுத்து நாய்க்கு மிகச் சமீபமாக எறிந்தார். அவ்வளவுதான், நாய் கந்தசாமியை விட்டு விட்டு நல்லக்கண்ணுவின் பேரில் பாய்ந்தது. தான் கல்லை எடுத்து எறிந்ததும் நாய் பயந்து ஓடிவிடும் என்றுதான் நல்லக்கண்ணு நினைத்தார். ஆனால், எதிர் பாராதவிதமாக அது தன்னை நோக்கிப் பாய்ந்ததைக் கண்டு எதுவும் தோன்றாதவராகத் திகைத்து நின்று விட்டார், நல்லக்கண்ணு.

அந்தப் பொல்லாத வெறிநாய் ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து, அவர் தொண்டையில் பலமாகக் கடித்துவிட்டது. நல்லக்கண்ணு, "ஐயோ!" என்று அலறியபடி கீழே வீழ்ந்தார்.

# 12

ஒரு தாய்க்கு ஒரே மகன். அவனைச் செல்லமாக வளர்த்து வந்தாள் அவன் அன்னை. ஒருநாள் அந்தச் சிறுவன் தோட்டத்தில் விளையாடிக் கொண்டிருக்கும் போது, பாம்பு கடித்து இறந்துவிடுகிறான். தாயார் துடிதுடிக்கிறாள். சீராட்டிப் பாராட்டி வளர்த்த ஒரே மகன் இறந்துவிட்டதை அறிந்து துடிதுடிக்கக் கதறினாள். அவள் கவலையை ஒருவராலும் போக்க முடியவில்லை. அவளுக்குப் புத்தர்பிரானின் ஞாபகம் வருகிறது. 'எல்லோருக்கும் நல்வாழ்வு தரும் அந்தப் புனிதரிடம் முறையிடுவோம்' என்று நினைத்தவளாக இறந்துபோன தன் மகனைத் தோளில் சாத்தியவாறு காடு மலையெல்லாம் கடந்து புத்தரிடம் செல்கிறாள். அவர் காலடியில் மகனைப்போட்டு, "ஐயனே, என் ஒரே மகன், என்னுடைய குலக்கொழுந்து, பாம்பு கடித்து இறந்துவிட்டான். இவனை எவ்விதமாகவாவது உயிர் பெறச் செய்யவேண்டும்" என்றாள்.

என்ன கடினமான காரியம்! இறந்தவர்களை உயிர்ப்பிக்க முடியுமா? அப்படியே முடிந்தாலும்கூட அப்

புறம் உலகம் என்ன ஆவது?' என நினைத்த புத்தர் பிரான், ''அம்மா, உன் மகனை உயிர்பெறச் செய்வேன். ஆனால், நீ எவ்விதமாயினும் சாவே அறியாத வீட்டில் இருந்து ஒரு பிடி கடுகு வாங்கிவா'' என்றார்.

பிள்ளையைப் பறிகொடுத்த அந்தத் தாயும் ஒரு பிடி கடுகுக்காக எங்கெங்கோ அலைந்தாள். சாவே அறியாத வீடு எதுவும் இல்லை. வெறுங்கையுடன் திரும்பினாள். அதற்குப்பிறகு புத்தர்பிரான் அவளுக்கு ''பிறப்பவர் இறப்பது உறுதி. இதை நம்மால் தடுக்க முடியாது'' என்று ஆறுதல் கூறினார்.

கவிமணி எழுதிய 'ஆசிய ஜோதி'யில் உள்ள இந்தப் பாடலுக்குத் தமிழாசிரியர் விளக்கம் சொல்லிக் கொண்டிருந்தார். எல்லோரும் தமிழாசிரியர் சொல்வதைக் கருத்துடன் கேட்டுக்கொண்டிருந்தனர். மகனை இழந்த தாய் அழும்போது அவர்களுக்கும் துக்கம் தாங்கமுடியவில்லை.

ஆசிரியரின் விளக்கம் கேட்டுப் பரமன் கண்களின் ஓரத்தில் வழிந்த கண்ணீரைத் துடைத்துக்கொண்டான். மகனை இழந்த தாய்க்காக அவன் கண்ணீர் விடவில்லை. இரண்டு நாட்களுக்குமுன் அவனுடைய அண்ணா வெறிநாய் கடித்துப் பரிதாபமாக இறந்தாரே, அதற்குத் தான் அவன் கண்ணீர் விட்டான். வெளிப்படையாக, 'ஓ' வென்று சத்தம்போட்டு ஊரைக் கூட்டி அழாவிட்டாலும் அவன் உள்ளத்துக்குள்ளே கவலை அலைமோதிக் கொண்டிருந்தது. சில நேரங்களில் அது அவனையுமறியாமல் கண்ணீராக வந்துவிடும்.

கந்தசாமியைக் காப்பாற்றப்போன நல்லக்கண்ணுவை வெறிநாய் கடித்துவிட்டது. அவர் மயக்கம்

போட்டுப் பாதையிலேயே விழுந்தார். அவரைக் கடித்த பிறகுதான் கோபம் அடங்கியதைப்போல், அந்த வெறி நாய் சென்றுவிட்டது. இத்தனை நேரமாக நாய்க்குப் பயந்து கொண்டு மரத்தின் பின்னால் ஒளிந்திருந்த கந்தசாமி நாய் போன பிறகுதான் தைரியமாக வந்தான். சமயத்தில் வந்து தன்னைக் காப்பாற்றியவர் யார் என்று அவர் முகத்தைக் கூர்ந்து பார்த்தான். அப்பொழுதுதான் அவனுக்கு அவர் ஆசிரியர் நல்லக் கண்ணு என்று தெரியவந்தது. 'ஐயோ, பரமனின் அண்ணாவை அந்த வெறிநாய் இப்படிக் கடித்து விட்டதே! நம்மால்தானே இவருக்கு இந்த ஆபத்து நேரிட்டது?' என்று உள்ளூர வருந்தினான். இருந்தாலும் வெளிப்படையாக அவருக்கு உதவி செய்து அவரை எடுத்துச்சென்று அவர் வீட்டில்விடப் பயந்தான். 'இனியும் அங்கே இருந்தால் நாம்தான் இதற்குக் காரணம்?' என்று நம்மை யாராவது அடித்துவிடுவார்களோ என்று பயந்தான். உடனே திரும்பிப் பார்க்காமல்—தன்னைக் காப்பாற்ற வந்து வெறிநாயினால் கடிக்கப்பட்டுப் பாதையில் கிடக்கும் நல்லக்கண்ணுவை மறந்து வீட்டை நோக்கிச் சென்றான். வழியிலே ஏதோ ஒரு பொருள் அவன் காலில் தட்டுப்பட்டது. குனிந்து அதை எடுத்தான். சற்றுநேரத்திற்குமுன் அவன் வீசியெறிந்த கவண்வில்தான் அது. 'ஐயோ, இதனால்தானே இவ்வளவு விபரீதம் வந்தது?' என்று நினைத்தவனாக 'மடக்'கென்று அதை முறித்துத் தூர வீசி எறிந்து விட்டுப் போய்விட்டான்.

அண்ணாவின் வருகைக்காக வெகுநேரம் காத்திருந்த பரமன் வாசலுக்குப் உள்ளுக்குமாக அலைந்து கொண்டிருந்தான். வாசலில் ஒரு வண்டி வந்து

நின்றது. வண்டிக்காரன் அவர்களுக்குத் தெரிந்தவன் தான். அவன் இறங்கினன். அவனுடைய முகம் பயத்தினல் வெளிறிப்போயிருந்தது. வாசலில் நின்றிருந்த பரமனைப் பார்த்து, "தம்பீ, அண்ணுவுக்கு ஆபதது! சீக்கிரம் வா" என்ருன்.

பரமன் திகிலுடன் வண்டியருகில் சென்று அண்ணுவைப் பார்த்தான். அண்ணுவின் தொண்டையிலிருந்து ரத்தமாகப் பெருக்கெடுத்து வழிந்துகொண்டிருந்தது.

"ஐயோ, அண்ணு!" என்று கதறினன், பரமன்.

"கொஞ்சம் பிடி தம்பீ, உள்ளே கொண்டு போவோம்" என்ருன் வண்டிக்காரன்.

இதற்குள் பக்கத்து அண்டை வீடுகளில் இருந்தவர்கள் வந்து கூடிவிட்டார்கள். அவர்கள் நல்லக்கண்ணுவை எடுத்துச்சென்று உள்ளே படுக்கவைத்தனர். வண்டிக்காரன் விஷயத்தை விளக்கினன்.

"மங்காபுரத்திலே சரக்கு போட்டுவிட்டு வந்துகொண்டிருந்தேன். மாந்தோப்பு பக்கம் யாரோ முணுமுணுக்கிறமாதிரி சப்தம் கேட்டது. வண்டியை நிறுத்திவிட்டு இறங்கிப் பார்த்தால் நம் வாத்தியார் ஐயா பாதையில் விழுந்து கிடந்தார். அவர் உடம்பெல்லாம் ஒரே ரத்தம். கொஞ்சம்கூட யோசிக்காமல் அவரை வண்டியில் தூக்கிப்போட்டுக்கொண்டு வந்துவிட்டேன்" என்ருன் வண்டிக்காரன்.

அவர் தொண்டையில் ஏற்பட்டிருந்த காயத்தை ஒருவர் கூர்ந்து பார்த்துவிட்டு, "ஐயோ, இவரை நாய் கடித்திருக்கிறது போலிருக்கிறதே! உடனே போய்

ஊசி போட்டால்தான் குணமாகும். சீக்கிரம் இவரை ஆஸ்பத்திரிக்குத் தூக்கிச் செல்லுங்கள்'' என்றார்.

நல்லக்கண்ணுவை ஆஸ்பத்திரியில் சேர்த்தார்கள். அவருக்கு ஊசிமேல் ஊசியாகப் போட்டார்கள். ஒன்றும் பிரயோசனமே இல்லை. பிரக்ஞை வந்ததும் நாய் மாதிரி குரைத்தார். அவரைப் பார்க்க அனைவருக்கும் பரிதாபமாக இருந்தது. இரண்டு நாட்களாக அவரைப் பார்க்க ஆசிரியர்களும், மாணவர்களும் கூட்டம்கூட்டமாக வந்தார்கள். வாசுவும், வாசுவின் அம்மாவும் பரமனுக்குத் துணையாக ஆஸ்பத்திரியிலேயே இருந்தார்கள்.

ஆசிரியர் ஆஸ்பத்திரியில் உயிருக்கு மன்றாடிக் கொண்டிருக்கிறார் என்று கேள்விப்பட்ட கந்தசாமி புழுவாகத் துடித்தான். 'இவ்வளவுக்கும் தான்தான் காரணம்' என்று அவனுடைய மனச்சாட்சி அவனைச் சித்திரவதை செய்து கொண்டிருந்தது. ஆஸ்பத்திரிக்குப்போய் அவரைப் பார்க்கத் துடித்தான். அவனைப் பார்த்ததும் ஆசிரியருக்கு எல்லா விஷயங்களும் நினைவுக்கு வந்து உண்மையைச் சொல்லிவிட்டால் என்ன செய்வது?' என்று பயந்தான்.

கடைசியில் ஒருவாறு துணிந்து ஆஸ்பத்திரிக்குச் சென்றான். நல்லக்கண்ணு சுயநினைவு இல்லாமல் படுத்துக்கிடந்தார். பக்கத்தில்போய் ''சார்'' என்றான். துக்கம் அவன் தொண்டையை அடைத்தது. அவன் கண்களிலிருந்து கண்ணீர் வழிந்தது.

கல்நெஞ்சனான கந்தசாமியின் கண்களிலிருந்து கண்ணீர் வழிவதைக் கண்டு வாசு ஆச்சரியப்பட்டான். 'எப்படியோ ஒன்று, நம் ஆசிரியர் அவனுடைய அனு-

தாபத்தையும் பெற்றுக்கொண்டாரே! இப்பொழுதாவது அவனுக்கு நம் ஆசிரியரின் பெருமை தெரிந்ததே' என்று நினைத்தான் வாசு.

கந்தசாமி பரமனின் பக்கத்தில் உட்கார்ந்தான். "அழாதே பரமு!" என்று அவனுக்கு ஆறுதல் சொன்னான். ஆனால், அவனுக்குத்தான் 'கோ' என்று அழ வேண்டும்போல் தோன்றியது. அப்பொழுது ஒரு நர்ஸ் வந்து, கந்தசாமியைப் பார்த்து, "மணி ஆகி விட்டது. போ, தம்பீ! திரும்பவும் நாளைக்குத்தான் வந்து பார்க்கவேண்டும்" என்றாள்.

கந்தசாமி அரைமனத்துடன் பரமனிடம் சொல்லிக் கொண்டு புறப்பட்டான். நேரே வீட்டுக்குப் போக வில்லை. மாந்தோப்புக்குப் போனான். குட்டை மரத்தின் அடியில் இருந்த கடப்பைகல்லின்மீது உட்கார்ந்தான். கைகளால் முகத்தைப் புதைத்துக் கொண்டு கேவிக் கேவி அழுதான்.

* * *

"பரமு, இங்கே வாப்பா!" என்ற ஆசிரியரின் குரலைக் கேட்டதும் பரமன் கண்களைத் துடைத்துக் கொண்டு எழுந்து சென்றான்.

"அழாதே, பரமு! என்ன செய்யலாம்? நடந்தது நடந்து விட்டது. இனிமேல் அழுது என்ன பிரயோசனம்? பாடத்தைக் கவனி அப்பா" என்று புத்திமதிகள் கூறினார் ஆசிரியர்.

"சரி, சார்" என்று கூறியவாறு இடத்துக்குச் சென்றான், பரமன்.

பாடம் நடந்துகொண்டிருந்தபோது பரமனைத்தவிர இன்னொருவனும் கண்ணீர் விட்டுக்கொண்டிருந்தான். அவன் நம் கந்தசாமிதான். சுண்டெலியும் மாணிக்க

மும்கூடக் கந்தசாமியின் போக்கைக் கண்டு ஆச்சரி யப்பட்டனர்.

ஆசிரியர் நல்லக்கண்ணு இறந்த பிறகு அவன் கிட்டத்தட்ட பைத்தியம்பிடித்தவன்போல இருந்தான். பள்ளிக்கூட நேரம் போக மீதி நேரமெல்லாம் மாந் தோப்பிலேயே பழியாகக் கிடந்தான். இப்பொழு தெல்லாம் கந்தசாமி கல்லெறிந்து தங்களை ஏன் துன் புறுத்துவதில்லை என்று மாந்தோப்புக் கிளிகளுக்கும் ஆச்சரியமாக இருந்தது.

'ஆசிரியர் தன்னால்தான் இறந்துவிட்டார்' என்று எந்நேரமும் அவன் மனச்சாட்சி அவனைக் குத்திக் கொண்டே யிருந்தது. 'ஓடிப்போய் பரமனிடம் உண்மையைச் சொல்லிவிடலாமா?' என்றுநினைத்தான். ஆனால், போகவில்லை.

கந்தசாமி பித்துப்பிடித்தவன்போல் இருப்பதைக் கண்டு அவன் அப்பாவும் அம்மாவும் கலங்கினார்கள். அப்பாவுடன் இருந்த தாடிக்காரன், "இது ஒன்றும் இல்லீங்க. தம்பி, எந்நேரமும், மாந்தோப்பிலேயே பழியாகக் கிடக்குது பாருங்க. ஏதாவது காத்து கருப்பு பிடிச்சிக்கிட்டு இருக்கும். மந்திரிச்சால் எல் லாம் சரியாகப் போய்விடும்" என்றான்.

கந்தசாமிக்குப் பிடித்திருந்த பித்து மந்திரத்திலும் போகவில்லை; மாங்காயிலும் போகவில்லை. இதற் கிடையில் அவனிடம் திடீரென்று ஒரு புதுமாற்றம் தென்பட்டது. மாந்தோப்பிலேயே பழியாகக் கிடந்த வன் இப்பொழுது வீட்டில் பழியாக இருக்க ஆரம்பித் தான். பள்ளிக்கூடம் விட்டதும் நேரே வீடு. அவ் வளவுதான்! தாடிக்காரன், இது மந்திரத்தின்

மகிமை” என்ருன். ஆனால், முன்பு இருந்தானே பித்துப்பிடித்தவன்போல் அதில் எந்தவித மாற்றமும் கிடையாது. இப்பொழுது எந்நேரம் பார்த்தாலும் அவன் கைகளில் புத்தகம் இருந்தது. படிப்பான்; படித்த நேரம் போக மீதி நேரங்களில் எழுதுவான்.

‘பையன் ஒருவரிடமும் கலகலப்பாகப் பழகாவிட்டாலும் பாடத்திலாவது அக்கறையாக இருக்கிருனே” என்று கொஞ்சம் ஆறுதல் அடைந்தனர், கந்தசாமியின் அப்பாவும் அம்மாவும்.

அரை ஆண்டுப் பரீட்சை முடிந்தது. விடுமுறை விடப்போகிருர்கள். அந்தச்சமயம் பார்த்துப் பட்டணத்திலிருந்து தங்கவேலு அத்தான் கிளியனூருக்கு வந்திருந்தார். எந்நேரமும் சோகமாக உட்கார்ந்து கொண்டிருக்கும் கந்தசாமியைப் பார்த்தார். அவன் கவலைக்குக் காரணம் என்னவென்று கந்தசாமியைப் பார்த்துக் கேட்டார். கந்தசாமி ஒன்றும் பதில் சொல்லவில்லை. கந்தசாமியின் அப்பாதான் சொல்லலாஞர். “அது என்னவோ தெரியவில்லை மருமகப்பிள்ளை, அந்த நாசமாப்போன வாத்தியார்—அவர்தான் உங்க சிநேகிதன் என்று சொன்னீங்களே—அந்த ஆள் செத்துப் போனதிலிருந்து இவன் இப்படி இருக்கிருன்” என்றதும் தங்கவேலுக்குத் தூக்கிவாரிப்போட்டது.

‘நம்முடைய நண்பன் நல்லக்கண்ணு இறந்துவிட்டாஞ? அட கடவுளே! பரமன் கதி என்ன ஆயிற்று?’ என்று கவலைப்பட்ட தங்கவேலு, “நல்லக்கண்ணு இறந்து விட்டாஞ? எப்பொழுது?.........உடம்புக்கு என்ன?...” என்று பரபரப்பாகக் கேட்டார்.

“விட்டுத்தள்ளுங்க அந்தப் பேச்சை. என்னவோ சொறிநாய் ஒன்று கடிச்சி செத்துப்போயிட்டான்.

அவன் தலையெழுத்து அப்படி. ஆனால், இதைக்கேளுங்க மாப்பிள்ளை... என்னைக்கு அந்தப் பாழாப் போகிறவன் செத்தானோ, அன்னையிலிருந்து இவன் பித்துப் பிடிச்சவன் மாதிரி ஆகிவிட்டான். அந்த வாத்தியாருடைய ஆவிதான் இவனைப் பிடிச்சிக்கிட்டு ஆட்டுகிறது என்று நம்ம சாமியார் சொல்லுகிறார்" என்றார் கந்தசாமியின் அப்பா.

"யார் அது சாமியார்?" என்று தங்கவேலு கேட்டுக்கொண்டிருக்கும்போதே தாடிக்காரன் அவ்விடம் வந்தான். உடனே அவரைத் தன் மாப்பிள்ளைக்கு அறிமுகப்படுத்தினார், கந்தசாமியின் அப்பா.

தாடிக்காரன் வந்ததும் தங்கவேலு அவ்விடத்தை விட்டு எழுந்தார். "இப்ப அந்த நல்லக்கண்ணுவின் தம்பி எங்கே யிருக்கிறான், தெரியுமா?" என்று தன் மாமனாரைக் கேட்டார் தங்கவேலு.

வேறு யாராவது இந்தக் கேள்வியை அவரிடம் கேட்டிருந்தால் நிச்சயம் அவர்களுடைய முதுகில் இரண்டு அறைகள் வைத்துவிட்டுத்தான் மறுவேலை பார்ப்பார், கந்தசாமியின் அப்பா. ஆனால், கேட்டது அவருடைய மாப்பிள்ளை அல்லவா? அதனால் பொங்கி வந்த கோபத்தை அடக்கிக்கொண்டார்.

'அந்தப் பொடிப்பயல், என்னை நாலுபேர் முன்னால் மரியாதையில்லாமல் பேசினதோட இல்லாமல் என்னை அலட்சியம் செய்தானே—என்ன ஆயிற்று? கைமேல் பலன்! அவன் அண்ணன் வெறி நாய் கடித்துச் செத்தான். பெரியவர்களை அந்தமாதிரியாக மரியாதை இல்லாமல் பேசலாமோ?' என்று நினைத்தார் கந்தசாமியின் அப்பா.

பரமனைப்பற்றி தான் கேட்ட கேள்விக்கு மாமனார் பதில் சொல்லாதது தங்கவேலுவுக்கு ரொம்பவும் வருத்தமாகத்தான் இருந்தது. உடனே கந்தசாமி முன் வந்து, "வாங்க அத்தான், பரமுவின் வீட்டை நான் காட்டுகிறேன்" என்று தங்கவேலுவை அழைத்துச் சென்றான்.

கந்தசாமியின் அப்பா ஒன்றும் புரியாதவராகத் திகைத்து நின்றுகொண்டிருந்தார். 'நிச்சயம் இவனை நல்லக்கண்ணுவின் ஆவிதான் பிடித்து ஆட்டுகிறது' என்று தீர்மானம் செய்துகொண்டார்.

போகிறவழியில் கந்தசாமி பரமனைப்பற்றிய சகல விவரங்களையும் தங்கவேலுவிடம் சொன்னான். அவனுடைய அண்ணன் இறந்தபிறகு அவன் வாசுவின் வீட்டில் இருந்துவருவதாகவும், அங்கேயும் அவன் அவர்களுக்குப் பாரமாயில்லாமல் ஓரளவு சம்பாதித்துக் கொண்டிருக்கிறான் என்றும் கூறினான்.

"அப்படியானால் படிப்பை நிறுத்திவிட்டானா?" என்று பரபரப்புடன் கேட்டார் தங்கவேலு.

"இல்லை. அதுபாட்டுக்குப் படித்துக்கொண்டிருக்கிறான். தினமும் காலையில் ஒருமணி நேரம், சாயந்திரம் ஒரு மணி நேரம் சின்னப் பையன்களுக்கு 'ட்யூஷன்' சொல்லித் தருகிறான். அதிலிருந்து கிடைக்கிற பணத்தை வாசுவின் அம்மாவிடமே கொடுத்துவிடுகிறான்," என்றான் கந்தசாமி.

"அப்படியா! ரொம்பவும் கெட்டிக்காரன்தான்!" என்றார் தங்கவேலு.

இதற்குள் வாசுவின் வீடு வந்துவிட்டது. கந்தசாமி வாசுவின் வீட்டைத் தன் அத்தானுக்குக் காட்டி

ளுன். வீட்டுத்திண்ணையில் இருபது முப்பது சின்னச் சின்னப் பிள்ளைகள் சிலேட்டுப்பலகையும் பலப்பமு மாக உட்கார்ந்து கொண்டிருந்தார்கள். ஒரு பையன் பக்கத்திலிருந்த பையனின் பலப்பத்தைப் பிடுங்கி 'லபக்'கென்று வாயில் போட்டுக் கடித்துத் தின்று விட்டான். பலப்பத்தைப் பறிகொடுத்த சிறுவன், பரமனிடம் "சார், இவன் வந்து என் பலப்பத்தைப் பிடுங்கி..." என்று கண்களைக் கசக்கிக்கொண்டே அழுதுகொண்டிருந்தான்.

ஒரு பையன் பக்கத்தில் உள்ள தென்னை மரத்தில் ஏறி ஏறி இறங்கிக்கொண்டிருந்த அணிலையே கண் கொட்டாமல் பார்த்துக்கொண்டிருந்தான். இன்னொரு சிறுவன் புத்தகங்களின் பக்கங்களைக் கிழித்துக் கத்திக்கப்பல் சண்டைக்கப்பல் எல்லாம் செய்து சாக்கடையில் விட்டுக்கொண்டிருந்தான்.

இம்மாதிரியான சிறுப்பிள்ளைகளை மேய்ப்பதற்குப் பரமனுக்கு எவ்வளவு கொடுத்தாலும் தகும்.

"என்ன, பரமு! சௌக்கியந்தானு?" என்று கேட்டுக்கொண்டே வந்து திண்ணைமேல் உட்கார்ந்தார் தங்கவேலு.

பரமன் அவரைப் பார்த்ததும் எழுந்து நின்றுன். "பரவாயில்லை உட்கார்" என்று சொல்லி அவனைத் தம் பக்கத்தில் உட்கார வைத்துக்கொண்டார் தங்கவேலு. அவர் பக்கத்தில் கந்தசாமியும் உட்கார்ந்தான்.

"எனக்கு இப்பத்தான் சங்கதி தெரியும். எனக்கு ஒருவரி எழுதிப்போடக்கூடாதா? நல்லக்கண்ணுவின் முகத்தையாவது பார்த்திருப்பேனே!' என்று சொல்லிய

படியே தம் கண்களில் துளிர்த்த கண்ணீரைத் துடைத்துக்கொண்டார், தங்கவேலு.

"உங்க விலாசம் எனக்குத் தெரியாது. கந்தசாமியிடமாவது கேட்டுத் தெரிந்துகொண்டிருக்கலாம். நினைவே இல்லை" என்றான் பரமன்.

உள்ளேயிருந்து வாசுவும் வாசுவின் அம்மாவும் வந்தார்கள். பரமனுடன் யாரோ ஒருவர் பேசிக்கொண்டிருப்பதையும் அவர்களுடன் கந்தசாமியும் இருப்பதைப் பார்த்து ஆச்சரியத்துடன் அங்கேயே நின்றுகொண்டிருந்தார்கள்.

பரமன் அவர்களைத் தங்கவேலுவுக்கு அறிமுகம் செய்துவிட்டு, "இவர் கந்தசாமியின் அத்தான். என் அண்ணாவின் சிநேகிதர்" என்றான்.

"அப்படியா!" என்று கேட்ட அம்மா உள்ளே சென்றாள். திரும்பி வரும்போது இரண்டு டம்ளர்களில் மோர் கொண்டு வந்து தங்கவேலுவிடம் ஒன்றும் கந்தசாமியிடம் ஒன்றுமாகக் கொடுத்தாள். "இதெல்லாம் எதற்கு?" என்று சொல்லிய தங்கவேலு அவர்கள் அன்புடன் தருவதை மறுக்கக்கூடாது என்று வாங்கிக் குடித்தார். கந்தசாமியும் குடித்தான்.

"பரமு, உன் அண்ணன்மாதிரியாகவே என்னை நினைத்துக்கொள். எந்தவிதமான உதவியாக இருந்தாலும் தட்டாமல் செய்வேன்" என்றார் தங்கவேலு.

"உங்க அன்புமட்டும் இருந்தால், அதுவே போதும்" என்றான் பரமன்.

தங்கவேலு புறப்படுவதற்காக எழுந்தார். திடீரென்று ஏதோ நினைத்துக்கொண்டவராய் சட்டைப் பையில் கையைவிட்டு ஒரு கடிதத்தை எடுத்தார்.

“பேச்சுப் பராக்கில் மறந்தே போய்விட்டேன், பரமு. என் தம்பி மோகன் இதை உன்னிடம் தரச் சொன்னுன். இதுவரை உனக்குக் கந்தசாமி மூலமாக நாலைந்து கடுதாசிகள் எழுதிஞனும். நீ ஒன்றுக்குக் கூடப் பதில் போடவில்லையாமே!” என்று சொல்லிய படியே கடிதத்தைப் பரமனிடம் கொடுத்தார், தங்க வேலு.

அவருடைய குற்றச்சாட்டுக்குப் பரமன் என்ன பதில் சொல்லுவான்? ‘இதுவரை என்னிடம் ஒருகடிதம் கூடக் கந்தசாமி கொடுக்கவில்லை யென்ருல் கந்த சாமியைப்பற்றி அவனுடைய அத்தான் என்ன நினைத் துக்கொள்வார்?’ என்று நினைத்தான், பரமன்.

கந்தசாமி பரிதாபமாகப் பரமனையே பார்த்துக் கொண்டிருந்தான். அந்தப் பார்வை “என்னைக் காட்டிக் கொடுத்துவிடாதே, பரமு!” என்று கெஞ்சுவதைப் போல் இருந்தது.

“மோகனைக் கோபித்துக்கொள்ள வேண்டா மென்று சொல்லுங்க, அண்ணு. எல்லாக் கடிதத்திற் கும் ‘வட்டியும்முதலுமாகச் சேர்த்துப் பதில் எழுது கிறேன்...’ என்று சொல்லுங்கள். இனிமேல் மோகன் எனக்குக் கடிதம் எழுதாவிட்டாலும் நான் அடிக்கடி கடிதம் எழுதி அவனைத் தொந்தரவு படுத்துவேன் என்றும் அவனிடம் கூறுங்கள்” என்ருன், பரமன்.

“சரி, பரமு, வரட்டுமா?” என்று சொல்லிக் கொண்டு புறப்பட்டார், தங்கவேலு.

மோகன் எழுதியிருந்த கடிதத்தைப் பிரித்துப் படித்தான் பரமன். அதில் அவனைப் பற்றிச் சரமாரி

யாகப் புகழ்ந்து எழுதியிருந்தான் மோகன். இவ்வள வும் தன் அண்ணுதான் சொன்னதாக எழுதி அவனு டன் சிநேகமாக இருக்க ஆசையென்றும் எழுதியிருந் தான். பரமனின் அண்ணுவும் அவன் அண்ணுவும் நண்பர்களாக இருந்ததைப்போல அவர்களுடைய தம்பிகளாகிய நாமும் நண்பர்களாக இருப்போம் என்று கூறிவிட்டு இதுவரை எழுதிய கடிதங்களுக்குப் பதில் எழுதாததைப்போல் இதற்கும் பதில் எழுதாமல் இருந்துவிடாதே என்று எழுதியிருந்தான், மோகன்.

அதைப் படித்ததும் அவன் கண்களில் ஆனந்தக் கண்ணீர் வந்தது. 'பட்டணத்தில் எங்கேயோ கண் காணுத இடத்தில் இருக்கும் இவனுக்கு நம்பேரில் எவ் வளவு அன்பு? ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்ததும் இல்லை. அப்படியிருக்க,தன்னுடைய அன்பையெல்லாம் கொட்டி எழுதியிருக்கிருனே, இப்படிப்பட்ட அன்புச் சிநேகிதனுக்குப் பதில் எழுதமுடியாமல் நேர்ந்து விட்டதே!' என்று வருந்தினுன், பரமன்.

மாமனுர் வீடு சென்ற தங்கவேலு மாமனுரிடம், "கந்தசாமிக்கு இப்பொழுது விடுமுறைதானே! இவனை யும் பட்டணத்திற்கு அழைத்துப்போகிறேன். விடு முறை முடிந்ததும் வருவான்" என்ருர் தங்கவேலு.

"எனக்கு ஆட்சேபனை ஒன்றும் இல்லை. அவன் வந்தால் தாராளமாக அழைத்துச் செல்லுங்கள்" என்ருர், கந்தசாமியின் அப்பா.

'கொஞ்ச நாள் பட்டணத்தில் இருந்துவிட்டு வந்தாலாவது இவன் பித்து தெளிகிறதா பார்ப்போம்' என்று நினைத்து மருமகப்பிள்ளை சொன்னதற்கு உடனே சம்மதித்தார் கந்தசாமியின் அப்பா.

கந்தசாமி எந்தவிதமான தடையும்சொல்லவில்லை. அத்தான் கூப்பிட்டதும் தன்னுடைய உடைகளை யெல்லாம் பெட்டியில் வைத்துக்கொண்டு அவருடன் கிளம்பிவிட்டான்.

கந்தசாமியும் அவனுடைய அத்தானும் பட்டணத்திற்குப்போன மறு நாள் பரமனுக்கு இருபது ரூபாய்க்கு ஒரு தந்தி மணியார்டர் வந்திருந்தது. அதில், 'இந்தப் பணத்தை வண்டிச் செலவுக்கு வைத்துக்கொண்டு உடனே புறப்பட்டு வா' என்று எழுதியிருந்தது.

பரமனுக்கு ஒன்றுமே தோன்றவில்லை. தங்கவேலு எதற்காகத் தன்னை உடனே பட்டணத்துக்குப் புறப்பட்டு வருமாறு பணம் அனுப்பியிருக்கிறூர் என்று அவனுக்குப் புரியவில்லை.

வாசுவின் அம்மாவிடம் யோசனை கேட்டான். "என்னவோ தெரியவில்லையே, தம்பி! எல்லாம் நல்லதாகத்தான் இருக்கும். போய்வா" என்ருள்.

# 13

பரமன் பட்டணம் செல்வதற்காகத் தயாரானுன். தன்னிடம் படிக்கும் சிறுபிள்ளைகளுக்குத் தான் வரும் வரை அவர்களுக்கு விடுமுறை என்று கூறினுன். அந்தச் சின்னப்பையன்களுக்கு விடுமுறை என்றதும் ஒரே கொண்டாட்டம்! பின்னே இருக்காதா? விடுமுறை நாளில் வீட்டில் தொந்தரவு செய்கிருர்கள் என்று சிறையில் அடைத்துவைத்திருப்பதைப்போல் 'ட்யூஷ' னுக்கு அனுப்பினுல் அவர்களுக்கு எப்படி இருக்கும்! எனவேதான் பரமன் அவர்களுக்குத் தான் வரும் வரை விடுமுறை என்று கூறியதும் விடுதலை கிடைத்த பறவைகள்போல் பறந்தோடிப் போனுர்கள்.

பரமனை வழியனுப்ப வாசு ஸ்டேஷனுக்கு வந்தி ருந்தான். அம்மாவுக்கு வீட்டில் நிறைய வேலைகள் இருந்ததால் செல்லவில்லை. ஆனுல் போகும்போது ஒன்று மட்டும் சொன்னுள்.

''பரமு, செலவு செய்துகொண்டு பட்டணத்திற் குப் போகவே போகிறே? இருந்து ஊரை நன்ருகச்

சுற்றிப் பார்த்துவிட்டு வா! அடிக்கடி போகக்கூடிய இடமா?'' என்று சொல்லியனுப்பினாள்.

வண்டி ஊதிவிட்டுப் புறப்பட்டது. வாசு பிளாட் பாரத்தில் நின்றபடி கையை ஆட்டிப் பரமனை வழி யனுப்பினான் பரமனும் ஜன்னல் வழியாகக் கையை ஆட்டியபடியே வாசுவிடமிருந்து விடைபெற்றான்.

'அவ்வளவு பெரிய ஊரில் ஸ்டேஷனைவிட்டு இறங்கியதும் எப்படி அவர்கள் வீட்டுக்குப் போகப் போகிறோம்?' என்று கவலைப்பட்டான், பரமன்.,

ஆனால், வண்டியிலிருந்து இறங்கிக் கொஞ்ச தூரம் சென்றதும் தங்கவேலு அவன் தோள்களில் கையை வைத்து, ''வந்துவிட்டாயா, பரமு!'' என்றார்.

அவரைப் பார்த்ததும், ''வணக்கம், அண்ணா'' என்று கைகூப்பினான், பரமன்.

தங்கவேலுவுடன் கந்தசாமியும் ஸ்டேஷனுக்கு வந்திருந்தான். 'அவன் பின்னால் பதுங்கிப் பதுங்கி வரும் சிறுவன் யார்? மோகனாயிருக்குமோ?' என்று பரமன் நினைத்துக்கொண்டிருக்கும்போதே, ''என்ன மோகன், சிநேகிதனுக்கு விழுந்து விழுந்து கடிதாசிகள் எழுதினை. இப்பொழுது நேரே வந்திருக் கும்போது பதுங்கிப் பதுங்கி ஒளிகிறாயே! வா முன்னால்'' என்றார் தங்கவேலு.

மோகன் மெதுவாக முன்னே வந்தான். அவனைப் பரமனுக்கு அறிமுகப்படுத்தினார் தங்கவேலு. அதற் குப்பிறகு மோகனிடம் இருந்த வெட்கம் எங்கேதான் பறந்து போயிற்றோ தெரியவில்லை. நெடுநாள் பழகிய நண்பர்களைப்போல இருவரும் கலகலவென்று சிரித்

றப் பேசியபடியே ஸ்டேஷனைவிட்டு வெளியே வந்தார்கள்.

தங்கவேலு தன்னை எதற்காக அவசரமாகப் புறப்பட்டு வரும்படியாகச் சொன்னார் என்று பட்டணத்திற்கு வந்து இரண்டு நாட்களாகியும் பரமனுக்குப் புரியவில்லை.

ஒரு விருந்தினனைப்போல வேளா வேளைக்குச் சாப்பிட்டுவிட்டு ஹைகோர்ட், மியூசியம், லைட்ஹவுஸ், கடற்கரை முதலிய இடங்களுக்கு மோகனுடனும் கந்தசாமியுடனும் சென்று உல்லாசமாகப் பொழுது போக்கி வந்தான், பரமன். இரண்டு நாட்கள் ஆனதும் அவனுடைய சந்தோஷமெல்லாம் பறந்து விட்டது. அன்பான வாசுவையும், அருமை அம்மாவையும் நினைத்துக்கொண்டான். 'அவர்கள் எப்படியிருக்கிறார்களோ? ஒருவேளை திரும்பவும் அந்தத் தாடிக்காரன் வந்து அம்மாவைப் பயமுறுத்துகிறானோ!' என்று கவலைப்பட்டான், பரமன்.

தன்னை அழைத்த காரணத்தை அவர்களாகச் சொல்லாவிட்டாலும் எப்படியும் தானே கேட்டு விட்டு ஊருக்குப் புறப்பட்டுவிடுவது என்று தீர்மானித்தான் பரமன்.

அன்று பெரம்பூரிலிருந்து மோகனுடைய அக்கா வந்திருந்தார்கள். இருட்டி விட்டதால் தனியாகத் திரும்பிச் செல்லப் பயப்பட்டார்கள். அம்மா, மோகனைத் துணைக்குச் செல்லுமாறு கூறினாள்.

மோகன் கந்தசாமியிடம், "கந்தசாமி நீயும் பரமுவும் கடற்கரையில் இருங்க. வழக்கமாக நாம் உட்காருவோமே, அந்த இடத்தில் உட்கார்ந்து இருங்கள். நான்

அக்காவைப் பெரம்பூரில் விட்டுவிட்டு நேரே கடற்கரைக்கு வந்துவிடுகிறேன்'' என்று சொல்லிச் சென்றான்.

பரமனும் கந்தசாமியும் கடற்கரைக்குச் சென்றனர். வழக்கமாக அவர்கள் உட்காரும் படகின் பின்புறம் உட்கார்ந்தனர். இருவரும் மனம்விட்டுப் பேசிக்கொண்டிருந்தனர்.

எலியும் பூனையும்போல், பாம்பும் கீரியும்போல் இருந்த அவர்கள் தேனும் பாலும்போல் பழகினார்கள். பேசிக்கொண்டேயிருந்த கந்தசாமி பரமுவின் கைகளைப் பற்றிக்கொண்டு, ''பரமு, உன் அண்ணு இறந்ததற்கு நான்தான் காரணம்'' என்று தழதழத்த குரலில் சொன்னான்.

பரமனுக்கு ஒன்றும் புரியவில்லை. கந்தசாமி கண்ணீர் விட்டபடியே தான் வெறிநாயின்மீது கல்லெறிந்தது, அது அவனைத் துரத்தி வந்தது, அவனைக் காப்பாற்றப்போன நல்லக்கண்ணு நாயினால் கடிக்கப்பட்டது வரை ஒன்றுவிடாமல் கூறினான்.

''அன்றையத் தினத்திலிருந்து என் மனசே சரியில்லை. கவண்வில்லையும் உடைத்து எறிந்து விட்டேன்'' என்றான், கந்தசாமி.

''வருத்தப்படாதே கந்தசாமி, என் அண்ணுவின் மரணம் உன் மனத்தை மாற்றிவிட்டதே என்று நான் ரொம்பவும் சந்தோஷப்படுகிறேன். யாராலும் உன்னைத் திருத்தமுடியாது என்று எல்லோரும் சொன்னார்கள். ஆனால், நீ திருந்திவிட்டாய். இது ஒன்றே போதும்'' என்றான் பரமன்.

அவர்களுடைய பேச்சுக் கவனத்தில் இருட்டிப் போவதைக் கூட அவர்கள் கவனிக்கவில்லை. இரவு ஏழுமணி ஆகிவிட்டதால் ஒருவர் முகம் ஒருவருக்குத் தெளிவாகத் தெரியவில்லை. ஏனென்றால் அவர்கள் உட்கார்ந்திருந்த இடம் அப்படிப்பட்டது. விளக்கு கள் அதிகம் இல்லாத ஒதுக்குப்புறம். அங்கே அதிகமாக யாரும் உட்காரமாட்டார்கள். கந்தசாமிக்கு 'பெரம்பூருக்குப்போன மோகன் இன்னும் வர வில்லையே!' என்று நெஞ்சு திக்திக் கென்று அடித்துக் கொண்டது. அப்போது தூரத்தில் யாரோ இருவர் அவர்கள் உட்கார்ந்திருந்த படகின் மறுபுறம் வந்து உட்கார்ந்தார்கள். அவர்கள் நெருங்கிவரும்போது அவர்களை நன்ருகப் பார்த்துவிட்டான், கந்தசாமி. அவனுக்குத் தூக்கிவாரிப்போட்டது!

ஏனென்ருல் அவன் அப்பாவுடன் சுற்றிக்கொண்டி ருந்த அதே தாடிக்காரர்கள்தான் அவன் என்பதை அந்த இருட்டிலும் கந்தசாமி நன்ருகக் கண்டு கொண் டான். நல்லவேளையாக அந்தத் தாடிக்காரன் கந்த சாமியையும் பரமனையும் கவனிக்கவில்லை.

கந்தசாமி திடீரென்று பரமனைப் பேசவேண்டா மென்று சைகைகாட்டி எச்சரித்தான்.

பின்புறமிருந்த தாடிக்காரனும் அந்த மனிதனும் பேச ஆரம்பித்தார்கள்.

"முருகேசா, உன்னுல்தான் இந்த உதவி ஆக வேண்டும். நான் அடுத்த திங்கட்கிழமை அந்த ஆசாமியைக் கூட்டிவருவேன். நீ அசல் இமயமலைச் சாமியார் மாதிரியே ஆகிவிட வேண்டும். வருகிறவர் என்ன கேட்டாலும் நீ பதிலே சொல்லக்கூடாது. மீதி

எல்லாம் நான் பார்த்துக்கொள்கிறேன்'' என்ருன், தாடிக்காரன்.

''அது சரி, அண்ணே! இதனுல் எனக்கு ஏதாவது லாபம் கிடைக்குமா? நீ பாட்டுக்குப் பணம் கைக்கு வந்ததும் ஆளே அந்தர்த்தியானமாகிவிடுவாய்'' என்ருன்.

''உனக்கு இல்லாமலா? எனக்குக் கிடைப்பதில் நிச்சயம் உனக்கும் பங்கு உண்டு'' என்ருன், தாடிக்காரன்.

''அதுசரி, முன்னேகூட அப்படித்தான் எவனே ஒருத்தனிடம், என்னை அவன் கொலைபண்ணி விட்டதாக அவன் கைப்பட எழுதி வாங்கிக்கொண்டு, அவன் பெண்டாட்டியிடம் அந்தக் கடிதத்தைக் காட்டி மிரட்டிப் பணம் வாங்கிக் கொண்டு வந்தாய். அதில் எனக்கு ஏதாவது கொடுத்தாயா?'' என்று சலிப்புடன் கூறினுன் அவன்.

''கோவிச்சுக்காதே, முருகேசா! முதல் தடவை மிரட்டிப் பணம் வாங்கினதற்குப் பிறகு அந்த அம்மாளைப் பார்க்கவே இல்லை. இப்பத்தான் அவங்க இருக்கிற இடத்தைக் கண்டுபிடிச்சேன். அங்கே ஒரு பையன் இருந்துகொண்டு பணம் கொடுக்கிறவர்களைக் கூடத் தடுக்கிருன். அவனைப் பிறகு பார்த்துக்கொள்வோம். இப்போது நான சொல்கிற ஆள் பெரிய பணக்காரர். கிளியனூரில் பெரிய மளிகைக்கடை வைத்திருக்கிருர். எப்படியோ நம் வலையில் சிக்க வைத்துவிட்டேன். அடுத்த திங்கட்கிழமை அவரைப் பணத்துடன கூட்டி வருகிறேன். நீ அசல் இமயமலைச் சாமியார் மாதிரியே இருக்க வேண்டும்'' என்ருன், தாடிக்காரன்.

பிறகு என்னென்னவோ அவர்கள் பேசிக்கொண்டிருந்தார்கள். அதெல்லாம் கந்தசாமிக்கும், பரமனுக்கும் புரியவில்லை. அவர்களுடைய பேச்சிலிருந்து அவர்களுக்கு மிகத் தெரிந்தவர்களுக்குத் தாடிக்காரனுல் ஆபத்து நேர இருக்கிறது என்பதை மட்டும் தெளிவாகப் புரிந்து கொண்டார்கள். கந்தசாமியின் அப்பாவைக் கவிழ்க்க ஏதோ சதி நடக்கிறது. வருகிற திட்கட்கிழமை அவர் பணத்தைத் தாடிக்காரனிடம் கோட்டை விட்டுவிட்டு வரப்போகிருர் என்ற செய்தியை அறிந்த இருவருடைய மனமும் 'படக் படக்' கென்று அடித்துக்கொண்டன.

கொஞ்சநேரம் கழித்து தாடிக்காரனும் அவன் நண்பனும் எழுந்து சென்ருர்கள். அவர்கள் போன பிறகுதான் கந்தசாமிக்கும், பரமனுக்கும் மூச்சு வந்தது.

"பரமு, தாடிக்காரன் அப்பாவைக் கவிழ்க்க என்னவோ சதி செய்கிருனே, என்னடா செய்வது?" என்று பதறியபடியே கூறிஞன் கந்தசாமி.

"கவலைப்படாதே, வருகிற திங்கட்கிழமை வருவதற்கு இன்னும் நான்கு நாட்கள் இருக்கின்றன. அன்றையத்தினம் பார்த்துக்கொள்வோம்" என்று கந்தசாமிக்கு ஆறுதல் கூறிஞனே தவிர, அவன் மனம் வேறு ஏதோ சிந்தனையில் ஆழ்ந்திருந்தது. அன்றையத்தினம் வாசுவின் அம்மாவை மிரட்டும் போது வாசுவின் அப்பா யாரையோ கொலை செய்து விட்டதைப்போலக் கூறிப் பயமுறுத்திஞன். இப்பொழுது அவன் பேசிக்கொண்டிருந்ததிலிருந்து கொலை செய்யப்பட்டவன் உயிரோடு இருப்பதையும்,

அவனுடன்தான் தாடிக்காரன் பேசிக்கொண்டிருந்ததை யும் அறிந்து குழம்பிப்போனுன்.

'அப்படியானுல் வாசுவின் அப்பா எப்படிக் கொலைகாரராக முடியும்? அதனுல்தான் தாடிக்காரன் போலீசுக்கும் போகாமல் சும்மா மிரட்டிப் பணம் பறிக் கிருனே?' என்று நினைத்தான், பரமன்.

அப்பொழுது மோகன், "பரமு, கந்தசாமி, இருக் கீங்களா? எங்கே போயிட்டீங்களோன்னு நெனைச் சேன்" என்று கூறியவாறே அவர்கள் பக்கத்தில் வந்து உட்கார்ந்தான்.

மோகனைப் பார்த்ததும் தாடிக்காரனும் அவன் சிநேகிதனும் பேசிக்கொணடிருந்த சங்கதியைக் 'கடகட' வென்று சொல்லிவிடத் துடித்தான், கந்த சாமி. ஆனுல், திடீரென்று 'பரமனே சொல்லட்டும், நாம் ஏன் அவசரப்பட வேண்டும்?' என்று அடக்கிக் கொண்டான்.

"போன இடத்திலே பஸ் கிடைக்காமல் ரொம்பத் தாமதமாகி விட்டது," என்று சொனன மோகன், "நேரமாகிவிட்டதே. வீட்டுக்குப் போகலாமா, பரமு?" என்ருன்.

ஏதோ சிந்தனையில் இருந்த பரமன், "ஓ, போக லாமே?" என்று எழுந்தான்.

போகிறவழியில், "என்ன பரமு, பேசவே மாட்டேனென்கிருயே! என்ன யோசனை?" என்ருன், மோகன்.

"ஒன்றுமில்லை, மோகன்! நாளைக்கே நான் ஊருக்குப் போகலாமென்று நினைக்கிறேன். உடனே

என்னைப் புறப்பட்டுவரச் சொன்ன அண்ணு எதற்காக என்னை வரச்சொன்ஞர் என்று இதுவரை ஒன்றுமே சொல்லவில்லை'' என்ருன், பரமன்.

''ஓ, உன்னிடம் சொல்லவேயில்லையா? வேறு ஒன்றும் இல்லை. இந்த விடுமுறையில் நீயும் எங்களுடன் சந்தோஷமாக இருக்கவேண்டும் என்று நான்தான் உன்னையும் வரவழைக்கச் சொல்லி அண்ணுவிடம் சொன்னேன்'' என்ருன், மோகன்.

''அட கடவுளே, இதற்குத்தாஞ தந்தி மணியார்டர் அனுப்பி என்னை உடனே வரச்சொன்னீர்கள். நான் என்னவோ ஏதோ என்று நினைத்துப் பதறிப்போய் அல்லவா வந்தேன்'' என்ருன் பரமன்.

''அப்படி செய்யாமல் வெறுங் கடிதம் எழுதிப் போட்டிருந்தால் நீ வந்திருப்பாயா? அதற்காகத்தான் அண்ணு அந்தமாதிரி செய்நார்'' என்ருன், பரமன்.

''இருந்தாலும் மோகன், நான் இப்பொழுது இங்கே அதிக நாட்கள் தங்கியிருக்க முடியாது. உடனே ஊருக்குப் போயாகவேண்டும்'' என்ருன், பரமன்.

அப்பொழுது கந்தசாமி, ''நானும் பரமனுடன் ஊருக்குப் புறப்படுகிறேன், மோகன்'' என்ருன்.

பரமன் 'ஊருக்குப் போகிறேன்' என்று சொன்னதுமே உற்சாக மிழந்த மோகன், கந்தசாமி தானும் பரமனுடன் செல்லப்போவதாகக் கூறியது பெரிய அதிர்ச்சியைத் தந்தது.

'இருவரும் பேசிக்கொண்டு சொல்கிருர்களா? இவர்களுக்கு என்ன குறை? நம் வீட்டில் இருக்கும்

எல்லோரும் இவர்களிடம் அன்பாகத்தானே இருக்கிருர்கள். அப்படியிருக்க வந்து முழுசாக நான்கு நாட்கள் ஆவதற்குள் ஊருக்குப் போகவேண்டுமென்று இப்படித் துடிக்கிருர்களே இவர்கள், ஏன்?' என்று குழம்பிப் போனுன் மோகன்.

"நீங்க கட்டாயம் போய்த்தான் ஆகவேண்டுமா?" என்று தழதழத்த குரலில் கேட்டான், மோகன்.

"ஆமாம்...மோகன்! எங்க ரெண்டுபேருக்கும் ஊரில் ஒரு முக்கியமான காரியம் இருக்கிறது. நாங்கள் அவசியம் ஊருக்குப் போய்த்தான் ஆகவேண்டும். அடுத்த விடுமுறை பூராவும் ஒருநாள் பாக்கிவிடாமல் உன்னுடன் உல்லாசமாகக் கழிப்போம். இப்பொழுது தடைசொல்லாதே!" என்ருன், பரமன்.

"ஒரே சமயத்தில் இரண்டு பேருக்கும் ஊரில் அப்படி என்ன முக்கியமான காரியம்?" என்ருன் மோகன்.

"ஆமாம், முக்கியமான காரியம்தான். வீட்டுக்குப் போனதும் விவரமாகச் சொல்கிறேன். ஆனுல், நான் சொல்லப்போவதை நீ யாரிடமும் சொல்லக்கூடாது" என்ருன், பரமன்.

"சரி" என்ற மோகன் அது என்ன அப்படிப்பட்ட ரகசியமான செய்தி என்று அறிய ஆவலாகத் துடித்தான். வேகமாக நடக்கலானுன்.

வீட்டை அடைந்ததும் மோகன் வெளிக் கதவைத் திறந்துகொண்டு தோட்டத்திற்குள் நுழைந்தான். பரமனும் கந்தசாமியும் அவனைப் பின்தொடர்ந்து சென்ருர்கள். அங்கே மரத்தடியில் இருந்த சிமெண்டு

பெஞ்சுகளின் மீது மூவரும் உட்கார்ந்தார்கள். எல்லோரும் வீட்டுக்குள் இருந்ததால் அவர்கள் வந்தது வீட்டிலிருந்தவர்களுக்குத் தெரியாது.

பரமன் பெஞ்சின்மீது உட்கார்ந்ததும், மாலை கடற்கரையில் நிகழ்ந்த சம்பவத்தை ஒன்றுவிடாமல் மோகனிடம் கூறினான்.

"கந்தசாமியின் அப்பாவை ஏமாற்றித் தாடிக்காரன் பணம் பறிக்கப்போகிறான். கூடுமானவரை அது நடக்கமுடியாதபடி தடுக்கவேண்டும். அதற்காகத் தான் உடனடியாக ஊருக்குப் போகவேண்டும் என்று சொல்லுகிறோம்" என்றான், பரமன்.

பரமன் சொன்ன செய்திகளைக்கேட்டதும் மோகன் அப்படியே திகைத்துப்போய்விட்டான். என்ன சொல்வதென்றே தெரியவில்லை.

கந்தசாமியின் அப்பாவைத் தாடிக்காரனிடம் ஏமாற முடியாதபடி எப்படித் தப்புவிக்கலாம் என்று மூவரும் ஆலோசனை செய்தார்கள். அப்பொழுது திறந்திருந்த வாசல்வழியாக ஓர் உருவம் பதுங்கிப் பதுங்கி வந்து அவர்கள் உட்கார்ந்திருந்த பெஞ்சுக்கு அருகில் உள்ள மரத்தடியில் பதுங்கிக்கொண்டது.

"எனக்கு ஒன்றுமே புரியவில்லையே! ஊருக்குப் போய் கந்தசாமியின அப்பா தாடிக்காரனிடம் ஏமாறுமல் இருக்க என்ன செய்வீர்கள்?" என்றான் மோகன்.

"ஊருக்குப்போனதும் நானும் கந்தசாமியும் அவரிடம் பூரா விஷயத்தையும் சொல்வோம். அத்துடன் அவருக்கு ஒன்றுமே தெரியாதது போல் தாடிக்காரன்

சொல்வதற்கெல்லாம் தலையாட்டுமாறு சொல்வோம்'' என்றான், பரமன்.

''அப்படியானால் அந்த மோசக்காரனுக்கு ரொம்பவும் சௌகரியமாகப் போய்விட்டது. சுலபமாகப் பணத்தைப் பறித்துக்கொண்டு அவரை அனுப்பி விடுவான்'' என்றான், மோகன்.

''அதுதானே நடக்காது. அதற்கு முன்னர் நாங்கள் போலீசுக்குத் தகவல் தெரிவித்து தாடிக்காரனைக் கையும் களவுமாகப் பிடித்துவிட மாட்டோமா?'' என்றான், பரமன்.

''இவ்வளவு வம்பு நமக்கு ஏன்? பேசாமல் தாடிக் காரன் வந்தால் அவனுடன் வரமுடியாது என்று கந்த சாமியின் அப்பா சொல்லிவிட்டால் ஒரு தொந்தரவும் இல்லையே!'' என்றான் மோகன்.

''இல்லை ... அதில்தான் தொந்தரவு இருக்கிறது. இவ்வளவு நாட்கள் அவன் சொன்னதற்கெல்லாம் தலையாட்டிக்கொண்டு, அவன் கூப்பிட்ட இடத்துக் கெல்லாம் சென்றுகொண்டிருந்தவர் திடீரென்று 'வரமுடியாது' என்று சொன்னால் அவன் சந்தேகப்படு வான். அதுவும் அல்லாமல் அவனைக் கைது செய்வ தால் இன்னொரு நன்மையும் இருக்கிறது'' என்றான், பரமன்.

''அது என்ன?'' என்று ஆச்சரியத்துடன் கேட் டான் மோகன்.

''என்னுடன் இருக்கிறானே வாசு, அவன் அப்பா வின் பேரில் அநியாயமாக ஒரு கொலைக் குற்றம் சுமத்தி, அவர் கைப்பட ஒரு கடிதம் எழுதி வாங்கிக் கொண்டு வாசுவின் அம்மாவை அந்தத் தாடிக்காரன்

அடிக்கடி மிரட்டி வருகிறுன். அதற்கு ஒரு முற்றுப் புள்ளி வைத்ததுபோல் இருக்கும்'' என்றுன், பரமன்.

''நீ சொல்வது கதைகளில் நடப்பதைப்போல் இருக்கிறதே!'' என்றுன் மோகன்.

சற்றுநேரம் அவர்களிடையே மௌனம் குடி கொண்டிருந்தது. எந்த விஷயங்கள் பிறருக்குத் தெரியக்கூடாது என்று மிக மிக ரகசியமாக மூவரும் பேசிக்கொண்டிருந்தார்களோ, அந்த விஷயங்களை மரத்தடியில் பதுங்கிக்கொண்டிருந்தவன் மிகத் தெளிவாகக் கேட்டுக் கொண்டிருந்ததைப் பாவம், அவர்கள் அறியமாட்டார்கள்.

''ஏன் பரமு, கந்தசாமிகூட அடிக்கடி வாசுவைப் பற்றிச் சொல்லியிருக்கிறுன். ஆமாம். அவன் அப்பா எங்கே யிருக்கிறுர் என்று தெரியவில்லையா?'' என்றுன், மோகன்.

''தெரியவில்லையே! அவர் பாவம் கொலைக்குற்றத் துக்குப் பயந்துகொண்டு தலைமறைவாக இருக்கிறுர். ஆனுல், அவர் யாரைக் கொலை செய்ததாக நினைத்துக் கொண்டிருக்கிறுரோ, அந்த ஆசாமியை இன்று கடற் கரையில் உயிருடன் பார்த்தோம்'' என்றுன், பரமன்.

அதே நேரத்தில் மரத்தின் பின்னுல் பதுங்கியிருந் தவன், ''அவன் உயிரோடு இருக்கிறுனு? உனக்கு எப்படித் தெரியும்?'' என்று ஆவேசத்துடன் கேட்டுக் கொண்டே முன்னுல் வந்தான்.

அவன் தோற்றத்தையும் அவனுடைய ஆவேசத் தையும் கண்ட மோகன், ''திருடன், திருடன்!'' என்று கத்திஞன்.

# 14

**மோ**கனின் கூச்சலைக் கேட்டு வீட்டுக்குள்ளே இருந்த எல்லோரும் பதறி அடித்துக்கொண்டு ஓடி வந்தார்கள். ஆனால், திருடன் மட்டும் ஓடவில்லை.

அவன் தங்கவேலுவைப் பார்த்து, "ஐயா, நான் திருடன் இல்லை; கொலைகாரன் இல்லை. ஆனாலும் திருடனைப்போல — கொலைகாரனைப்போலப் போலீசுக்குப் பயந்து பயந்து செத்துக்கொண்டிருக்கிறேன். கொஞ்சநேரத்திற்கு முன்னால்கூட இந்த வழியாக வந்த ஒரு போலீஸ்காரனைப் பார்த்துப் பயந்துதான் இங்கே பதுங்கிக்கொண்டேன். இந்தத் தம்பிகள் பேசிக்கொண்டிருந்த விஷயம் என்னைப்பற்றி இருந்த 'தால்தான் இப்படி நடந்துகொண்டேன்" என்றான்.

தங்கவேலு அந்த மனிதரை உள்ளே அழைத்துச் சென்றார். அவர் வாய்மூலமாகப் பூரா விவரமும் அறிந்தார். பரமன் சொன்ன சங்கதிகள் அனைத்தும் அவர் சொன்னதற்குப் பொருத்தமா யிருந்தது. அதிலி

ருந்து அவர்தான் வாசுவின் அப்பா என்பதை அனை வரும் தெளிவாகத் தெரிந்து கொண்டு அவருடைய நிலைக்காக அனைவரும் பரிதாபப்பட்டனர்.

அடுத்தநாள் பரமன், கந்தசாமி, வாசுவின் அப்பா ஆகிய மூவரையும் தங்கவேலுவும், அவன் குடும்பத்தினரும் வண்டியேற்றி வழியனுப்பிவிட்டு வந்தனர்.

"பரமுவும் கந்தசாமியும் விடுமுறைக்கு இங்கே வரும்போது குடும்பத்துடன் நீங்களும் கட்டாயம் வர வேண்டும்" என்று வாசுவின் அப்பாவிடம், புறப் படும்போது சொன்னார் தங்கவேலு. அதற்கு அவரும் "ஆகட்டும்" என்று சொல்லிக் கண்களில் நீர் வழிய அவர்களிடம் விடைபெற்றார்.

அப்பா திரும்பி வந்து விட்டதை அறிந்து வாசுவும் வாசுவின் அம்மாவும் மிகவும் சந்தோஷப் பட்டார்கள்.

பரமன் கந்தசாமியுடன் சென்று அவன் அப்பா வைத் தனியாகக் கூப்பிட்டு, கடற்கரையில் நடந்த சம்பவங்கள் அனைத்தையும் கூறினான்.

கந்தசாமியின் அப்பாவும் பரமனின் யோசனைப் படி நடக்க ஒப்புக்கொண்டார்.

திங்கட்கிழமை வந்தது.

தாடிக்காரன் கந்தசாமியின் அப்பாவிடம் வந்தான்.

"முன்னே போய் ஒருவாரமாக அவருக்காக எங்கெங்கேயோ அலைந்தீர்களே, இப்பொழுது அவர் இருக்கிற இடத்தைக் கண்டுபிடித்துவிட்டேன். நீங்கள்

பணத்துடன் வந்தால் அவரைப் பார்த்துக் காரியத்தை முடித்துக் கொள்ளலாம்'' என்ருன் தாடிக்காரன்.

கந்தசாமியின் அப்பாவும் ஐயாயிர ருபாய் பணத்தை எடுதுக் கொண்டு தாடிக்காரனுடன் புறப் பட்டார். அவர்களை அறியாமல் போலீஸ்காரர்களும் மாற்று உடையில் பின்தொடர்ந்து கொண்டிருந் தார்கள்.

தாடிக்காரன் மங்காபுரத்தை அடுத்து சிறு கிராமம் ஒன்றிற்குக் கந்தசாமியின அப்பாவைக் கூட்டிச் சென்ருன். அங்கே ஊர்க்கோடியிலுள்ள ஒரு குடிசைக் குள் அவரைக் கூட்டிச் சென்ருன்.

அவர் பயத்துடன்தான் அவனுடன் குடிசைக்குள் நுழைந்தார். 'ஆபத்துக்குக் கூச்சல் போட்டாலும் ஒருவர் காதிலும் விழாதே! இங்கே வந்து அகப்பட்டுக் கொண்டோமே' என்று கவலைப்பட்ட அவர் சிறிது நேரத்திற்குள், 'போலீஸ்காரர்கள் நம்மைத் தொடர்ந்து வந்திருக்கும்போது நாம் ஏன் கவலைப்பட வேண்டும்?' என்று ஆறுதல் அடைந்தார்.

குடிசைக்குள் முருகேசன் சடாமுடி தரித்த சாமியார் வேஷத்தில் இருந்தான். ஏற்கெனவே நோயாளியான அவன் தோற்றத்திற்கு சாமியார் வேஷம் மிகவும் பொருந்தியிருந்தது.

''ஸ்வாமி, தங்களிடம் இவர் செம்பைத் தங்க மாக்கும் ரகசியத்தை அறிய வந்திருக்கிருர். தயவு செய்து கூறவேண்டும்'' என்று பணிவாகக் கூறிஞன் தாடிக்காரன்.

முருகேசன் வாயே திறக்கவில்லை.

''ஸ்வாமி, தாங்கள் கட்டப்போகும் ஆசிரமத்திற்கு இவர் ஐயாயிர ரூபாய் நன்கொடை தர இருக்கிறார். பெற்றுக்கொண்டு அந்த ரகசியத்தை இவருக்குச் சொல்லவேண்டும்'' என்றான் தாடிக்காரன்.

திடீரென்று கந்தசாமியின் அப்பா, ''ஏன் ஐயா, உங்க குருநாதருக்குச் செம்பைத் தங்கமாக்கும் வித்தைதான் தெரிந்திருக்கிறதே! அப்படியிருக்க இவர் ஏன் ஆசிரமம் கட்டப் பணத்திற்கு அலைய வேண்டும்?'' என்று தாடிக்காரனைப் பார்த்துக் கேட்டார்.

''நியாயமான கேள்விதான் கேட்டீர்கள். தங்கக் கட்டிகளைச் சாமியார்களான நாங்கள் எடுத்துச்சென்று விற்றால் சந்தேகப்படுவார்கள். அதனால்தான் செம்பைத் தங்கமாக்கும் ரஸவாத வித்தை தெரிந்திருந்தும் எங்கள் குருநாதர் பணத்திற்காகக் கஷ்டப்படுகிறார்'' என்றான், தாடிக்காரன்.

''சரி...முதலில் செம்பைத் தங்கமாக்கும் வித்தையைச் செய்து காட்டச் சொல். பிறகு பணம் தருகிறேன்'' என்றார் கந்தசாமியின் அப்பா.

இத்தனைநேரமாகச் சாமியார் பாஷையில் பேசிக்கொண்டிருந்த தாடிக்காரன் மடியிலிருந்த கத்தியை உருவி, ''மரியாதையாகப் பணத்தைக் கொடு. தகராறு செய்கிறாய்?'' என்று சொல்லியபடியே அவர் மடியிலிருந்த நோட்டுக்கட்டை உருவினான்.

அப்பொழுது வெளியேயிருந்து தடதடவென்று நாலைந்து போலீஸ்காரர்கள் துப்பாக்கிசகிதம் உள்ளே நுழைந்தார்கள்.

பிறகு தாடிக்காரனும் முருகேசனும் கைதுசெய்யப் பட்டார்கள். அவர்களுடைய வேஷம் கலைக்கப்பட்ட பிறகு இருவரும் தேடப்பட்டு வந்த பழைய குற்ற வாளிகள் என்று போலீஸ் ரிகார்டிலிருந்து தெரிய வந்தது.

போலீஸ் ஸ்டேஷனில் வாசுவின் அப்பா வந்து தாடிக்காரனையும் முருகேசனையும் அடையாளம் காட்டி விட்டு, "இறந்துவிட்டதாகத் தான் நினைத்திருக்கும் முருகேசன் எப்படி உயிர்பிழைத்தான்?" என்று தம் சந்தேகத்தையும் எடுத்துரைத்தார்.

இதற்குத் தாடிக்காரனே விளக்கம் சொன்னான்:

"முருகேசன் வயிற்றுநோய்க்காரன். வயிற்று வலியால் சதா துடிப்பான். வலியை மறப்பதற்காக அப்பொழுதுதான் தூக்கமாத்திரை சாப்பிட்டான். அந்தச் சமயத்தில் இவர் அவன்பேரில் சந்தேகப்பட்டு அடித்தார். உடனே முருகேசன் கண்களைச் செருகிக் கொண்டு கட்டையைப்போல் விழுந்தான். நான்கூட முதலில் அவன் செத்துப்போய்விட்டானோ என்றுதான் சந்தேகப்பட்டேன். இவரும் அவன் செத்துவிட்ட தாகப் பயந்தார். அவருடைய பயத்தைப் பயன்படுத் திக்கொண்டேன்" என்றான் தாடிக்காரன்.

'அட கடவுளே! 'காக்கை உட்காரப் பனம்பழம் விழுந்தது' என்ற கதையாக அவன் தூக்கமாத்திரை சாப்பிட்டுத் தூங்கிவிழும் நேரத்தில் நான் அடித்து விட்டு அவன் செத்துவிட்டதாக நினைத்துப் பயந் தேனே! அந்தப் பயத்தில் அவன் மூக்கில் கைவைத்து மூச்சு வருகிறதா என்று பார்க்கக்கூடத் தோன்ற வில்லையே' என்று நினைத்தார், வாசுவின் அப்பா.

வாசுவின் அப்பா பயந்துகொண்டிருந்த ஒரு விஷயம் தீர்ந்து போய்விட்டது. 'தாம் கொலைகாரர் அல்ல' என்று நினைத்து மகிழ்ந்தார். அதேநேரத்தில் கம்பெனி வசூல் பணத்தைக் களவுபோகும்படியாகக் கோட்டைவிட்டது மாபெரும் தவறே என்று உணர்ந்தார்.

"எப்பாடுபட்டாவது அந்தப் பணத்தைக் கம்பெனியில் கட்டிவிட வேண்டும். ஓடிப்போய்விட்டதால் கம்பெனியில் நான்தான் எடுத்துக்கொண்டு ஓடிப்போய் விட்டதாக நினைப்பார்கள்" என்று அம்மாவிடம் சொன்னார்.

"உண்மைதான். நான் சிறுகச் சிறுக ஆயிரத்தி முன்னூறு ரூபாய் தபாலாபீஸில் சேர்த்து வைத்திருக்கிறேன். அதைக் கம்பெனியில் கட்டிவிட்டு மீதித் தொகையை மாதாமாதம் கொஞ்சம் கொஞ்சமாகக் கட்டிவிடுவதாகக் கூறுங்கள்" என்றாள் அம்மா.

அம்மா சொன்னவாறு பணத்துடன் சென்ற வாசுவின் அப்பாவிற்குக் கம்பெனியில் மாபெரும் ஆச்சரியம் காத்திருந்தது. அவர் வசூல் செய்த இடத்திலேயே நோட்டுக் கட்டுகளை மறந்து வைத்துவிட்டு வந்துவிட்டார். அவர் போனபிறகு அதைப் பார்த்த வாடிக்கையாளர் அவரிடம் பணத்தைக் கொடுத்து விடுவதற்காக அவரை எங்கெங்கோ தேடிப்பார்த்தார். அவர் கிடைக்கவில்லை. உடனே பணத்தை நேரே கம்பெனிக்கு அனுப்பி விஷயத்தையும் தெளிவாக எழுதிவிட்டார் என்கிற சங்கதியைக் கேட்டு வாசுவின் அப்பா மிகமிகச் சந்தோஷப்பட்டார்.

'அவசரப்பட்டு கோழையைப்போல் ஓடி எவ்வளவு காலம் கஷ்டப்பட்டோம்? தவறு செய்யாதபோது

எவ்வளவு கஷ்டங்கள் வந்தாலும் உண்மைக்காகப் போராட வேண்டும். அதைவிட்டுக் கோழைபோல் ஓடிய எனக்கு இந்தத் தண்டனை வேண்டியதுதான்' என்று தமக்குத்தாமே ஆறுதல் சொல்லிக்கொண்டார்.

அவர் ஆரம்பத்தில் ஓடிப்போகாமல் விஷயத்தைத் தெளிவாக முதலாளியிடம் எடுத்துச் சொல்லியிருந்தால், மறுபடியும் அவருக்கு வேலை கொடுத்திருப்பார்கள். அவர் கம்பெனிக்குத் தெரிவிக்காமல் ஓடிப்போய் விட்ட குற்றத்தினால் அவருக்கு மீண்டும் வேலை கிடைக்கவில்லை.

பரமனின் யோசனைப்படி அம்மா சேர்த்துவைத்திருந்த பணத்தைக் கொண்டு வாசுவின் அப்பா பள்ளிக்கூடத்தின் எதிரே சிறுகடை ஒன்றை ஆரம்பித்தார்.

அந்தக் கடையில் மாணவர்களுக்குத் தேவையான புத்தகங்கள், நோட்டுப் புத்தகங்கள், பென்சில் முதலியவைகளை வாங்கி வைத்து வியாபாரம் செய்யலானார், வாசுவின் அப்பா. வியாபாரம் நன்ருகப் பிடித்துக் கொண்டது.

இப்பொழுது அம்மா முன்போல் பலகாரம் செய்து விற்பதில்லை. பரமனையும் சிறுபிள்ளைகளுடன் மாரடிக்கும் டியூஷன் உத்தியோகத்தை விட்டுவிடுமாறு வாசுவின் அப்பா எவ்வளவோ கூறினார்.

பரமன் கடைசிவரை ஒரே பிடிவாதமாக மறுத்து விட்டான். சிறுபிள்ளைகளுடன் பழகுவது தனக்கு இன்பமாக இருக்கிறது என்றும், அவர்களுக்குப் பாடம் சொல்லிக்கொடுப்பது தனக்கு மகிழ்ச்சியாக இருக்கிறதென்றும், அதனால் அந்தத் தொழிலை விட முடியாது என்றும் கண்டிப்பாகக் கூறிவிட்டான்.

முழுவருடப் பரீட்சையெல்லாம் முடிந்து முடிவும் சொல்லிவிட்டார்கள். அப்பப்பா! என்ன ஆச்சரியம்! அந்தப் பள்ளிக்கூடத்தில் இதற்குமுன் இப்படித் தேறியவர்களின் தொகை இருந்ததில்லை. கிட்டத்தட்ட



எல்லா வகுப்புக்களிலும் எல்லா மாணவர்களும் பரீட்சையில் தேறிவிட்டார்கள். தோல்வியடைந்தவர் மிக மிகச் சிலரே!

பரீட்சையில் வெற்றிபெற்ற மாணவர் தொகை பெருகியதற்குக் காரணம் தலைமையாசிரியர் கூறிய பரிசுத் திட்டம்தான்.

பரிசளிப்பு விழாவுக்கு மாணவர்களும் பெற்றோர் களும் வந்திருந்தார்கள். தலைமையாசிரியர் வகுப்பு வாரியாக அதிக மார்க் வாங்கியுள்ள மிக நல்ல மாண வனின் பெயரைப் படித்து வந்தார்.

எட்டாம் வகுப்பு மாணவன் பெயர் வரும்போது, எல்லோரும் பரமனுக்குத் தங்கமுடி போட்ட பேனு பரிசு கிடைக்கும் என்று நினைத்தார்கள். ஆனல், தலைமையாசிரியர், "கே. கந்தசாமி—எட்டாம் வகுப்பு" என்ருர். எல்லோருக்கும் ஆச்சரியமாக இருந்தது. ஆனலும், கந்தசாமி பரிசுபெறுவதைக் கண்டு எவரும் மனம் வருந்தவில்லை. மாருக மகிழ்ச்சியே அடைந்தார் கள். இப்பொழுது அவன் அவ்வளவு நல்ல மாணவனு கவும் படிப்பில் கெட்டிக்காரனுகவும் இருந்தான்.

பரமனுக்குப் பரிசு கிடைக்காததின் காரணம், அவ னுடைய மார்க்குகள் குறைவாயிருந்ததுதான். தினம் இரண்டு வேளைகளும் பிள்ளைகளுக்குப் பாடம்சொல்லிக் கொடுத்துவிட்டு அதன் பிறகு அவனுடைய பாடங் களைப் படிக்க அவனுக்குப் போதிய நேரமில்லை. எனவேதான், பரீட்சையில் மிக அதிக மார்க்குகள் வாங்காவிட்டாலும் ஒவ்வொரு பாடத்திலும் அறு பதுக்குக் குறையாமல் வாங்கியிருந்தான்.

பரிசுகொடுத்த தலைமையாசிரியர், "மாணவர் களே, கல்வியில்லாதவர்களைக் குருடர்கள் என்று சொல்லுவார்கள். ஆனல், எனக்குத் தெரிந்தது என்ன வென்ருல் நிற்றந்த கல்வி ஒரு கண்; நல்ல குணம்

ஒரு கண். மாணவர்கள் இந்த இரண்டு கண்களையும் நன்ருகப் போற்றிக் காக்க வேண்டும்'' என்ருர்.

தலைமையாசிரியர் நிறைந்த கல்வியையும் நல்ல குணத்தையும் இரண்டு கண்களுக்கு ஒப்பிட்டுப் பேசிக் கொண்டிருக்கும்போது, வாசுவின் அப்பாவும் அம்மா வும், 'பரமனும் வாசுவும் நம்முடைய இரண்டு கண் கள். அவர்களுக்கு எந்தவிதக் குறையும் இல்லாமல் வளர்க்கவேண்டும்' என்று தீர்மானித்துக்கொண் டார்கள்.





# ‘தமிழ் உறவு’ நூல்கள்

## இலக்கியம், ஆராய்ச்சி நூல்கள்

கற்பக மலர்—*கி. வா. ஜகந்நாதன்* 2-50

கம்பன் மலர்—*18 பேரறிஞர்களின் கட்டுரைத் தொகுப்பு* 3-00

மானுடம் வென்றது—*அ. மு. பரமசிவானந்தம்* 3-00

கம்பன் கவியமுதம்—*17 அறிஞரின் கட்டுரைத் தொகுப்பு* 3-00

தமிழ் நாவலின் தோற்றமும் வளர்ச்சியும்
—*கி. வா. ஜகந்நாதன்* 4-00

பத்தொன்பதாம் நூற்றாண்டின் தமிழ் உரைநடை வளர்ச்சி
—*அ. மு. பரமசிவானந்தம்* 4-00

திருக்குறள் கனிகள் *(தொகுப்பு நூல்)* 5-00

## நாவல்கள்

கீதம் இனிய குயிலே—*டி. என். சுகிசுப்பிரமணியன்* 4–00

தரங்கிணி—*நாரண துரைக்கண்ணன் (ஜீவா)* 3–00

அருளின் ஒளி—*லட்சுமி சுப்பிரமணியம்* 2-00

அமுதமாகி வருக—*ராஜம் கிருஷ்ணன்* 8-00

அன்பின் சிதறல்—*‘கோமகள்’* 3-50

தேவதாசி—*சரசுவதி ராம்நாத்* 3-50

தும்பைப்பூ—*நாரண துரைக்கண்ணன் (ஜீவா)* 3-00

பொன்விளையும் நாடு—*லட்சுமி சுப்பிரமணியம்* 7–00

நிழற்கோலம்—*ராஜம் கிருஷ்ணன்* 7-00

தாழ்வுற்ற நெஞ்சம்—*கே. ஜயலட்சுமி* 4-00

அமைதி எங்கே?—*பூவாளூர் சுந்தரராமன்* 3-00

பாவைப் பரிசு—*மா. ரா. இளங்கோவன்* 2-50

## குறுநாவல்கள்

| | |
|---|---|
| கமலம்—தி. ஜானகிராமன் | 2-50 |
| மின்னல்—'மாயாவி' | 3-00 |
| மனக்கண்—நா. பார்த்தசாரதி | 3-00 |
| சிவப்பு விளக்கு—'ஆர்வி' | 3-00 |
| அன்னை மூவர்—கோமதி சுப்பிரமணியன் | 2-00 |

## சிறுகதைகள்

| | |
|---|---|
| சகோதரர் அன்றோ?—அகிலன் | 2-50 |
| கதைக்கனிகள் 1963—(25 சிறுகதைகள் தொகுப்பு) | 5-00 |
| கதைக்கனிகள் 1964—(20-க்கு மேற்பட்ட சிறுகதைத் தொகுப்பு) | 5-00 |
| நாட்டியம்—க. சோமசுந்தரம் | 3-00 |

## நாடகங்கள்

| | |
|---|---|
| இருவர் கண்டனர்—ஆர். சூடாமணி | 3-00 |
| கௌரவ மாப்பிள்ளை—பூர்ணம் விஸ்வநாதன் | 2-50 |
| கரட்சி கண்காட்சியே—டி. என். சுகி சுப்பிரமணியன் | 3-00 |

## சிறுவர் இலக்கியம்

| | |
|---|---|
| சந்திரனுக்குச் செல்வோம்—கல்வி கோபாலகிருஷ்ணன் | 2-00 |
| மகன் புகழ்—'பூவண்ணன்' | 3-75 |
| சின்னஞ்சிறு வயதில் காந்தித் தாத்தா (பரிசுப்பதிப்பு) | 1-00 |
| பி. இ. பாலகிருஷ்ணன் (மலிவுப்பதிப்பு) | 0-50 |
| சுண்டுவிரல் சீமா—கல்வி கோபாலகிருஷ்ணன் | 5-00 |
| பரமன் அருள்—தெ. சி. தெய்வசிகாமணி | 4-00 |